# சங்க இலக்கியப் பழைய உரைகள் - போக்கும் திறனும்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**லெ.தீபா**
(பதிவு எண் : 0601)

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா


திசம்பர் - 2019

**முனைவர் சு.இராசாராம்,**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்:

**நெறியாளர் சான்றிதழ்**

**"சங்க இலக்கியப் பழைய உரைகள் - போக்கும் திறனும்"** என்னும் தலைப்பில் திருமதி லெ.தீபா அவர்கள் முழுநேர முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அவர் அழகப்பா பல்கலைக்கழகத்தில் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக இதற்கு முன் வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் சு.இராசாராம்)**

நெறியாளர்

**லெ.தீபா** (பதிவு எண் : 0601)
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-3.

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியப் பழைய உரைகள் - போக்கும் திறனும்"** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(லெ.தீபா)**

ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம்

**முனைவர் சு.இராசாராம்,**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

**“சங்க இலக்கியப் பழைய உரைகள் - போக்கும் திறனும்”** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்கு ஆய்வு செய்ய வாய்ப்பாக அமைந்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் வள்ளல் அழகப்பருக்கும், இவ்வாய்விற்கு அனுமதி அளித்த, துறைத்தலைவர் முனைவர் மு.பாண்டி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்விற்குத் தக்கதோர் வழிகாட்டியாக அமைந்து ஆய்வுத் தொடக்கத்திலிருந்து இறுதிவரை அனைத்து நிலைகளிலும் அறிவுரைகளோடு அறவுரைகள் பல கூறி ஆய்வேடு செம்மையுற அமையப் பல்லாற்றானும் நல்லுதவி புரிந்து இன்முகத்துடன் என்னை நெறிப்படுத்திய எனது ஆய்வு நெறியாளர் பேராசிரியர் முனைவர் சு.இராசாராம் அவர்களுக்கு எஞ்ஞான்றும் நன்றியைத் தெரிவிப்பதற்குக் கடப்பாடுடையேன்.

ஆய்வு தொடர்பான செய்திகளையும் நூல்களையும் தந்துதவிய பேராசிரியர் சே.செந்தமிழ்ப்பாவை அம்மா அவர்களுக்கு உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவந்து என்னை அவையத்து முந்தி இருக்கச் செய்த எனது பெற்றோர் தெய்வத்திரு மு.லெட்சுமணன், லெ.சித்திரமுத்து அவர்களுக்கும் அன்பிற்கினிய சகோதர, சகோதரிகளுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேட்டினை நன்முறையில் நிறைவு செய்யப் பல்லாற்றானும் உதவிய எனது கணவர் மு.பாலகுரு அவர்களுக்கும் அன்புச் சகோதரர்கள் முனைவர் ந.இராசேந்திரன், முனைவர் மா.பரமசிவன், முனைவர் மு.முனீஸ்மூர்த்தி, முனைவர் மா.லோகேஸ்வரன், க.நாகநாதன்(நாகராசு), முனைவர் பா.கவிதா அவர்களுக்கும்

முனைவர்பட்ட ஆய்வாளர்கள் கா.சுபா, மா.லாவண்யா அவர்களுக்கும் ஆய்விற்குத் தேவையான நூல்களை அளித்த புத்தகத் தாத்தா முருகேசன் அவர்களுக்கும் என்றென்றும் என் நன்றிகள் உரியன.

ஆய்வுத் தரவுகளைத் திரட்டுவதற்கு உதவி புரிந்த அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகம், மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகம், சென்னை பல்கலைக்கழகம் மற்றும் கன்னிமாரா நூலகம், உ.வே.சா. நூல்நிலையம், பாகனேரி காசிவிசுவநாத செட்டியார் நூலகம், காரைக்குடி கிளை நூலகம், திருப்பத்தூர் கிளை நூலகம் ஆகிய நூலகங்களுக்கும் நூலக அலுவலர்களுக்கும் என் நன்றி உரியன.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| அகம். | - | அகத்திணையியல் |
| உ.ஆ | - | உரை ஆசிரியர் |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதையர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கற். | - | கற்பியல் |
| குறள். | - | திருக்குறள் |
| செய். | - | செய்யுளியல் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச். | - | நச்சினார்க்கினியர் |
| நூ. | - | நூற்பா |
| ப.ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பழைய. | - | பழையவுரை |
| புறத். | - | புறத்திணையியல் |

| | | |
|---|---|---|
| புறநா. | - | புறநானூறு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மேலது | - | மேலே குறிப்பிடப்பட்டது |

## பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| | விவரம்<br>8. பதிற்றுப்பத்தில் பயன் கூறுதல் - அட்டவணை<br>9. ஐங்குறுநூற்றில் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல் எண்களுக்கான அட்டவணை<br>10. ஐங்குறுநூற்றில் பழையவுரை இடம்பெறாத பாடல்களின் எண்கள் | |

# முன்னுரை

பழங்காலத் தமிழர்களின் பண்பாட்டு நாகரிகங்களையும் வாழ்க்கை வரலாற்றையும் விளக்குவன சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஆகும். இவை இருவேறுபட்ட பொருள்களாகப் பாடப்பெற்றுள்ளன. எட்டுத்தொகையில் நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலிய ஐந்தும் அகப்பாடல் நூல்களாகவும் புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இரண்டும் புறப்பாடல் நூல்களாகவும் பரிபாடல் அகமும் புறமும் கலந்த நூலாகவும் விளங்குகின்றன. பத்துப்பாட்டில் ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும், மதுரைக்காஞ்சி ஒன்றுமாகச் சேர்த்து ஆறு நூல்கள் புறம் சார்ந்தனவாகத் திகழ்கின்றன. மற்ற நான்கு நூல்களில் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, அகம் சார்ந்தனவாகவும் பட்டினப்பாலை, நெடுநல்வாடை அகமும் புறமும் கலந்த நூலாகவும் உள்ளன. இவ்வகையான இலக்கியங்களுக்கு கி.பி.9-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.16-ஆம் நூற்றாண்டு வரை மிகுதியான உரைநூல்கள் தோன்றியுள்ளன. அக்காலகட்டத்தில்தான் எட்டுத்தொகையில் அகம் சார்ந்த ஐங்குறுநூறு, அகநானூறு என்ற இரண்டு நூல்களுக்கும் புறம் சார்ந்த புறநானூறு, பதிற்றுப்பத்து என்ற இரண்டு நூல்களுக்கும் பழையவுரைகள் தோன்றியிருக்க வேண்டும். அவ்வகையில் சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளின் போக்கையும் திறனையும் ஆராயும் விதமாக இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

‘சங்க இலக்கியப் பழையவுரைகள் - போக்கும் திறனும்’ என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

- சங்க இலக்கியங்களுக்குக் கிடைக்கப்பெற்றுள்ள பழையவுரைகளின் பதிப்பு வரலாற்றைக் கால அடிப்படையில் ஆராய்வது.
- பழையவுரைகளில் காணப்படும் போக்கை ஆராய்ந்து நிறுவுவது.
- பழையவுரையாசிரியரின் உரைத்திறனை அறிவது.

- இப்பழையவுரைதான் முன்னர் தோன்றிய உரைகளுக்கெல்லாம் ஆதாரமாய் அமைந்தது என்று ஆராய்ந்து அறிவது முதலிய நோக்கங்களில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பெறுகிறது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கிய எட்டுத்தொகையில் அகம் சார்ந்த ஐங்குறுநூறு, அகநானூறு என்னும் இரண்டு நூல்களுக்கும் புறம் சார்ந்த புறநானூறு, பதிற்றுப்பத்து என்னும் இரண்டு நூல்களுக்கும் தோன்றியுள்ள பழையவுரைகள் இவ்வாய்வின் எல்லையாகும்.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியங்களில் உரைகள் பற்றிய ஆய்வுகள் இன்றளவும் நடந்து கொண்டிருக்கின்றன. அவ்வகையில் சங்க இலக்கியப் பழைய உரைகள் போக்கும் திறனும் என்னும் இவ்வாய்விற்கு முன்னோடிகளாக, மு.வை.அரவிந்தனின் உரையாசிரியர்கள் என்ற நூலும், இரா.மோகன், ந.சொக்கலிங்கம் ஆகியோரின் உரைமரபுகள் என்ற நூலும், அ.சதீஷ் எழுதிய சங்க இலக்கிய உரைகள் என்ற நூலும் ஆய்வு முன்னோடிகளாக அமைகின்றன.

## ஆய்வுக் கருதுகோள்

சங்க இலக்கியத்திற்கு இடைக்காலத்தில் தோன்றிய உரைகளுள் பெயர் தெரியாப் பழைய உரைகள் நோக்கிலும் போக்கிலும் தனித்தன்மை பெற்று விளங்குகின்றன என்பது இவ்ஆய்வின் கருதுகோளாகும்.

## முதன்மை ஆதாரங்கள்

எட்டுத்தொகையில் அகத்திணை சார்ந்த ஐங்குறுநூறு, அகநானூறு எனும் நூல்களின் பழையவுரைகளும் புறத்திணை சார்ந்த புறநானூறு, பதிற்றுப்பத்து எனும் நூல்களின் பழையவுரைகளும் இவ்வாய்விற்கு முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

## துணைமை ஆதாரங்கள்

பழைய உரைகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள், கட்டுரைகள் ஆகியன துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க இலக்கிய எட்டுத்தொகையில் அகத்திணை சார்ந்த ஐங்குறுநூறு, அகநானூறு என்னும் நூல்களுக்கும் புறத்திணை சார்ந்த புறநானூறு, பதிற்றுப்பத்து என்னும் நூல்களுக்கும் உரையாசிரியரின் பெயரறியப்படாத உரைகள் காணப்படுகின்றன. இவ்வுரைகள் பழையவுரைகள் என்று அழைக்கப்படுகின்றன. இவ்வுரைகளில் உரையாசியர்கள் கொண்டுள்ள உரையின் தன்மையை விளக்கும் விதமாக விளக்கவியல் அணுகுமுறையும், அவை எழுந்த காலகட்டத்தை வரையறை செய்யும் விதமாக வரலாற்றியல் அணுகுமுறையும், இரண்டு உரைகளை ஒப்பிட்டுக் கூறும் ஒப்பீட்டியல் அணுகுமுறையும், உரைகளைத் தொகுத்தும் வகுத்தும் காண்பதால் பகுப்பாய்வு அணுகுமுறையும் இவ்ஆய்வில் பின்பற்றப்பெற்றுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டமைகின்றது. அவை பின்வருமாறு,

1. எட்டுத்தொகைப் பழையவுரைகள் பதிப்பு வரலாறும் உரை அமைப்பும்
2. புறநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்
3. பதிற்றுப்பத்துப் பழையவுரைப் போக்கும் திறனும்
4. ஐங்குறுநூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்
5. அகநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்

**இயல் விளக்கங்கள்**

**இயல் ஒன்று**

**“எட்டுத்தொகைப் பழையவுரைகள் பதிப்பு வரலாறும் உரை அமைப்பும்”** என்னும் முதலாம் இயலில், சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கிற்கும்

பழையவுரை கிடைக்கப்பெற்றமை சுட்டப்பெற்றுள்ளன. இவற்றுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு என்ற மூன்று நூல்களையும் பதிப்பித்தவர் உ.வே.சாமிநாதையர் என்பதும் அகநானூற்றைப் பதிப்பித்தவர் வே.இராஜகோபாலையங்கார் என்பதும் இடம்பெற்றுள்ளன. புறநானூற்றின் முதற்பதிப்பை 1894 ஆம் ஆண்டும் பதிற்றுப்பத்தை 1904 ஆம் ஆண்டும் ஐங்குறுநூற்றின் முதற்பதிப்பை 1903 ஆம் ஆண்டும் உ.வே.சா., பதிப்பித்து வெளியிட்டுள்ளமையும் அகநானூற்றின் முதற்பதிப்பை 1918 ஆம் ஆண்டு இராசகோபாலையங்கார் வெளியிட்டுள்ளமையும் விளக்கப்பெற்றுள்ளன. புறத்திணை நூல்களான புறநானூறு 266 பாடல்களுக்கான பழைய உரையுடனும் பதிற்றுப்பத்து கிடைக்கப்பெற்ற எட்டுப்பத்துக்களுக்கான பழைய உரையுடனும் அகத்திணை நூல்களான ஐங்குறுநூறு 197 பாடல்களுக்கான பழைய உரையுடனும் அகநானூறு 90 பாடல்களுக்கான பழைய உரையுடனும் பதிப்பிக்கப்பட்டுள்ளமை ஆராயப்பட்டுள்ளன. புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு நூல்களுக்கும் அமைந்த பழையவுரைப் பதிப்பு முகவுரை அமைப்பு, நூலமைப்பு, உரை அமைப்பு, ஆராய்ச்சிக்குக் கிடைக்கப்பெற்ற கையெழுத்துப் பிரதிகள், மேற்கோள் நூல்கள், சுவடிகளின் தன்மை, பழையவுரை அமைப்பு, உரையின் காலம் போன்றவைகளின் விவரங்கள் சுட்டப்பட்டு ஆராயப்பெற்றுள்ளன.

**இயல் இரண்டு**

**'புறநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்'** என்னும் இரண்டாம் இயலில், பழையவுரையாசிரியர் புறநானூற்றுப் பாடல்களின் துறைகளை விளக்கியுள்ளமை, உரைகளில் வழக்குச் சொற்கள், மரபு சொற்கள் இடம்பெற்றுள்ளமை ஆகியன விளக்கியுரைக்கப்பட்டுள்ளன. திருக்குறள், நாலடியார் ஆகிய நூல்களில் உள்ள பழஞ்செய்யுட் பகுதிகளைத் தம் உரையிடையே உரைநடையாக அமைத்தல், பாடலில் கூறப்பட்ட செய்திகளைக் கொண்டு இவற்றால் இன்னவை பெறப்பட்டன என்று வேறு சிலவற்றைக் கூறுதல், புதிதாகச் சொற்களைப் பெய்துரைத்தல், சொற்களை மாறிக் கூட்டிரைத்தல், தேவையான இடங்களில் அதன் காரணங்களும் ஆராயப்பட்டுள்ளன. வரலாற்று உண்மைகளை விளக்குதல், இன்னாத குறிப்புகளை விளக்குதல், குறிப்பு மொழி, குறிப்புப்பொருள் விளக்குதல், பயன் நினைவுரைத்தல், துறைப்பொருத்தம் கூறுதல், அணிநயம் கூறுதல், உரைநயம் சுட்டல், அரிய கருத்துக்களை விளக்குதல் என அனைத்து உரைத்திறன்களும் ஆராயப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

**‘பதிற்றுப்பத்துப் பழையவுரைப் போக்கும் திறனும்’** என்னும் மூன்றாம் இயலில், பாடல் முழுவதும் வெவ்வேறு அடிகளில் அமைந்துள்ள சொற்களைக் கொண்டுகூட்டி சொல்முடிவு, பொருள் முடிபு கூறுதல் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. பாடல் தலைப்பினை விளக்குதல், பிறநூல் மேற்கோள் காட்டல், துறை, வண்ணம், தூக்கு விளக்கம் தருதல், பாடலின் பயன் கூறுதலில் மன்னனின் போர்ச்சிறப்பு, நாடுகாத்தற் சிறப்பு, செல்வச் சிறப்பு, அவனது குணங்களின் சிறப்பு கூறல் போன்றவை விளக்கிக் கூறப்பட்டுள்ளன. உரையின் இடையிடையே இலக்கணம் கூறி விளக்குதல், அரிய சொற்களுக்குச் சொற்பொருள் விளக்கம் தருதல், பிறவுரையும் மறுப்புரையும் கூறுதல், தொடர் விளக்கம் தருதல், இசை அறிவு, சொல் வருவித்துப் பொருள் கூறுதல், மாறிக் கூட்டுதல், சொல் வழக்காறு ஆகியவை விளக்கியுரைக்கப்பட்டுள்ளன.

**இயல் நான்கு**

**‘ஐங்குறுநூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்’** என்னும் நான்காம் இயலில், பழையவுரையின் அமைப்பு, பழையவுரை இடம்பெற்ற பாடல்களின் எண்கள், பழையவுரை இடம்பெறாத பாடல்களின் எண்கள் ஆகியவை இடம்பெற்றுள்ளன. இந்நூலுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளில் விரிவான உரை, நடுநிலையான உரை, ஓரிரு வரியிலான உரை, வாக்கிய உரை, சிதைந்த உரை எனத் தனித்தனியே ஆராயப்பட்டுள்ளன. இரு உரைகளுக்கிடையேயான வேறுபாடு, உள்ளுறை, இறைச்சி, பிறநூற் கருத்துக்களை எடுத்தாளுதல், இலக்கணக் குறிப்புத் தருதல், இலக்கண உத்திகள் மூலம் திணை வகுத்தல் ஆகியவை விளக்கப்பெற்றுள்ளன. பாடலின் தலைப்புக்கான பெயர்ப் பொருத்தம் கூறல், பாடல்களின் பயன் கூறுதல், சொற்களுக்குச் சிறப்பு விளக்கம் தருதல், சொல்முடிபு, பொருள் முடிபு கூறுதல், வேறுபாடமும் வேறு உரையும் கூறுதல், கருத்துரைத்தல் எனப் பழையவுரையாசிரியரின் உரைத்திறன்கள் ஆராயப்பெற்றுள்ளன.

**இயல் ஐந்து**

**‘அகநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்’** என்னும் ஐந்தாம் இயலில், அகநானூற்றின் தொகுப்பு முறை, உள்ளுறை, இறைச்சி ஆகியவை விளக்கப்பெற்றுள்ளன. பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு விளக்கம் தருதல், வெவ்வேறு அடிகளில் காணப்படும் சொற்களைத் தொடர்புபடுத்தி சொல்முடிபு, பொருள்முடிபு காணும்முறை குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. பிற நூற்கருத்துக்களைப் பயன்படுத்தல், மரபுகள், பழமரபுக் கதை கூறல், இடம் சுட்டல், இலக்கணக் குறிப்புத் தருதல் ஆகியவை விளக்கப்பெற்றுள்ளன. பழைய உரையாசிரியரின் வடமொழி அறிவு, இசை அறிவு, இயற்கை அறிவு ஆகியனவும் ஆராயப்பெற்றுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த மெய்மைகள் முடிவுரையாகத் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆய்வுக்குத் துணைநின்ற நூல்கள் துணைநூற்பட்டியலில் அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றின் பழையவுரைப் பதிப்பு முகப்புப் பக்கங்களும், சங்க இலக்கியங்களைப் பழைய உரையுடன் பதிப்பித்தவர்களின் ஒளிப்படங்களும் சங்க இலக்கிய முதற்பதிப்புகள் விவரமும், சங்க இலக்கியப் பழையவுரைப் பதிப்புகள் விவரமும், பதிற்றுப்பத்தில் பயன் கூறுதல் அட்டவணையும், ஐங்குறுநூற்றில் பழைய உரை இடம் பெற்றுள்ள பாடல் எண்களுக்கான அட்டவணையும், பழைய உரைகள் இடம் பெறாத பாடல்களின் எண்களும் பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ளன.

# இயல் - ஒன்று

## எட்டுத்தொகைப் பழையவுரைகள் பதிப்பு வரலாறும் உரை அமைப்பும்

சங்க இலக்கிய எட்டுத்தொகையில் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு நூல்களுக்கும் பழைய உரைகள் காணப்படுகின்றன. இவ்வுரைகளை இயற்றியவர்கள் யாரென அறிந்து கொள்வதற்குரிய சான்றுகள் உரைகளின் எவ்விடத்திலும் இடம்பெறவில்லை. இவற்றைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்கள் மூலநூலுடன் பாடல்களின் அடியில் பழைய உரை எனப் பெயரிட்டுப் பதிப்பித்துள்ளனர். இதனை உ.வே.சாவின் சங்க இலக்கியங்களுக்கான பழைய உரைப் பதிப்புகள் நன்குணர்த்தும். பழையவுரை மிகச் சுருக்கமாக எழுதப்பட்டிருப்பினும் பிற்காலத்தில் உரைகள் தோன்றுவதற்கு இவ்வுரைகளே காரணமாக அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனைத் தமிழ் நூல்களுக்குப் பழைய உரை தோன்றிய காலம் முதல் இக்காலம் வரை தோன்றிய உரைகள் புலப்படுத்தும். அவ்வகையில், புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு என்ற நான்கு நூல்களுக்கும் கிடைக்கப்பெற்ற எட்டுத்தொகைப் பழைய உரைகளின் பதிப்பு வரலாற்றையும் உரை அமைப்பையும் தொகுத்து ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### உரையின் காலம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் உரைகளின் தோற்றம் மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். கி.பி.9-ஆம் நூற்றாண்டு முதல் 16-ஆம் நூற்றாண்டு வரையிலான காலங்களில் தமிழ் இலக்கிய, இலக்கண உரைகள் மிகுதியாகத் தோன்றியுள்ளன. இருப்பினும் கி.பி.11-ஆம் நூற்றாண்டு முதல் 14-ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்தை ‘உரையாசிரியர்களின் காலம்’ என்றே தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர்கள் சுட்டுகின்றனர். இக்காலத்தில் பெரும்பாலான மூல நூல்களுக்கு உரைகள் தோன்றியுள்ளன. இத்தகைய உரைகள் தொடக்க காலம் முதலே தோன்றினாலும் அவற்றின் வளர்ச்சிப் போக்கைக் கொண்டே உரைநூற்காலம் என்பதை வரையறை செய்கின்றனர். இதன் சிறப்பை வ.சுப.மாணிக்கனார், “இடைக்காலம் என்பது உரைக்காலம் அன்று; தொன்னூல்களை உரை என்னும் கயிற்றால் பிணித்த உயிர்க்காலம்”[1] என்று குறிப்பிடுகின்றார்.

**உரை குறித்த தமிழறிஞர்களின் கருத்துக்கள்**

தமிழ் நாட்டில் உரையும் பாட்டும் ஒன்றோடொன்று கலந்தே வந்தன. மக்கள் இரண்டையும் போற்றி வந்தனர். அவ்விரண்டும் மக்களது செவிகளால் பயிலப்பட்டன. அவ்வாறு பயிலாத இரண்டையும் கேட்டு அறியாத செவிகள் இருந்தும் பயனில்லை எனக் கூறினர். இதனை,

> "பாட்டும் உரையும் பயிலா தனஇரண்டு
> ஓட்டைச் செவியும் உள"[2]

என்னும் பழம்பாடல் நன்கு உணர்த்தும். உரை என்பதற்கு ஒவ்வொரு நூலும் ஒவ்வொரு விதமான விளக்கங்களைக் குறிக்கின்றன. அவ்விளக்கங்கள் உரை குறித்த முழுமையான புரிதலை ஏற்படுத்தக் கூடியவையாக இருக்கின்றன. இதனைத் தெளிவுபடுத்தும் வகையில், "உரைத்தல், உரைப்பது என்பதிலிருந்தே உரைநடை பிறக்கிறது. உரைப்பதிலிருந்தே கதை என்பதும் கூறப்படுகிறது. எனவே 'உரை' என்பதற்கு கதை (tale), உரைநடை (prose) என்ற இருபொருளும் ஏற்புடையதாகிறது. முன்பு செய்யுளுக்கு இடையிடையே உரை விரவி வந்தது; செய்யுளுக்குப் புறம்பாய்த் தனியே அதற்கு உரையாய் வந்ததும் இருந்தது. 'உள்நின்று அகன்ற உரையொடு பொருந்தி' (1422), 'உரைபடுநூல் தாம்' (1593) என்பன நூலுக்கு உரை கூறலைப் புலப்படுத்தும். படைத்து மொழியும் கதைகளும் உட்பொருளோடு கூடிய வேடிக்கைக் கதைகளும் உரைக்கப்பட்டதால் உரையெனப்பட்டன"[3] என்று தமிழண்ணலின் விளக்கம் அமைகிறது. உரைநடை வகையைத் தொல்காப்பியர்,

> "பாட்டிடை வைத்தக் குறிப்பினானும்
> பாவின்று எழுந்த கிளவியானும்
> பொருளொடு புணராப் பொய்மொழி யானும்
> பொருளொடு புணர்ந்த நகைமொழியானும்
> உரைவகை நடையே நான்கு எனமொழிப"[4]

என நான்காகக் குறிப்பிடுகின்றார். தமிழ் இலக்கிய இலக்கண நூல்களுக்கான உரையின் தேவையை, “நூலாசிரியரின் அரிய கருத்துக்களையெல்லாம் உரையாளர் உதவியாலேயே உலகம் உணர்ந்து இன்புறுகின்றது. பேருபகாரிகளாகிய உரையாசிரியர்களின் உதவி இல்லையாயின், பண்டை உயர்நூல்களாம் கருவூலங்களில் தொகுத்து வைத்த விலை வரம்பில்லாப் பொருண்மணிக் குவியல்களை யாம் எங்ஙனம் பெறுதல் கூடும்”[5] என்று பண்டிதமணி கதிரேசச் செட்டியாரின் கருத்து அமைகின்றது. இவ்வாறு உரை குறித்த பல்வேறு கருத்துக்களைத் தமிழ் அறிஞர்கள் பதிவு செய்கின்றனர்.

**பழைய உரை - பதிப்புப் பின்புலம்**

சங்க இலக்கியங்களுள் எட்டுத்தொகை நூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு நூல்களுக்கு மட்டும் பழையவுரைகள் உள்ளன. இப்பழைய உரைகளுள் புறநானூறு 1894-ஆம் ஆண்டும், ஐங்குறுநூறு 1903-ஆம் ஆண்டும், பதிற்றுப்பத்து 1904-ஆம் ஆண்டும், அகநானூறு 1918-ஆம் ஆண்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து ஆகிய மூன்று நூல்களும் உ.வே.சாமிநாதையரால் பதிப்பிக்கப்பெற்றுள்ளன. அகநானூறு என்ற நூல் மட்டும் இராசகோபாலையங்காரால் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. “பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமாகிய நூல்களில் டாக்டர் உ.வே.சா. அவர்களின் முதற்பதிப்பு பெற்றவை ஐந்து நூல்களாகும். சங்க இலக்கிய முதற்பதிப்புக் காலக்கட்டத்தில் உ.வே.சா. அவர்களின் சாதனை ஈடு இணையற்றது. சங்க நூல்களின் முதற்பதிப்புப் பணியில் ஈடுபட்ட ஐவரில் ஏனையோர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நூலொடு அமைந்துவிட உ.வே.சா. அவர்கள் தாம் ஒருவராக ஐந்து நூல்களைப் பதிப்பித்துள்ளார். பதிப்புகளின் எண்ணிக்கையில் மட்டுமன்று பதிப்புகளின் தரத்திலும் உ.வே.சா. அவர்களின் தனி முத்திரையைத் தமிழ் அறிஞர் உலகம் நன்கு அறியும்.”[6] இவ்வாறு உ.வே.சாமிநாதையரின் பதிப்புப் பணி சிறப்பிக்கப்படுகிறது.

1918-ஆம் ஆண்டு அகநானூற்றின் முதற்பகுதியான களிற்றியானை நிரை மட்டும் பழையவுரையுடன் வெளிவந்துள்ளது. 1920-ஆம் ஆண்டு இரண்டாம் பகுதியான மணிமிடைப் பவளம் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது. அடுத்ததாக

1923-ஆம் ஆண்டு இரா.இராகவையங்காரால் பரிசோதித்துத் தரப்பட்ட பிரதிகளைப் பழையவுரையுடன் சேர்த்து இராஜகோபாலையங்கார் வெளியிட்டுள்ளார்.

**புறநானூறு – பழையவுரைப் பதிப்பு வரலாறு**

சங்க இலக்கிய எட்டுத்தொகையில் புறநானூறு 1894-ஆம் ஆண்டு முதன்முதலில் பதிப்பிக்கப்பட்டது. இந்நூலின் இரண்டு மூன்றாம் பதிப்புகள் 1923, 1935ஆம் ஆண்டுகளில் வெளிவந்தன. உ.வே.சாமிநாதையரின் குமாரர் கலியாணசுந்தரையர் நான்காம் பதிப்பை 1950 ல் வெளியிட்டார். ஐந்தாம் பதிப்பு 1956ல் கலியாணசுந்தரையரின் குமாரர் க.சுப்பிரமணியன் அவர்களால் வெளியிடப்பட்டது. புறநானூற்றின் முதற்பதிப்பிற் காணப்படாத சில திருத்தங்களும் செய்திகளும் இரண்டாம் பதிப்பில் புதிதாகச் சேர்க்கப்பெற்றுள்ளன. இரண்டாம் பதிப்பைக் காட்டிலும் மூன்றாம் பதிப்பில் பாடினோர் பெயர், அடிக்குறிப்புகள் என்பவற்றில் சில மாறுதல்களும் சில புதிய செய்திகளும் காணப்படும். உரையின் இயல்பென்ற பகுதியொன்று புதியதாக எழுதி மூன்றாம் பதிப்பிற் சேர்க்கப்பெற்றுள்ளது. “சங்க இலக்கியப் பதிப்பில் உ.வே.சா. அவர்களின் கடுமையான உழைப்பை உறிஞ்சியது புறநானூறே ஆகும். ஏறத்தாழ 16 ஓலைச்சுவடிகளை ஒப்பிட்டுப் பார்த்து இ∴தை உ.வே.சா வெளியிட்டார்”[7] என்று இராம.சுப்பிரமணியம் தம்நூலில் குறிப்பிடுகிறார். இக்கருத்தின் தொடர்ச்சியாக “இந்நூலைப் பதிப்பிக்க 8 மூலச்சுவடிகளையும் 13 உரைச்சுவடிகளையும் பயன்படுத்தியுள்ளார். உரைச்சுவடியில் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் அவர்களிடம் இருந்து பெறப்பட்ட ஓலைச்சுவடியில் மட்டும் 266 ஆம் பாடல் வரை உரை உள்ளது. ஏனையவை அதைக்காட்டிலும் குறைச்சுவடிகளே”[8] என்று அ.சதீஷ் தம் நூலில் சுட்டுகின்றார். இந்நூற்குக் கிடைத்த பிரதிகளுள் 127, 128 என்ற இரு பாடல்களின் மூலமோ உரையோ காணப்படவில்லை. இவை உ.வே.சா.வின் புறநானூற்றுப் பழையவுரையுடன் கூடிய பதிப்பு குறித்த ஆராய்ச்சியைப் புலப்படுத்தும்.

**முகப்புப் பக்கம்**

‘எட்டுத்தொகையுள் எட்டாவதாகிய புறநானூறு மூலமும் உரையும்’ என்ற முகப்புப் பக்கத்துடன் அமைந்துள்ளது. இவை கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய உத்தமதானபுரம் வே.சாமிநாதையரால் பல பிரதிருபங்களைக்

கொண்டு சென்னை வெ.நா.ஜுபிலி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டன என்றும் அதன்கீழ் ‘Copyrigt Registered’ விலை-ரூ ச என்றும் அச்சிடப்பெற்றுள்ளது.

**முகவுரை அமைப்பு**

புறநானூற்று முகவுரை அமைந்த பக்கத்தில் ‘உ’ முதலாவதாகவும் ‘கணபதி துணை’ என்பது இரண்டாவதாகவும் இடம்பெற்றுள்ளது. அடுத்ததாக, முகவுரை என்ற அறிமுகத்துடன் புறநானூறென்பது அமிழ்திற் சிறந்த தமிழ் மொழியதனை ஒன்பான் சுவை புணர்த்தன்பால் வளர்த்தருள் நச்சும் பெருமை முச்சங்கத்துள் கடைசங்கப் புலவர்கள் அருளிச் செய்த தொகையுள் ஒன்று என்று புறநானூறு அறிமுகம் செய்யப்பெற்றுள்ளது. எட்டுத்தொகை நூல்களின் பெயர்களும் அவற்றை வகைப்படுத்தும் பழம்பாடலும் இடம்பெற்றுள்ளது. இத்தொகைகளைக் குறிப்பிடும் உ.வே.சா “இவற்றுள் ஒவ்வொன்றும் பலராற் செய்யப்பட்டுத் தொழில் அளவுபாட்டு பொருளென்பனவற்றுள் ஒவ்வொன்றால் தொகுக்கப்பட்டமையின், இவை தொகையென பெயர் பெற்றன வென்பர்” (புறநா.பழைய.முகவு.ப.8) என்று விளக்கம் அளிக்கின்றார். பின்னர் புறநானூறு எட்டுத்தொகை நூல்களை அறிமுகம் செய்யும் பகுதி இடம்பெற்றுள்ளது. அவ்வறிமுகத்தின் இறுதியில் புறநானூற்றுக்கு அங்கமாக நற்றிணை முதலிய ஏழு தொகைகளின் வரலாறுகள் இதுவரையிற் கூறப்பட்டன என்று சுட்டப்பெற்றுள்ளது. அகம் புறம் என்ற இரண்டின் வரையறை, புறநானூறு பற்றிய விரிவான விளக்கம், பழையவுரை பற்றிய செய்திகள், பாடினோரும் பாடப்பட்டோரும் பற்றிய விவரங்கள், திணைகள், துறைகள், விசேடச் செய்திகள், உரையின் இயல்பு ஆகிய பகுதிகள் வகைப்படுத்திக் குறிப்பிடப்பட்டுள்ளன.

**பழையவுரையின் காலம்**

புறநானூற்றுப் பழையவுரையின் காலத்தை அறிய சில குறிப்புகள் கிடைக்கின்றன. இந்நூலின் ஒன்பதாம் பாடலுக்கான உரையில் பழையவுரையாசிரியர் “யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடைமையால், கடற்கு முந்நீர் என்று பெயராயிற்று; அன்றி முன்னீரென்றோதி நிலத்திற்கு முன்னாகிய நீரென்று முரைப்ப” (புறநா.9.பழைய.ப.27) என்று முந்நீர் என்பதன் பெயர்க்காரணத்தைக் குறிப்பிடுகிறார். இவரின் கருத்தை மறுத்துக் கூறும் அடியார்க்குநல்லார், “முந்நீர் - கடல்; ஆகுபெயர்; ஆற்றுநீர் ஊற்று நீர், மேனீரென

இவை யென்பார்க்கு அற்றன்று; ஆற்றுநீர் மேனீராகலானும் இவ்விரண்டு மில்வழி ஊற்றுநீரும் இன்றாமாதலானும் இவற்றை முந்நீரென்றல் பொருந்தியதன்று; முதிய நீரெனின், ''நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும்''(குறள்.17) என்பதனால் அதுவும் மேனீரின்றி அமையாமையின் ஆகாது; ஆனால் முந்நீர்க்குப் பொருள் யாதோவெனின், முச்செய்கையுடைய நீர் முந்நீரென்பது; முச்செய்கையாவன மண்ணைப் படைத்தலும் மண்ணையழித்தலும் மண்ணைக் காத்தலுமாம்''[9] என்று விளக்கம் அளிக்கிறார்.

புறநானூற்றின் 41-ஆம் பாடலின் விசேடவுரையில் 'மனையோட் கெவ்வங் கரக்கும்' என்பது ''ஏவலிளையர் தாய்வயிறு கரிப்ப'' (தமிழ்நெறி விளக்கம், மேற்) என்றதனாற் போலப் பன்மைக் கேற்ப நின்றது'' (புறநா.41.பழைய.ப.107) என்று அமைந்துள்ளது. ஏவலிளையர் எனத் தொடங்கும் அடி, 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்நெறி விளக்கமாகும். இதிலிருந்தும் பழையவுரையாசிரியர் மேற்கோள் காட்டுகிறார்.

''நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்'' (புறநா.189)

என்ற அடிக்கு, 'இடையாமத்தும் நண்பகலும் துயிலானாய்' என்று உரையெழுதி அதன் விசேடவுரையில், ''பகலை ஒரு மாத்திரை யென்றும், கடுமாவை யானை யென்றும், கல்லாத ஒருவனைப் பாகனென்றும் உரைப்பாரும் உளர்'' (புறநா.189.பழைய.ப.345) என்று சுட்டுகிறார் பழையவுரையாசிரியர். இதில் வரும், 'பகலை ஒரு மாத்திரையென்று உரைப்பாரும் உளர்' என்ற விளக்கம் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியரால் சுட்டப்பெற்றுள்ளது. இதனை, ''பகலுந் துஞ்சான்- எல்லாருந் துஞ்சும் அரையிருள் யாமத்தும் ஒரு மாத்திரைப் பொழுதும் துஞ்சாமல்''[10] என்னும் அடியார்க்குநல்லாரின் உரைப்பகுதி நன்குணர்த்தும்.

மேற்கண்ட செய்திகளில் 'முந்நீர்' என்ற சொல்லிற்குப் பழையவுரையாசிரியர் கூறும் கருத்தின் அடிப்படையில் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்குநல்லார் எடுத்தாள்வதால் அவர் காலத்திற்கு முற்பட்ட காலத்தவர் என்பது தெரிகிறது. அடியார்க்குநல்லாரின் காலம் 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி ஆகும்.

புறநானூற்றின் 41-ஆம் பாடலில் 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்நெறி விளக்கச் செய்யுளை மேற்கோள் காட்டுவதால் பழையவுரையாசிரியர் 9-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என்பது தெரிகிறது.

புறநானூற்றின் 189-ஆம் பாடலிலுள்ள ‘பகலுந் துஞ்சான்’ என்ற சொல்லிற்குச் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியரைப் பின்பற்றி உரை கூறியிருக்கின்றார். அரும்பதவுரையாசிரியரின் காலம் 8 அல்லது 9-ஆம் நூற்றாண்டு ஆகும்.

மேற்கண்ட சான்றுகளின்வழி, பழையவுரையாசிரியரின் காலம் 9-ஆம் நூற்றாண்டின் இறுதிக்குப் பின்னும், 12-ஆம் நூற்றாண்டின் இறுதிக்கு முன்புமாகிய காலம் ஆகும் என்பது தெளிவாகிறது.

**புறநானூற்றின் சிறப்பு**

பண்டைக்காலத்தே தமிழகத்தை ஆண்ட முடியுடை வேந்தர், சிற்றரசர், சேனைத்தலைவர், வீரர், கடையெழு வள்ளல்கள் ஆகியோரின் சரித்திரங்களும் கடைச்சங்கப் புலவர்களின் வரலாறுகளும், அவர்களின் செய்யுள் நடை முதலியனவும் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. மேலும் புறநானூற்றில் இதுபோன்று பல்வேறு பொருண்மைகள் அமைந்துள்ளன. இவை அனைத்தையும் ஒருங்கே தொகுத்துச் சுட்டும் வகையில்,

“முன்னா ளிடையே யிந்நா டாண்ட
காவலர் பல்லோர் பாவலர் பல்லோர்
மாசரி தத்தை யாசற விளக்கிச்
சொற்சுவை பொருட்சுவை துவன்றியெஞ் ஞான்றும்
ஒப்புமை யில்லாத் திப்பிய நடையுடைத்
திறப்பா டமைந்தவிப் புறப்பாட் டுக்கள்
தெய்வ வணக்கஞ் செய்யுமி னென்பவும்
அறத்தின் பகுதியை உறத்தெறிப் பனவும்
பாவ வழியை நீவனன் றென்பவும்
இம்மைப் பயனொடு மறுமைப் பயனைச்
செம்மையின் வகுத்துத் தெரிவிப் பனவும்
அந்தண ரியல்பைத் தந்துரைப் பனவும்

அரச நீதியை யுரைசெய் வனவும்

வணிகரியல்பைத் துணிவுறுப் பனவும்

வேளாண் மாக்களின் றாளாண் மையினை

இயம்பு வனவும் வயம்புரி போர்க்கு

முந்துறு மரசரைச் சந்துசெய் வனவும்

ஒற்றுமைப் பயனைச் சொற்றிடு வனவும்

வீரச் சிறப்பை யாரத் தெரிப்பவும்

இல்லற மாகிய நல்லற முரைப்பவும்

துறவற மதனைத் திறவிதிற் றெரிப்பவும்

மிடித்துன் பத்தை யெடுத்துரைப் பனவும்

வண்மையுந் தண்மையுந் முண்மையுந் திண்மையுந்

என்னு மிவற்றைப் பன்னுகின் றனவும்

அளியையு மொழியையுந் தெளிவுறுப் பனவும்

தம்மைப் புரந்தோர் தாமாய்ந் திடவே

புலவர்கள் புலம்பி யலமர றெரிப்பவும்

நட்பின் பயனை நன்கியம் புநவும்

கல்விப் பயனைக் கட்டுரைப் பனவும்

நீர்நிலை பெருக்கென நிகழ்த்து கின்றனவும்

மானந் தன்னைத் தாநன் குரைப்பவும்

இளமையும் யாக்கையும் வளமையு நிலையா

என்றே யிசைத்து நன்றேய்ப் பனவும்

அருளுடை மையினை மருளறத் தெரிப்பவும்

தரமறிந் தொழுகென் றுரனுற விதிப்பவும்

அவாவின் கேடே தவாவின் பென்பவும்

இனியவை கூற னனிநல னென்பவும்

உழவின் பெருமையை யழகுற வுரைப்பவும்

நன்றி யறிக வென்றிசைப் பனவும்

கொடுங்கோன் மையினை விடுங்கோ ளென்பவும்

தவத்தின் பெருமையைத் தவப்பகர் வனவும்

மடியெனும் பிணியைக் கடிமி னென்பவும்

கொலையெனும் பகையைத் தொலைமி னென்பவும்

நல்லோர்ப் புணர்ந்து புல்லோர்த் தணந்து

தாழ்வொன் றின்றி வாழ்மி னென்பவும்

சுற்றம் புரக்கு நற்றிற முரைப்பவும்

கற்பின் றிறத்தைக் கற்பிப் பனவும்

மக்கட் பேற்றின் மாண்புரைப் பனவும்

கணவனை யிழந்த மணமலி கூந்தலார்

தீப்பாய் செய்தி தெரிவிப் பனவும்

கைம்மை விரத வெம்மை விரிப்பவும்

இன்னும் பற்பல பன்னு வனவுமாய்ச்

செப்புந ரெவர்க்கு மெய்ப்பிடை வைப்பாய்

அரும்பெறன் மரபிற் பெரும்பயன் றருமே'' (புறநா.பழைய.முகவு.பக்.9-11)

என உ.வே.சாமிநாதையர் 54 அடிகளைக் கொண்ட வெண்பாவைக் காட்டியுள்ளார். இது புறநானூற்றின் அனைத்துக் கூறுகளையும் தனித்தன்மைகளையும் உள்ளடக்கியதாக உள்ளது.

### புறநானூற்று ஆராய்ச்சியும் பணியும்

உ.வே.சா சீவகசிந்தாமணியை ஆராய்ந்து பதிப்பித்துக் கொண்டிருந்த பொழுது சில விளங்காத மேற்கோள்களுக்குரிய இடத்தைச் சுவடிகளில் தேடினார். அப்பொழுது சில சுவடிகளில் ''கொற்றுறைக் குற்றில'' என்னும் தொடர்மொழி காணப்பட்டது. சீவகசிந்தாமணி கனகமாலையார் இலம்பகத்தில் 309 ஆம் செய்யுளின் உரையில் இத்தொடர்மொழியை நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் காட்டியிருக்கின்றார். எனவே இது ஏதோவொரு பழைய நூலாகத்தான் இருக்க வேண்டுமென்று உ.வே.சாவிற்குத் தோன்றியது. அந்தப் பாடலின் எண்ணைக் கவனிக்கும்பொழுது புறநானூற்றின் 95 வது பாடலடி எனத் தெரிய வந்தது. அப்பொழுது அவருக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. உ.வே.சா., புறநானூற்றை அச்சிடுவதாக நிச்சயம்

செய்தவுடனேயே பதிப்பு முறைகளைப் பற்றி சிந்திக்கலானார். அதற்காகப் பல முயற்சிகளையும் மேற்கொண்டார். அவ்வேளையில் தன்னுடன் சரித்திர ஆசிரியராகப் பணிபுரிந்து வரும் கே.ஆர்.துரைசாமி என்பவரின் கையில் பெரிய ஆங்கிலப் புத்தகமொன்றைக் கண்டார். அப்புத்தகத்தின் பெயரை உ.வே.சா., வினவினார். அவ்ஆசிரியர் ‘பைபிள்’ என்றார். அதற்கு உ.வே.சா., பைபிள் என்றால் சிறியதாகத்தானே இருக்கும் என மீண்டும் கேள்வி எழுப்பினார். இக்கேள்விக்குத் கே.ஆர்.துரைசாமி விளக்கம் அளித்தார். இது பைபிளின் சிறந்த பதிப்பு. இப்பதிப்பில் பைபிளில் உள்ள செய்திகளைத் தொகுத்து வகைப்படுத்தி ஒரே மாதிரியான சொல்லும் கருத்தும் உள்ள பகுதிகளை ஆங்காங்கே சுட்டிப் பதிப்பித்திருக்கின்றனர். ஒவ்வொரு பக்கத்தின் நடுவிலும் இந்த ‘ஒப்புமைப் பகுதி’ இருக்கின்றது. இதனை ஆங்கிலத்தில் ‘கன்கார்டன்ஸ்’ (Concordance) என்று சொல்லுவார்கள் என விளக்கம் அளித்துவிட்டு, அவை இடம்பெற்றிருந்த பக்கங்களையும் சுட்டிக்காட்டினார். இந்த ஒப்புமைப்பகுதி, பைபிளில் பல்வேறு இடங்களில் காணப்படும் செய்திகளையும் சொற்களையும் கண்டறிந்து, அவற்றிலுள்ள பிழைகளைக் களைய உறுதுணையாக அமைந்ததைக் குறிப்பிட்டார். இதனை அறிந்துகொண்ட உ.வே.சா., அகராதி அமைத்துப் புறநானூற்றை ஆராய்ந்தால், ஆராய்ச்சி சுலபமாக அமையும் என எண்ணினார். அவ்வாறே புறநானூற்றிலுள்ள செய்திகளையும் சொற்களையும் அகராதியாகத் தொகுக்கலானார். புறநானூற்றுப் பாடல்களைப் பாடிய புலவர்களின் பெயர்களையும் அகராதியாகத் தொகுத்துக் கொண்டார். இப்புலவர்கள் வேறு நூல்களிலும் பாடல்கள் பாடியிருக்கின்றனர். அவ்அனைத்தையும் படித்தால்தான் புலவர்களின் பாடல் அமைப்பையும், விருப்பமான கருத்துக்களையும், சொல்நடையையும் அறிந்துகொள்ள இயலும் என்று உ.வே.சாவிற்குத் தோன்றியது. எனவே, புலவர்கள் பாடிய பாடல்கள் வேறு எந்த நூல்களில் உள்ளனவென்றுத் தேடிப் படித்துத் தொகுத்தார். சங்க நூல்களின் மரபை அறிவதற்கு அனைத்தையும் ஆராய வேண்டும் எனக் குறிப்பிடும் அவர், ‘‘சங்க நூல்களவ்வளவும் சேர்ந்து ஓர் உடம்பு போன்றவை. அவ்வுடம்பு முழுவதும் ஒரு வகையான நாடி ஓடும். ஆகையால் அவற்றை முற்றப் பயின்றால்தான் அந்த மரபு தெளிவாக விளங்கும். இதை உத்தேசித்து என்னிடமுள்ள எல்லாச் சங்க நூல்களுக்கும் அகராதி எழுதி வைத்துக் கொண்டேன்’’[11] என்று தன்னுடைய எண்ணங்களைப் பதிவு செய்கிறார்.

புறநானூற்றின் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் திணையும் துறையும் பாடினோர் பெயரும் இடம்பெற்றுள்ளன. நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையின் ஓரிடத்தில் ‘‘தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றுக்குத் துறை கூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின், அவர் சூத்திரப் பொருளாகத் துறை கூற வேண்டுமென்றறிக’’[12] என்று எழுதியிருக்கின்றார். இவ்வாறு பிரதிகளிலுள்ள திணை துறைகளையே கொள்ளுதல் நெடுங்காலமாக வழங்கி வந்த வழக்கமாகிவிட்டது. அவை பெரும்பாலும் பன்னிருபடலமென்ற பழைய புறப்பொருள் இலக்கணத்தின்படி அமைந்திருக்கும் என்றும், அந்நூல் கிடைக்கவில்லை என்றும் உ.வே.சா., குறிப்பிடுகின்றார். எனவே, அதன்வழி நூலாகிய புறப்பொருள் வெண்பாமாலை மூலம் திணை துறைகளின் இலக்கணங்களில் பெரும்பான்மையானவற்றைத் தெரிந்து கொண்டதாகச் சுட்டுகின்றார்.

புறநானூற்றில் பாடினோர் பாடப்பட்டோர் பெயரைக் குறிப்பிடும் வாக்கியங்களில் சரித்திரச் செய்திகள் இடம்பெற்றிருந்தன. இவை சங்ககாலச் சரித்திரச் செய்திக்குப் பெரிதும் உதவுபவை ஆகும். அவ்விருவருடைய பெயர்களிலும் பலவகையான பாடபேதங்கள் இருந்தன. அவற்றைத் தனியே தொகுத்து வைத்துக்கொண்டு பிற நூல்களில், அப்பெயர்கள் வந்துள்ள இடங்களை ஆராயத் தொடங்கினார். அதன் விளைவாகப் பல ஐயங்கள் எழத் தொடங்கின. எனவே தனக்கு அறிமுகமான சரித்திர ஆராய்ச்சியில் வல்லவர்களாக இருக்கக் கூடியவர்களுக்குக் கடிதம் எழுதி, அவ்ஐயங்களைத் தீர்த்துக் கொண்டார். இந்நூலில் இடம்பெற்றுள்ள சில அரசர் பெயர்களுக்கு முன் ‘துஞ்சிய’ என்னும் சொல் காணப்படுகின்றது. இச்சொல்லை அடையாகக் கொண்ட காரியாற்றுத் துஞ்சிய மாக்கோதை, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் போன்ற பெயர்கள் இடம்பெற்றுள்ளன. புறநானூறு 34ஆம் பாடலில் கிள்ளி வளவன் என்ற சோழ அரசனை, ஆலத்தூர்க்கிழார் பாடியது. இப்பாடலில்,

‘‘கொண்டன் மாமழை பொலிந்த
நுண்ப.். றுளியினும் வாழிய பலவே’’ (புறநா.34:22-23)

என்று வாழ்த்துகின்றார். பாட்டின் இறுதியில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்க்கிழார் பாடியது என்ற குறிப்பு உள்ளது. இதில் பாட்டு அரசனை வாழ்த்துகிறது. ஆனால் குறிப்பிலோ, ‘துஞ்சிய’ என்ற சொல்

அவ்வரசனின் சிறப்பைக் கூறுவதுபோல் பெயருக்கு முன்பாக அமைந்துள்ளது. இவை பிற்காலத்தில் செய்திகளைத் தொகுத்தவர்கள் எழுதிய குறிப்புகள் ஆகும். இதனை, உ.வே.சா., அறிந்திருக்கவில்லை. எனவே, கனகசபைப்பிள்ளையிடம் கேட்டுத் தெளிவுபடுத்திக் கொண்டார். அதற்குச் சான்றாகக் கனகசபைப்பிள்ளை சிலப்பதிகாரம், தேவாரம் போன்ற நூல்களை எடுத்துக்காட்டினார். இவை அனைத்தும் உ.வே.சாவின் புறநானூற்று ஆராய்ச்சித் திறத்தைப் புலப்படுத்தும்.

**பழையவுரை அமைப்பு**

புறநானூற்றுக்கு 266 பாடல்களுக்கான பழையவுரை ஒன்று கிடைத்துள்ளது. இப்பழையவுரையை உற்றுநோக்கும் பொழுது இதற்கு முன் ஓர் உரை இருந்துள்ளது என்றே எண்ணத் தோன்றுகிறது. புறநானூற்று உரையைப் பற்றிக் குறிப்பிடும் உ.வே.சா. “இந்நூற்குக் கிடைத்த உரை பதப்பொருளை இனிது விளக்கி உரிய இடங்களில் சொற்களை முடித்துக்காட்டி இலக்கணக் குறிப்பையும் திணைதுறைகளையும் ஆங்காங்குள்ள பழமொழிகளையும் அணியையும் சொன்னயம் பொருணயங்களையும் புலப்படுத்துவது; இவ்வுரையில் இக்காலத்து வழங்காத சொற்கள் பலவுள்ளன. அன்றியும், இதன் இடையிடையே சிற்சில வாக்கியங்கள் அவ்விடத்திற்குப் பொருத்தமில்லாதனவாகத் தோற்றும். அவற்றைச் செவ்வை செய்து கொள்ளுதற்கு இப்பொழுது தக்கசாதனம் கிடையாமையாலும் இனி நல்ல பிரதிகள் கிடைப்பின் அவற்றைக் கொண்டு செவ்வை செய்து கொள்ளலாமென்றும் அவற்றை மாற்றாமற் பிரதிகளிலிருந்தவாறே பதிப்பித்தேன். இவ்வுரை இந்நூலின் முதல் இருநூற்றறுபத்தாறு பாடல்களுக்கு மட்டுமே கிடைத்தது; மேலுள்ள பாடல்களுக்கு ஒரு பிரதியிலும் கிடைத்திலது; 244-ஆம் பாடலுக்கு மேற்பட்டுள்ள சிலவற்றின் உரை இடையிடையே சிதைந்து மாறியிருக்கிறது”(புறநா. பழைய.முகவு.ப.12) என்று குறிப்பிடுகிறார்.

**மேற்கோள்**

புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையில் பழைமை வாய்ந்த நூல்களின் பாடல், மேற்கோள்களாகக் காட்டப்பெற்றுள்ளன. அவை தொல்காப்பியம், கலித்தொகை, குறுந்தொகை, சீவகசிந்தாமணி, பெரும்பாணாற்றுப்படை, தமிழ்நெறி விளக்கம் ஆகிய நூல்களாகும். புறநானூற்றின் 41-ஆம் பாடலின்

“புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்
கெவ்வங் கரக்கும் பைதன் மாக்களோடு” (புறநா.41:14-15)

என்ற அடிகளுக்கு, “‘மனையோட் கெவ்வங் கரக்கும்’ என்பது ‘ஏவ லிளை தாய்வயிறு கரிப்ப’ (தமிழ்நெறி விளக்கம், மேற்) என்றாற்போலப் பன்மைக்கேற்ப நின்றது”(புறநா.பழைய.ப.107) என்பதன்வழி பழைமையான நூல்களில் இருந்து பழையவுரையாசிரியர் மேற்கோள் காட்டியுள்ளார் என்பது நோக்கத்தக்கதாகும்.

**ஓலைச்சுவடிகளின் விபரம்**

புறநானூற்றைப் பதிப்பிக்க எண்ணிய உ.வே.சா பல்வேறு இடங்களுக்குச் சென்று சுவடிகள் சேகரிக்கும் பணியில் ஈடுபட்டார். அவ்வாறு கிடைக்கப்பெற்ற சுவடிகளில் மூலப்பிரதிகளும் உரைச்சுவடிகளும் அடங்கும். அவற்றின் விபரங்களைப் புறநானூற்று முகவுரையில் விளக்கிச் சுட்டுவர். இந்நூலுக்குக் கிடைக்கப்பெற்ற மூலம் மட்டும் அமைந்த பிரதிகள் பின்வருமாறு:

**புறநானூற்று மூலப்பிரதிகள்**

| பிரதிக்குரியவர்கள் | பிரதியை உதவி செய்தவர்கள் | பாடல் வரையறை |
|---|---|---|
| (1) திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் | பிரதிக்குரியவர்களே | 1-400 |
| (2) திருத்தணிகைச் சரவணப் பெருமாளையரவர்கள் | யாழ்ப்பாணம் ராவ்பகதூர் சி.வை.தாமோதரம்பிள்ளையவர்கள் | 1-400 |
| (3) யாழ்ப்பாணத்துநல்லூர் | சென்னை பா.வாசுதேவ | 267-369 |

| சதாசிவப்பிள்ளையவர்கள் | முதலியாரவர்கள் | |
|---|---|---|
| (4)யாழ்ப்பாணம் வி.கனகசபைப் பிள்ளையவர்கள் | பிரதிக்குரியவர்களே | 1-369 |
| (5) திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையவர்கள் | திருவனந்தபுரம் பி.சுந்தரம் பிள்ளையவர்கள் | 3-399 |
| (6) மந்தித் தோப்பிலுள்ள ஸ்ரீ சங்கரசுவாமி ஆதினகர்த்தர் மஹந்து ஸ்ரீமத் சங்கர சுப்பிரமணிய தத்த சுவாமிகள் | பிரதிக்குரியவர்களே | 1-400 |
| (7) திருநெல்வேலி ஸ்ரீ கவிராஜ ஈசுவர மூர்த்திப் பிள்ளையவர்கள் | பிரதிக்குரியவர்களே | 1-400 |
| (8) அரியூர் ஸ்ரீ எஸ். சாமிநாதையரவர்கள் | பிரதிக்குரியவர்களே | 1-400 |

புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற உரையுடன் கூடிய பிரதிகள் பின்வருமாறு:

**புறநானூற்று உரைப் பிரதிகள்**

| **பிரதிக்குரியவர்கள்** | **பிரதியை உதவி செய்தவர்கள்** | **பாடல் வரையறை** |
|---|---|---|
| (1)திருவாவடுதுறை ஆதீனத்து சுப்பிரமணிய தேசிகரவர்கள் | பிரதிக்குரியவர்களே | 1-260 |
| (2)மேற்படி ஆதீனத்து அம்பலவான தேசிகரவர்கள் | பிரதிக்குரியவர்களே | 1-107 |
| (3)ஆழ்வார் திருநகரி தாயவலந்தீர்த்த கவிராயரவர்கள் | ஸ்ரீ வைகுண்டம் சுப்புராயலு முதலியாரவர்கள் | 1-261 |
| (4)மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் | பிரதிக்குரியவர்களது பரம்பரையோராகிய அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் | 1-266 |
| (5)மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் | பிரதிக்குரியவர்களது பரம்பரையோராகிய அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் | 1-171 |

| (6)திருநெல்வேலியைச் சார்ந்த வண்ணார்ப்பேட்டை திருப்பாற் கடனாத கவிராயரவர்கள் | யாழ்ப்பாணம் ராவ் பகதூர் சி.வை.தாமோதரம் பிள்ளையவர்கள் | 1-260 |
|---|---|---|
| (8)தென்காசி சுப்பையாப் பிள்ளைவர்கள் [பதவுரையாசிரியர்] | மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயரவர்கள் | 1-57 |
| (9)தென்காசி சுப்பையாப்பிள்ளைவர்கள் [பதவுரையாசிரியர்] | மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயரவர்கள் | 7-48 |
| (10) தூத்துக்குடிக் குமாரசாமிப் பிள்ளையவர்கள் | ஆறுமுகமங்கலம் ஏ.சுந்தரமூர்த்தியாப் பிள்ளையவர்கள் | 1-216 |
| (11) தூத்துக்குடிக் குமாரசாமிப் பிள்ளையவர்கள் | ஆறுமுகமங்கலம் ஏ.சுந்தரமூர்த்தியாப் பிள்ளையவர்கள் | 1-196 |
| (12) மதுரைத் தமிழ்ச்சங்கம் | ஆறுமுகமங்கலம் ஏ.சுந்தரமூர்த்தியாப் பிள்ளையவர்கள் | - |
| (13) யாழ்ப்பாணத்து வண்ணைநகர் ஸ்ரீ சுவாமிநாத பண்டிதர் | ஆறுமுகமங்கலம் ஏ.சுந்தரமூர்த்தியாப் பிள்ளையவர்கள் | - |

இவ்வாறு ஓலைச்சுவடிகள் பற்றிய விபரம் இடம்பெற்றுள்ளது. ‘‘உ.வே.சாமிநாதையருக்கு இவ்வேட்டுப் பிரதிகளை வழங்குவதில் இலங்கை அறிஞர்கள் பெரிதும் உதவியுள்ளனரென்பது தெரிகின்றது. சி.வை.தாமோதரம் பிள்ளை, வி.கனகசபைப் பிள்ளை முதலானோரே முன்வந்து ஏடுகளை ஐயரவர்களுக்குக் கொடுத்துள்ளனர் என்பது தெரியவருகின்றது’’[13] என்று உ.வே.சா அவர்களுக்குக் கிடைத்த ஏட்டுப்பிரதிகள் பற்றி கார்த்திகேசு சிவத்தம்பி கூறுகின்றார். இவ்வேட்டுப் பிரதிகளைப் பெறுவதற்கு உ.வே.சாவின் உழைப்பு அளவிடற்கு அரியது. இத்தகைய அவரின் அரிய பெரும் முயற்சியினை ‘‘ஓலைச்சுவடிகளைக் கறையான்களிடம் இருந்து காத்தது மட்டுமல்ல. அவைகளைத் திரட்டித் திருத்தியும் செம்மைப்படுத்தியும் தற்காலத்தில் நாம்காணும்

புகழ்மிக்க தமிழ் நூல்களை ஆக்கிய பாராட்டிற்குரியவர்கள் டாக்டர் உ.வே.சாமிநாதையரவர்கள்''[14] என அறிவுச்சுடர் பாராட்டுகிறார். இவை அனைத்தும் உ.வே.சா., புறநானூற்று மூலப்பரதிகளையும் உரைப்பிரதிகளையும் தொகுத்தமைக்குச் சான்றாக அமையும்.

**ஓலைச்சுவடிகளின் நிலை**

புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற ஓலைச்சுவடிகள் பல்வேறு நிலைகளில் காணப்பட்டன. அவற்றை ''உரையில்லாத மூலங்கள் எழுத்துஞ்சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுட்டிருந்ததன்றி, இவற்றுள் சில பாடல்களின்பின் திணை எழுதப்படாமலும் சிலவற்றின்பின் இரண்டும் எழுதப்படாமலும் சிலவற்றின்பின் பாடினோர் பெயர் சிதைந்தும் சிலவற்றின்பின் பாடப்பட்டோர் பெயர் சிதைந்தும் சிலவற்றின்பின் இருவர் பெயருமே சிதைந்தும் பாடல்கள் இரண்டிடத்து எழுதப்பட்டு இரண்டெண்களையேற்றும் வேறுவேறிடத்தில் இருத்தற்குரிய இரண்டு பாடல்கள் ஒருங்கெழுதப்பட்டு ஓரெண்ணையேற்றும் சில முதற்பாகங் குறைந்தும் சில இடைப்பாகங் குறைந்தும் சில கடைப்பாகங் குறைந்தும் சில முற்றுமின்றியும் ஒரு பாடலின் அடிகளுள் ஒன்றும் பலவும் வேறு பாடல்களின் அடிகளோடு கலந்து ஓரடியே ஒரு பாட்டுட் சிலவிடத்து வரப்பெற்றும் பொருளுண்மை காணாத வண்ணம் இன்னும் பலவகைப்பட்ட மாறியும் கையெழுத்துப்பிரதிகளில் இருந்தன. இவற்றைப் பரிசோதித்து வருகையில், இந்நூலிலிருந்து வேறு நூல்களினுடைய பழையவுரைகளின் இடையிடையே உரையாசிரியர்களால் பூர்ணமாகவும் சிறிதுசிறிதாகவும் எடுத்துக்காட்டப்பட்டிருந்த உதாரணங்களும், புறத்திரட்டென்னும் தொகைநூலும் சிற்சில பாடல்களில் உள்ள வழுக்களை நீக்கிச் செவ்வை செய்து கொண்டு பொருளுண்மை காணுதற்கும், சிற்சில பாடல்களில் குறைந்த பாகங்களை நிரப்பிக் கொள்ளுதற்கும் பிறழ்ந்து கிடக்கும் சில பாடல்களை ஒழுங்குபடுத்தி வரையறை செய்து கொள்ளுதற்கும் பெருந்துணையாக இருந்தன'' (புறநா.பழைய.முகவு.பக்.14-15) என்று உ.வே.சா புறநானூற்றுச் சுவடிகளின் நிலை குறித்துச் சுட்டுகின்றார். இது உ.வே.சா., சுவடிகள் குறித்த ஆராய்ச்சிப் பணியில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த தன்மையையும், அதனைச் செம்மையாக ஆராய்ந்த போக்கினையும் விளம்புவதாக அமைகின்றது. புறநானூற்று ஓலைச்சுவடிகளின் நிலை குறித்த கருத்துக்கள்

அனைத்தும் உ.வே.சாமிநாதையரின் தெளிவான ஆராய்ச்சிப் போக்கிற்குச் சான்றாக அமையும்.

## பாடினோர் வரலாறு

புறநானூற்றுப் பழைய முகவுரைப் பகுதியில், பாடினோர் வரலாறு என்னும் குறிப்பு காணப்படுகின்றது. இப்பகுதியில் புறநானூற்றுப் பாடல்களைப் பாடியோரின் பெயர்கள் அகரவரிசைப்படி வரிசைப்படுத்தப் பெற்றுள்ளன. அத்துடன் அவர்களின் சிறப்புக்களும், பிற சங்க இலக்கிய நூல்களில் பாடிய பாடல்களின் எண்களும் சுட்டப்பெற்றுள்ளன. புறநானூற்றுப் பாடலைப் பாடியவர்களின் பெயர்களாக, ‘‘அடைநெடுங்கல்வியார், அண்டர்மகன் குருவழுதி, அரிசில்கிழார், அள்ளூர் நன்முல்லையார், ஆடுதுறை மாசாத்தனார், ஆலங்குடி வங்கனார், ஆலத்தூர்கிழார், ஆலியார், ஆவூர்கிழார், ஆவூர்மூலங்கிழார், இடைக்காடனார், இடைக்குன்றூர்க்கிழார், இரும்பிடர்த் தலையார், உலோச்சனார், உறையூர் இளம்பொன் வாணிகனார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஒக்கூர் மாசாத்தனார், ஒக்கூர் மாசாத்தியார், ஒருசிறைப் பெரியனார், ஒரூஉத்தனார், ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், ஓரம்போகியார், ஓரேருழவர், ஔவையார், கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி, கண்ணகனாரார், கணியன் பூங்குன்றன், கபிலர், கயமனார், கருங்குழலாதனார், கருவூர்க்கதப்பிள்ளை, கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார், கல்லாடனார், கழாத்தலையார், கழைதின் யானையார், கள்ளில் ஆத்திரையனார், காக்கைப் பாடினியார் நச்செள்ளையார், காரிக்கிழார், காவட்டனார், காவற்பெண்டு, காவிரிப் பூம்பட்டிணத்துக் காரிக்கண்ணனார், குட்டுவன் கீரனார், குடபுலவியனார், குடவாயிற் கீரத்தனார், குண்டுகட்பாலியாதன், குளம்பாதாயனார், குறமகள் இளவெயினி, குறுங்கோழியூர்க்கிழார், குன்றூர்க்கிழார் மகனார், கூகைக்கோழியார், கூடலூர்க்கிழார், கோடைபாடிய பெரும்பூதனார், கோதமனார், கோப்பெருஞ்சோழன், கோவூர்க்கிழார், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமாரனார், சங்க வருணரென்னும் நாகரிகர், சாத்தந்தையார், சிறுவெண்டேரையார், சேரமான் கணைக்காலிரும்பொறை, சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் நல்லுருத்திரன், சோழன் நலங்கிள்ளி, தண்காற் பூட்கொல்லனார், தாமப்பல் கண்ணனார், தாயங்கண்ணனார், தாயங்கண்ணியார், திருத்தாமனார், துறையூர்

ஓடைக்கிழார், தொடித்தலை விழுத்தண்டினார், தொண்டைமான் இளந்திரையன், நரிவெரூஉத் தலையார், நல்லிறையனார், நன்னாகனார், நெட்டிமையார், நெடுங்கழுத்துப் பரணர், நெடும்பல்லியத்தனார், நொச்சி நியமங்கிழார், பக்குடுக்கை நன்கணியார், பரணர், பாண்டரங் கண்ணனார், பாண்டியன் அறிவுடைநம்பி, பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பாரதம் பாடிய பெருந்தேவனார், பாரிமகளிர், பாலைபாடிய பெருங்கடுங்கோ, பிசிராந்தையார், பிரமனார், புல்லாற்றூர் எயிற்றியனார், புறத்திணை நன்னாகனார், பூங்கணுத்தரையார், பூதபாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு, பெருங்குன்றூர்க்கிழார், பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார், பெருஞ்சித்திரனார், பெருந்தலைச்சாத்தனார், பெரும்பதுமனார், பேய்மகள் இளவெயினி, பேரெயின் முறுவலார், பொத்தியார், பொய்கையார், பொருந்திலிளங்கீரனார், பொன்முடியார், மதுரை அளக்கர் ஞாழலார், மகனார் மள்ளனார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார், மதுரை ஓலைக்கடைக் கண்ணம்புகுந்தாரயத்தனார், மதுரைக் கணக்காயனார், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார், மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார், மதுரைத் தமிழக்கூத்தனார், மதுரை நக்கீரர், மதுரைப் புதனிளநாகனார், மதுரைப் பேராலவாயார், மதுரை மருதனிள நாகனார், மதுரை வேளாசான், மாங்குடிக்கிழார், மாதி மாதிரத்தனார், மார்க்கண்டேயனார், மாற்பித்தியார், மாறோக்கத்து நப்பசலையார், முரஞ்சியூர் முடிநாகராயர், மோசிகீரனார், மோசி சாத்தனார், வடம நெடுந்தத்தனார், வடம வண்ணக்கண் தாமோதரனார், வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார், வண்பரணர், வான்மீகியார், விரிச்சியூர் நன்னாகனார், விரியூர் நக்கனார், வீரை வெளியனார், வெண்ணிக் குயத்தியார், வெள்ளெருக்கிளையார், வெள்ளைக்குடி நாகனார், வெள்ளைமாளர், வெறிபாடிய காமக்கண்ணியார், வேம்பற்றூர்க் குமரனார் என மொத்தம் 148 பெயர்களைச் சுட்டுகிறார். இப்புலவர்கள் பாடிய பாடல்கள் வேறு நூல்களில் இடம்பெற்றிருந்தால் அதனையும் எடுத்துக்காட்டி இருக்கின்றார். அந்தப் பாடல் அடிகளையும் சுட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். புறநானூற்றின் 244, 256, 257, 297, 307, 323, 327, 328, 333, 339, 340, 355, 361 ஆகிய பதின்மூன்று பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் காணப்படவில்லை. இக்குறிப்பையும் உ.வே.சா., பாடினோர் வரலாற்றுப் பகுதியில் சுட்டியுள்ளார்.

**பாடப்பட்டோர் வரலாறு**

புறநானூற்றுக்கு அமைந்த பழைய முகவுரையில், அந்நூலிலுள்ள பாடல்களைப் பாடியோரின் பெயர்களும் சிறப்புக்களும் சுட்டப்பெற்றுள்ளன. அவர்களின் பெயர்கள், ''அகுதை, அதியமான் பொருது வீழ்ந்த எழினி, அதியமான் நெடுமானஞ்சி, அதியமான் நெடுமானஞ்சி மகன் பொகுட்டெழினி, அந்துவஞ்சாத்தன், அந்துவன்கீரன், அம்பர்கிழான் அருவந்தை, அவியன், ஆதனழிசி, ஆதனுங்கன், ஆந்தை, ஆமூர்மல்லன், ஆய், இயக்கன், இருங்கோவேள், இளங்கண்டீரக்கோ, இளங்குமணன், இளந்தத்தன், இளவிச்சிக்கோ, இளவெளிமான், ஈர்ந்தூர்க்கிழான் தோயன்மாறன், எயினன், எவ்வி, எழினி, ஏறைக்கோன், ஏனாதி திருக்கிள்ளி, ஒல்லையூர்க்கிழான் மகன் பெருஞ்சாத்தன், ஓய்மான்நல்லியக்கோடன், ஓய்மான் வில்லியாதன், கடியநெடு வேட்டுவன், கண்டீரக் கோப்பெருநல்லி, கண்ணகி, கந்தன், கபிலர், கரிகால் வளவன், கரும்பனூர்கிழான், காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி, குமணண், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், கொன்கானங்கிழான், கோச்சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை, கோப்பெருஞ்சோழன், சிறுகுடிக்கிழான் பண்ணன், சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறை, சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், சேரமான் கடுங்கோ வாழியாதன், சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெரும்பொறை, சேரமான் குட்டுவன் கோதை, சேரமான் குடக்கோ சேரலிரும்பொறை, சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சேரமான் கோக்கோதை மார்பன், சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி, சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ, சேரமான் பெருஞ்சேரலாதன், சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன், சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, சேரமான் மாரிவெண்கோ, சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை, சேரமான் வஞ்சன், சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பன் கௌணியன் விண்ணத்தாயன், சோழநாட்டுப் பிடவூர்க்கிழான் மகன் பெருஞ்சாத்தன், சோழன் இராஜசூயம்வேட்ட பெருநற்கிள்ளி, சேரமான் இளவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, சோழன் உருவ பஃறேரிளஞ் சேட்சென்னி, சோழன் கரிகாற் பெருவளத்தான், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் செங்கணான், சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி, சோழன் நலங்கிள்ளி, சோழன் நலங்கிள்ளி தம்பிமாவளத்தான்,

சோழன் நெய்தலங்கான இளஞ்சேட்சென்னி, சோழன் கோப்பெருநற்கிள்ளி, சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி, சோழியவேனாதி, திருக்குட்டுவன், தந்துமாறன், தருமபுத்திரன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், தழும்பன், தாமான் தோன்றிக்கோன், தித்தன், தேர்வண் மலையன், தொண்டைமான், நம்பி நெடுஞ்செழியன், நள்ளி, நன்னன், நாஞ்சில் வள்ளுவன், நாலை கிழவன் நாகன், நெடுங்கிள்ளி, நெடுமானஞ்சி, நெடுவேளாதன், பரதவர், பழையன், பாண்டியன் அறிவுடைநம்பி, பாண்டியன் இளவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர்வழுதி, பாண்டியன் கீரஞ்சாத்தன், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பாரி மகளிர், பிசிராந்தையார், பிட்டங்கொற்றன், புல்லி, பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு, பேகன், பொகுட்டெழினி, பொறையாற்றுக்கிழான், மல்லிகிழான் காரியாதி, மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன், மலையமான் மாக்கள், மாங்குடி மருதனார், மாவளத்தான், முக்காவனாட்டு ஆமூர்மல்லன், முதியன், மூவன், மூவேந்தர், யானைகட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, வடிம்பலம்ப நின்ற பாண்டியன், வல்லார்கிழான் பண்ணன், வல்வில் ஓரி, வாட்டாற்றெழினியாதன், விச்சிகோன், வெளிமான், வேங்கை மார்பன், வேள் எவ்வி, வேள் பாரி, வையாவிக் கோப்பெரும்பேகன் என 135 பெயர்களைப் பற்றியும் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்.

### அயல்நாட்டாரும் விரும்பும் நூல்

தமிழ்மொழி பல்வேறு தொன்மைகளை ஒருங்கே பெற்றது. எனவேதான் தமிழ் இலக்கிய இலக்கணங்களை அயல்நாட்டவரும் விரும்பிக் கற்றுக் கொண்டனர். இதற்குச் சான்றாக இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தவரும் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் ஈடுபாடு கொண்டவருமான ஜி.யூ.போப் அவர்களைக் குறிப்பிடலாம். இவர் புறநானுற்றுப் பாடல்களின் மீது பெரும்விருப்பம் கொண்டிருந்தார். இதனைத் தெளிவுபடுத்தும் உ.வே.சா., “காலஞ்சென்ற ஜி.யூ.போப் துரையவர்களுக்குத் தமிழில் அன்பு உண்டாவதற்கு முக்கியக் காரணமாக இருந்தவற்றுள் இப்புறநானூறும் ஒன்றாகும். அவர் இப்புத்தகம் வெளிவந்த காலத்தில் இப்புத்தகத்தைப் பாராட்டி அடிக்கடி எனக்கு எழுதுவதுண்டு. இதிலுள்ள

கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கின்றார். ஒவ்வோர் ஆங்கில வருஷப் பிறப்பன்றும் இந்நூற் செய்யுட்களுள் ஒன்றை மொழிபெயர்த்து எனக்குச் சில வருஷங்கள் வரையில் அனுப்பி வந்தார்'' (புறநா.பழைய.முகவு.ப.14) என்ற இச்செய்தியை புறநானூற்று முகவுரையில் குறிப்பிடுகின்றார். இது அயல்நாட்டினர் தமிழ்மொழி மீது கொண்ட ஈர்ப்பினையும பற்றையும் வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

**திணைகளும் துறைகளும்**

உ.வே.சாவால் பதிப்பிக்கப்பட்ட புறநானூற்றுக்கு அமைந்த பழையவுரைப் பதிப்பில் திணைகளும் துறைகளும் என்ற பகுதி இடம்பெற்றுள்ளது. 'புறநானூறு மூலமும் உரையும்', 'புறநானூறு மூலம்' என்று இருவகையான பதிப்புகளிலும் இப்பகுதியை அவர் அமைத்துள்ளார். குறுந்தொகை, ஐங்குறுநூறு போன்ற அகநூல்களிலும் திணை, துறை ஆகியவை காணப்படினும் அந்நூல்களில் உ.வே.சா., இப்பகுதியை அமைக்கவில்லை. புறநானூற்றில் என்னென்ன திணைகளும் துறைகளும் இடம்பெற்றுள்ளன என்பதை மட்டுமே நான்கு தலைப்புகளில் தந்துள்ளார். அவை, 1. திணைகள் 2. திணை இறந்துபோன பாட்டுக்கள் 3. துறைகள் 4. துறை இறந்துபோன பாட்டுக்கள் என்பவையாகும்.

புறநானூற்றில் தொடர்ச்சியாக வரும் சில பாடல்களுக்குத் திணையும் துறையும் ஒன்றாக அமையும். அவ்வாறு வரும் இடங்களில் 'திணையும் துறையும் அவை, திணை அது, துறை அது' என்று எழுதப்பட்டிருக்கும். திணை துறை தெரியாதவற்றைக் குறிக்க உ.வே.சா. இங்கு 'இறந்துபோன' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். முகவுரையில் வெறும் பட்டியல்களாக இடம்பெறும் இத்திணை, துறைகளுக்கு அரும்பத முதலியவற்றின் அகராதியில் விளக்கம் தந்திருக்கின்றார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**பதிற்றுப்பத்து - பழையவுரைப் பதிப்பு வரலாறு**

உ.வே.சா.வின் சங்க இலக்கியப் பதிப்பு வரிசையில் நான்காவதாக அமைந்தது பதிற்றுப்பத்து ஆகும். இதன் முதற்பதிப்பு 1904 - ஆம் ஆண்டு வெளிவந்தது. அதற்கு அடுத்ததாகப் பதினைந்து ஆண்டுகள் கழித்து இரண்டாம் பதிப்பு 1920 - ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. பதிற்றுப்பத்துப் பழையவுரையின்

பதிப்புச் சிறப்பை, “தமிழ்ப் பெருந்தந்தை மூதறிஞர் உ.வே. சாமிநாதையர் ‘பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும்’ என்ற பெயரால் 1904இல் முதற்பதிப்பை ஆறு ஏடுகள் பார்த்து வெளியிட்டனர். ஐயர்தம் பதிப்புச் செம்மையை ஞாலம் அறியும். அறிஞர்க்கு வழிகாட்டும் முன்னுரை, விளக்கம், மேற்கோள், ஒப்புமைப்பகுதி, அரும்பத அகராதி, பொருளகராதி என்ற பல் கூறுகள் அவர் பதிப்பின் உறுப்புக்கள். ஆதலின் உ.வே.சாவின் பதிற்றுப்பத்துப் பதிப்பு ஏழாம் பதிப்பு, எட்டாம் பதிப்பென நீடித்து வருவதில் வியப்பில்லை”[15] எனத் தன் உள்ளுணர்வை வெளிப்படுத்துகிறார், வ.சுப.மாணிக்கனார். “பதிற்றுப்பத்து மூவேந்தர்களில் ஒரு குடியினரான சேர மன்னர்களைப் பற்றிப் பத்துப் புலவர்களால் பாடப்பட்ட பாடல்களைக் கொண்ட ஒரு தொகைநூலாகும். இந்நூல் முற்பத்தும் இறுதிப் பத்தும் கிடைக்காத நிலையில், ஒரு குறைநூலாக டாக்டர்.உ.வே.சாமிநாதையர் அவர்களால் முதன்முதலில் பனையோலைச் சுவடிகளிலிருந்து அச்சுநூலாக 1904-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது”[16] என்பர் அ.பாண்டுரங்கன்.

**முகப்புப் பக்கம்**

‘எட்டுத்தொகையில் நான்காவதாகிய பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும்’ என்ற முகப்புப் பக்கத்துடன் வெளிவந்துள்ளது. ‘இவை சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய உத்தமதானபுரம் உ.வே.சாமிநாதையரால் பல பிரதிரூபங்களைக் கொண்டு பரிசோதித்து சென்னைப் பட்டணம் வைஜெயந்தி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டன என்றும் தமிழ் வருடமும் அதன் கீழே பதிப்பு வருடமும் விலையும் ஆங்கிலத்தில் ‘Copyrigt Registered’ என்றும் அச்சிடப்பட்டுள்ளது.

**உள்ளடக்கப் பகுதி**

நூலின் இரண்டாவது பக்கத்தில் ‘இப்புத்தகத்தில் அடங்கியவை’ என்ற உள்ளடக்கப் பகுதி காணப்படுகிறது. இதன்கீழே தமிழ் வரிசை எண்களுடன் ‘நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்புகள், முகவுரை, நூலாசிரியர்கள் வரலாறு, உரையிற்கண்ட இலக்கணக் குறிப்பகராதி, பிழையும் திருத்தமும், பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும் பதிற்றுப்பத்துச் செய்யுளகராதி, பதிற்றுப்பத்தின் பிரயோக

விளக்கம் அரும்பத அகராதி முதலியன’ அச்சிடப் பெற்றுள்ளன. ‘நூலாசிரியர் வரலாறு’ என்பதன்கீழ் இரண்டு முதல் ஒன்பது வரையிலான பத்துக்களுக்கும் ஆசிரியர்கள் பெயர்கள் தமிழ் எண்களுடன் சிறிது உள்தள்ளிய நிலையில் அமைகின்றன. இவற்றின் பக்க எண்கள் 1, 2, 3 ….. என்று கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலின் மூன்றாவது பக்கத்தில் பழைய உரைகளில் பயன்படுத்தப்பெற்ற நூல்களின் சுருக்க விளக்கங்கள் ‘இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்புக்கள்’ என்னும் தலைப்பில் அமைகின்றன.

**முகவுரை அமைப்பு**

பதிற்றுப்பத்தின் நான்காவது பக்கத்தில் முகவுரை என்ற பகுதி காணப்படுகின்றது. ‘உ’ முதலாகவும் ‘கணபதி துணை’ என்பதை இரண்டாவதாகவும் கூறி முகவுரை தொடங்கப் பெற்றுள்ளது.

“சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமாசரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே” (பதிற்.பழைய.முகவு.ப.1)

என அகத்தியனை வணங்கித் தொடங்குகிறது. பதிற்றுப்பத்தென்பது தமிழ்மொழியிலுள்ள பழைய இலக்கிய நூல்களுள்ளே நல்லிசைப் புலவர்கருளிச் செய்த சங்கச் செய்யுட்களாகிய எட்டுத்தொகைகளில் நான்காவது ஆகும். இவைபுராதன இலக்கண இலக்கியவுரைகளில் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பெற்ற பெருமை வாய்ந்த நூலாகவும் உள்ளது. இந்நூல் சேர வேந்தர்கள் பதின்மர்கள் மீதும் சங்கப் புலவர்கள் பதின்மர்கள் பாடியதாகும். ஐந்திலக்கணங்களுள்ளே தமிழ்மொழி குறிப்பிடும் பொருளின் பகுதியாகிய புறத்திணைத் துறைகளுக்கு இலக்கியமாக அமைந்துள்ளது என்று பதிற்றுப்பத்து அறிமுகப்படுத்தப் பெற்றுள்ளது.

மேலே எட்டுத்தொகை எனக் குறிப்பிட்ட இடத்தில் நட்சத்திரக் குறியிட்டு அப்பக்கத்தின் அடியில் குறிப்பாக எட்டுத்தொகை நூல்களின் பெயர்கள் கொடுக்கப்

பெற்றுள்ளன. இவற்றின் வரலாற்றை அச்சுப் புத்தக முகவுரையிற் காண்க என்ற செய்தியும் இடம்பெற்றுள்ளது. பின்னர் பதிற்றுப்பத்து என்பதன் பெயர்க்காரணமாக ‘பப்பத்து அகவற்பாக்களுள்ள பத்துப் பகுதிகளால் தொகுக்கப்பட்டமையின் இந்நூல் பதிற்றுப்பத்தென்று பெயர்பெற்றது’ என்று சுட்டப்பெற்றுள்ளது.

பதிற்றுப்பத்தில் தமிழ்நாட்டின் பண்டைக்கால நிலை, சேரர்கள் குறுநில மன்னர்கள் முதலியோருடைய வரலாற்று உண்மைகள் இடம்பெற்றுள்ளன. மேலும் அருமை முதலியனவற்றையும் அறிந்துகொள்ள இயலுகின்றது. சேரநாட்டின் பழைய வழக்கங்கள் சிலவும் இக்காலத்து வழங்காத சில அரும்பதங்களும் மற்றும் பிற அரிய செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

**உரை குறித்த செய்திகள்**

பதிற்றுப்பத்திற்குக் கிடைக்கப்பெற்ற ஓலைச்சுவடிகளைக் குறிப்பிடுகையில் உ.வே.சா., ‘‘கிடைத்த இந்நூற் கையெழுத்துப் பிரதிகளுள் ஒன்றிலேனும் கடவுள் வாழ்த்தும் பத்தாம்பத்தும் காணப்படவில்லை; உள்ள எட்டுப் பத்திலுங்கூடச் சிலசிலவிடத்து மூலங்கள் குறைந்தும் உரைகள் சிதைந்தும் பிறழ்ந்தும் காணப்பட்டன. அந்த விஷயத்தில் நான் செய்யக்கூடியது யாதொன்றுமில்லாமையால், அவை இருந்தவாறே பதிப்பிக்கப்பெற்றன’’ (பதிற்.பழைய.முகவு.ப.1) என்கிறார். பதிற்றுப்பத்தின் எட்டுப்பத்திலும் காணப்படாத பாடல்கள் சில, முகவுரையில் உ.வே.சா., அவர்களால் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது. இப்பாடல்கள் தொல்காப்பியப் பொருளதிகார உரையில் மேற்கோளாக நச்சினார்க்கினியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். அவை,

‘‘இருங்கண் யானையொ டருங்கலந் துறுத்துப்
பணிந்து குறைமொழிவ தல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே இதுவுமது. இது பதிற்றுப்பத்து’’[17]

என்றும்,

‘‘இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து

நிலம்புடையூ வெழுதரும் வலம்படு குஞ்சர
மெரியவிழ்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல விவுளி
கோன்முனைக் கொடியினம் விரவா வல்லோ
டுன்வினை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்
தருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்வேட் டனவே முரசங் கண்ணுற்றுத்
தழுவு மாதிரங் கல்லென வொலிப்பக்
கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப
நெடுமதி னிரைஞாயிற்
கடிமிளைக் குண்டு கிடங்கி
னம்புடை யாரர ணகரப் புடைத்தே
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
யொல்லா மன்னர் நடுங்க
நல்ல மன்றவிவ ணீங்கிய செலவே''[18]

''இலங்குதொடிமருப்பின்'' என்னும் பதிற்றுப்பத்தின் இப்பாடல் உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பாகிய உழிஞையாயினும் பதின்றுலாம் பொன் பரிசிற்பெற்றமையிற் பாடாணாயிற்று. இதனைத் தொல்காப்பியப் பொருளதிகாரம் புறத்திணையியலில் இடம்பெற்றுள்ள 'கொள்ளார் தேயங் குறித்த கொற்றமும்' என்ற நூற்பாவின்வழி அறிந்து கொள்ள இயலும்.

''பேணுதகு சிறப்பிற் பெண்ணியல் பாயினு
மென்னொடு புரையுந ளல்ல
டன்னொடு புரையுநர்த் தானறி குநளே

எனப் பதிற்றுப்பத்தில் வந்தது.''[19] இந்தப் பாடல்கள் முதற்பத்து பத்தாம்பத்தினுள் ஏதாவதொரு பகுதியாக இருக்கலாம் என்றும் இன்ன பகுதியைச் சார்ந்தவையென்றும் உ.வே.சா., தம் முகவுரையில் சுட்டுகிறார். இதேபோன்று தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியலில்,

''எரியெள்ளுவன்ன நிறத்தன் விரியிணர்க்
கொன்றையம் பைந்தா ரகலத்தன் பொன்றா
ரெயிலெரி யூட்டிய வில்லன் பயிலிருட்
காடமர்ந் தாடிய வாட னீடிப்

புறம்புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
வெண்மணி யார்க்கும் விழவின நுண்ணூற்
சிரத்தை யிரட்டும் விரலனிரண் டுருவா
யீரணி பெற்ற வெழிற்றகைய னேரு
மிளம்பிறை சேர்த்த நுதலன் களங்கனி
மாறேற்கும் பண்பின் மறுமிடற்றன் றேறிய
சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட் குயர்கமா வலனே

இது கடவுள் வாழ்த்து"[20] என்று இடம்பெற்றுள்ளது. இப்பாடலும் பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்தாக இருக்கக்கூடுமோ என்று உ.வே.சா. பதிற்றுப்பத்துப் பழைய முகவுரையில் குறிப்பிடுகிறார். மேற்கண்ட நான்கு பாடல்களும் நச்சினார்க்கினியரின் தொல்காப்பியப் பொருளதிகார உரைவழி அறிய இயலுகின்றது. இதனை பதிற்றுப்பத்து முகவுரைப்பகுதி' (தொல்.பொரு.அச்.பக்.கூகூ)' என்று சுட்டிக் காட்டுகின்றது. ஆனால் நச்சினார்க்கினியர் உரை என்பதைக் குறிக்கும் 'நச்' என்பது 'அச்' என அச்சாகியுள்ளது.

**மேற்கோள் நூல்கள்**

தமிழ் இலக்கிய இலக்கண நூல்களுக்கு உரை எழுதும் உரையாசிரியர்கள் பிறநூற் கருத்துக்களைத் தேவையான இடங்களில் மேற்கோள் காட்டுவது உண்டு. அவ்வகையில் பதிற்றுப்பத்துக்கு உரையெழுதிய பழையவுரையாசிரியரும் இம்முறையினைப் பின்பற்றியுள்ளனர். அவை 'திருக்குறள், பதிற்றுப்பத்து, புறநானூறு, மதுரைக்காஞ்சி' ஆகிய நூல்களாகும். இவர் தாம் உரையெழுதும் பதிற்றுப்பத்துப் பாடலுக்கு, அதே நூலிலுள்ள அதனோடு தொடர்புடைய பிறிதொரு பாடல் இருப்பின் அப்பாடலையும் மேற்கோளாகச் சுட்டிச் செல்கின்றார். இத்தகைய மேற்கோள் உரைக்கும் தன்மையால் பழையவுரையாசிரியர் பிற உரையாசிரியர்களிடம் இருந்து மாறுபட்டவராய்த் திகழ்கின்றார்.

**பாடியவர் பாடப்பட்டவர் குறிப்பு**

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் ஒவ்வொரு நூலும் ஒவ்வொரு சிறப்பினைப் பெற்றது. அவற்றுள் புறத்திணை நூலான பதிற்றுப்பத்தும் அடங்கும். இந்நூலின் ஒவ்வொரு பத்துப் பாடலையும் வெவ்வேறு பத்துப் புலவர்கள்

பாடியிருக்கின்றனர். இந்நூலின் முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கவில்லை. ஆதலால் இவ்விரண்டு பத்துக்களையும் பாடியவரும் பாடப்பட்டோரும் யாரெனத் தெரியவில்லை. பதிற்றுப்பத்திற்குக் கிடைக்கக் கூடிய மற்ற எட்டுப் பத்துக்களுக்கும் பாடப்பட்டோர் பாடியவர் என்ற வகையில், "இரண்டாம் பத்து, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியது. மூன்றாம் பத்து, இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடியது. நான்காம் பத்து, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக்காப்பியனார் பாடியது. ஐந்தாம் பத்து, கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடியது. ஆறாம் பத்து, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடியது. ஏழாம் பத்து, செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது. எட்டாம் பத்து, தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை அரிசில்கிழார் பாடியது. ஒன்பதாம் பத்து, குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர்க்கிழார் பாடியது" (பதிற்.பழைய.முகவு.ப.3) என அமைகின்றன. இதன் வரலாற்று விரிவை ஒவ்வொரு பத்திற்கும் இறுதியிலுள்ள பதிகங்களால் அறிந்து கொள்க என்ற செய்தியும் முகவுரையில் சுட்டப்பட்டுள்ளது.

**பழையவுரை அமைப்பு**

பதிற்றுப்பத்து என்னும் நூலின் பழையவுரை அமைப்பை, "இந்நூலின் உரை இன்றியமையாத இடங்களில் பதப்பொருளை இனிது விளக்கி ஆங்காங்குச் சொன்னயம் பொருணயங்களையும் சொன்முடிபுகளையும் உரிய இடங்களில் இலக்கணக் குறிப்புகளையும் நன்கு புலப்படுத்திப் பழைய செய்திகள் சிலவற்றைத் தெரிவித்து ஒவ்வொரு செய்யுளின் பின்னும் அமைந்துள்ள துறை, வண்ணம், தூக்கு இவற்றை விளக்க வேண்டிய இடங்களில் விளக்கிச் செய்யுட்களுடைய பெயர்களின் காரணங்களை ஆங்காங்கே தெரிவித்து மிகச் செவ்விதாக அமைந்துள்ளது. இவ்வுரை இல்லையாயின், இந்நூற்பொருளை அறிந்து கொள்ளுதல் மிக அரிது" (பதிற்.பழைய.முகவு. ப.4) என்று உ.வே.சா. குறிப்பிடுகிறார்.

**பழைய உரையாசிரியரின் காலம்**

பதிற்றுப்பத்திற்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையை உற்றுநோக்கின் மிகவும் தொன்மை வாய்ந்தது என்றே தோன்றுகின்றது. உரையாசிரியர் எந்தக் காலகட்டத்தைச் சேர்ந்தவர் என்பதும், அவருடைய பெயர் பற்றிய எவ்விதமான குறிப்பும் காணப்படவில்லை. இவர் பதிற்றுப்பத்தின் 76 ஆம் பாடலின் உரையில் ''சின்மையைச் சின்னூலென்றது போல ஈண்டுச் சிறுமையாகக் கொள்க' என்று எழுதியிருத்தலால் இவருடைய காலம் நேமிநாத நூலாசிரியராகிய குணவீர பண்டிதருடைய காலத்திற்குப் பிற்பட்டகாலம் என்று தெரிகின்றது. [சின்னூல்-நேமிநாதம்] இவருடைய உரையை உற்றுநோக்கின் பேராசிரியர் முதலியோர்களுள் ஒருவரோ அல்லது பண்டைக்காலத்து அவர்களைப்போல் விளங்கிய வேறு ஒருவரோ என்று எண்ணப்படுகிறார்'' (பதிற்.பழைய.முகவு.ப.4) என உ.வே.சா. குறிப்பிடுகின்றார். இக்குறிப்பினை அடிப்படையாகக் கொண்டு மு.அருணாச்சலம், ''76 ஆம் பாடலின் சில்லேராளர் என்ற தொடருக்கு உரையெழுதும்பொழுது, 'சிறிய ஏராளர்' என்று குறிப்பிட்டு, 'சின்மையால் சின்னூல் என்பதுபோல, சிறுமையாகக் கொள்க' என்றும் சின்னூலாவது நேமிநாதம்; அதன்காலம் 1195 ஆகும். இவ்வுரை அதற்குப் பிற்பட்டதாகவே, அடுத்ததாகிய 13 ஆம் நூற்றாண்டின் பிற்பாதி என்று இவ்வுரையின் காலத்தை வரையறை செய்யலாம்''[21] என்றும் தம்முடைய கருத்தை முன்மொழிகின்றார்.

ஒரு நூலின் காலத்தை அறிய அதன் முன் எல்லை பின் எல்லை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு வரையறை செய்ய வேண்டும் என்ற அறிவியல் அடிப்படையை உருவாக்கித் தந்தவர் வையாபுரிப்பிள்ளை. இத்தகைய ஆய்வு முறையினைப் பயன்படுத்தி மு.அருணாச்சலம் நூல்களின் கால ஆய்வினை நிகழ்த்தி இருக்கின்றார். இதுபோன்ற ஆய்வுகளால் பழையவுரையின் காலத்தையும் உரையாசிரியரின் காலத்தையும் விரிவாக அறிந்து கொள்ள இயலும். நச்சினார்க்கினியர், அடியார்க்குநல்லார் போன்றோரால் இவ்வுரை எடுத்தாளப்பட்டிருப்பதால் காலத்தால் முற்பட்டவை என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

**துறைகள்**

பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ள புறத்துறைகளை உ.வே.சா., முகவுரையில் சுட்டுகிறார். அவை ''இயன்மொழி வாழ்த்து, உழிஞையரவம் - என, ஒள்வாளமலை,

களவழி - ஙகூ காட்சிவாழ்த்து - சக, காவன்முல்லை - அகூ குரவைநிலை - ரூஉ, செந்துறைப்பாடாண் பாட்டு - ரூஅ தும்பையரவம் - ஙச, நாடுவாழ்த்து, பரிசிற்றுறைப் பாடாண்பாட்டு - கசூ பாணாற்றுப்படை, பெருஞ்சோற்றுநிலை, முல்லை -அக, வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு - உக, உங, உரு உகூ உசூ ஙங, ரூ0, ரூக, அ0 வாகை - ஙசூ வாகைத்துறைப் பாடாண்பாட்டு - ஙரு விறலியாற்றுப்படை'' (பதிற்.பழைய.முகவு.ப.5) என்று அமைகின்றன. அவற்றுள் இயன்மொழி வாழ்த்து, ஒள்வாளமலை, நாடுவாழ்த்து, பாணாற்றுப்படை, பெருஞ்சோற்றுநிலை, விறலியாற்றுப்படை ஆகிய ஆறு துறைகளுக்கும் விளக்கம் கூறவில்லை. உழிஞையரவம், களவழி, காட்சிவாழ்த்து, காவன்முல்லை, குரவைநிலை, செந்துறைப் பாடாண்பாட்டு, தும்பையரவம், பரிசிற்றுறைப் பாடாண்பாட்டு, முல்லை, வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு, வாகை, வாகைத்துறைப் பாடாண்பாட்டு ஆகிய பன்னிரெண்டு துறைகளுக்கும் விளக்கம் கூறுகின்றார், பழைய உரையாசிரியர்.

**வண்ணங்கள்**

பாக்களில் காணப்படும் சந்த வேறுபாடு 'வண்ணம்' என்று அழைக்கப்படும். இதனைத் தொல்காப்பியப் பொருளதிகாரம்,

> ''வண்ணம் தானே நாலைந்து என்ப''[22]

என்று இருபது வகையான வண்ணங்களைச் சுட்டுகிறது. அவையாவன: பாஅ வண்ணம், தாஅ வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இயைபு வண்ணம், அளபெடை வண்ணம், நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம், சித்திர வண்ணம், நலிபு வண்ணம், அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம், ஒழுகு வண்ணம், ஒரூஉ வண்ணம், எண்ணு வண்ணம், அகைப்பு வண்ணம், தூங்கல் வண்ணம், ஏந்தல் வண்ணம், உருட்டு வண்ணம், முடுகு வண்ணம் ஆகியவை ஆகும். அவ்வகையில், பதிற்றுப்பத்தில் ஒழுகுவண்ணம் தனித்தும் ஒழுகு வண்ணமும் சொற்சீர் வண்ணமும் சேர்ந்தும், சொற்சீர் வண்ணம் தனித்தும் அமைந்து வருகின்றன. இதனைப் பதிற்றுப்பத்தின் பழைய முகவுரை குறிப்பிட்டுச் சுட்டுகிறது.

பதிற்றுப்பத்தின் 14ஆம் பாடலின் இரண்டாம் அடியில் 'அளப்பரியையே' என்ற சொல் இடம்பெற்றுள்ளது. ''(உ) 'அளப்பரியையே' எனச் சொற்சீரடி வந்தமையாற்

சொற்சீரடி வண்ணமு மாயிற்று; ஈண்டுச் சொற்சீரென்றது, அளவடியிற் குறைந்தும் வஞ்சியோசையன்றி அகவலோசையாயும் வரும் அடியினை'' (பதிற்.14.பழைய.ப.9) என்றும், ''(௧௦) 'அவ்வினைமேவலை யாகலின்' எனவும் (௧௫) 'யார்கொலளியை' எனவும் எனச் சொற்சீர் வண்ணமு மாயிற்று'' (பதிற்.19.பழைய.ப.20) என்றும் விளக்கம் அளிக்கப்பெற்றுள்ளது. பழைய உரையாசிரியர் 14, 19 ஆகிய இரண்டு பாடல்களின் பழையவுரையில் மட்டுமே வண்ணத்திற்கு விளக்கம் கூறுகிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தூக்குகள்**

பதிற்றுப்பத்துப் பழைய முகவுரையில், அந்நூலில் இடம்பெற்றுள்ள தூக்கும், அவை இடம்பெற்றுள்ள பாடல்களின் எண்களும் கொடுக்கப்பெற்றுள்ளன. இதன் வரையறையை, ''தூக்கு என்பது பாக்களை அடிதோறும் துணித்து நிறுத்தலாகிய ஓசை விகற்பமாகும். அ∴தாவது அகவி (அழைத்து)க் கூறும் ஓசையது அகவல்; செப்பலோசையது வெண்பா; துள்ளலோசையது கலி; தூங்கலோசையது வஞ்சியெனத் துணிவது. மருட்பாவிற்குரிய ஓசை மேற்கூறிய தூங்கலும் துள்ளலும் ஒழிந்த ஏனைச் செப்பலும் அகவலும் ஆகிய இரு கூறுமல்லது, தானாக வேறுபடுத்து இதுவெனக் காட்டும் தனிநிலை இல்லை என்பர் தொல்காப்பியர். எனவே தூக்கியல் நான்கு வகைக்குமேல் இல்லை என்பது பெறப்படும்''[23] என்பர், ந.சுப்புரெட்டியார். இதனைத் தொல்காப்பியர்,

''தூக்கியல் வகையே ஆங்குஎன மொழிப''[24]

என்ற அடியின் வாயிலாகத் தெளிவுபடுத்துகிறார். இத்தகைய ஓசை விகற்பங்களுள் பதிற்றுப்பத்தின் பாக்களை அழகு செய்யும் வகையில் செந்தூக்கும் வஞ்சித்தூக்கும் பயின்று வந்துள்ளன. பதிற்றுப்பத்தில் 'செந்தூக்கும் வஞ்சித்தூக்கும் ௫௯, ௨௦, ௨௨, ௨௫ ௩௯, ௫௧, ௬௯, ௮, ௬௦ ஆகிய ஒன்பது பாடல்களிலும், வஞ்சித்தூக்கு ௧௯, ௨௦, ௨௨, ௨௫ ௨௯, ௩௯, ௩௪, ௫௧, ௬௯, ௮, ௬௦ ஆகிய பதினொன்று பாடல்களிலும் இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான பாடலின் சுவையை அதிகரிப்பதற்கு தூக்கு என்ற இவ்ஓசை நயம் பயன்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய தூக்கு என்னும் ஓசை விகற்பம் வேறு சங்க இலக்கிய நூல்களில் சுட்டப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## ஐங்குறுநூறு – பழையவுரைப் பதிப்பு வரலாறு

ஐங்குறுநூறு 1903-ஆம் ஆண்டு உ.வே.சாமிநாதையரால் முதன்முதலில் பதிப்பிக்கப்பெற்றது. இவர் இரண்டாவது பதிப்பை 1920-ல் பதிப்பித்தார். இதன் பின்னர் 1944ஆம் ஆண்டு உ.வே.சா.வின் குமாரர் கலியாணசுந்தரையர் தனது தந்தை பரிசோதித்துத் தந்த குறிப்புரைகளுடன் மூன்றாம் பதிப்பை வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து 1949ஆம் ஆண்டு ஐங்குறுநூற்றின் நான்காவது பதிப்பும் வெளியிடப்பட்டது. இவ்விரண்டு பதிப்புகளும் பழையவுரையுடன் உ.வே.சா.வின் குறிப்புரைகளையும் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## முகவுரை அமைப்பு

''சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமாசரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே'' (ஐங்.பழைய.முகவு.ப.1)

என்ற பாடல் ஐங்குறுநூற்றின் இறை வணக்கப் பாடலாக அமைந்துள்ளது. ஐங்குறுநூறென்பது கடைச்சங்க புலவர்களால் அருளிச் செய்யப்பட்ட எட்டுத்தொகை நூல்களில் அகம் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுவதாகும். இந்நூல் சொற்சுவை, பொருட்சுவை நிறைந்ததாகக் காணப்படுகிறது. ஐங்குறுநூற்றுப் பாடல்கள் வாயிலாக பொருள்களின் இயற்கை அழகையும் தமிழ் மொழியின் இனிமையையும் நன்கு அறிய இயலும். இது பண்டையத் தமிழகத்தின் நிலைமையையும் சரித்திரச் செய்திகளையும் உணர்த்தக் கூடியதாகும். இது பொருளிலக்கணமாகிய அகம் புறம் இரண்டின் பகுதிகளுள் அகம் பற்றிய செய்திகளைப் பற்றியே குறிப்பிடுகின்றது.

## நூலமைப்பு

இந்நூல் சிவபெருமானுடைய துதிப்பாடலைக் கடவுள் வாழ்த்தாகக் கொண்டுள்ளது. இதன் திணை வைப்புமுறை மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்னும் அமைப்பு முறையில் தொகுக்கப்பட்டு நூலாக்கம் செய்யப்பட்டுள்ளது. இந்நூலிலுள்ள ஒவ்வொரு திணையும் நூறுநூறு அகவற்பாக்களைக் கொண்டு திகழ்கின்றது. ஒவ்வொரு திணையும் பத்துப்பத்துப் பாடல்களை உடையது. ஐங்குறுநூற்றுப் பாடல்களின் எண்ணிக்கை 401 ஆகும்.

நற்றிணை முதலியவற்றின் பாக்களைக் காட்டிலும் அடிவரையறையில் குறைந்த நூறுநூறு பாக்களால் ஆனது. மருதம் முதலிய ஐந்திணை ஒழுக்கங்களைத் தனித்தனியே விளக்குகின்றமையின் இந்நூல் ஐங்குறுநூறு எனப் பெயர் பெற்றது.

ஐங்குறுநூற்றின் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் ஆவார். இந்நூலின் ஒரு திணையை ஒரு புலவர் வீதம் ஐந்து திணைகளையும் ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர்.

> ‘‘மருதம் ஓரம்போகி நெய்தல் அம்மூவன்
> கருதும் குறிஞ்சி கபிலன் - கருதிய
> பாலை ஓதலாந்தை பனிமுல்லை பேயனே
> நூலை ஓதும் ஐங்குறுநூறு’’ (ஐங்.பழைய.முகவு.ப.2)

என்னும் வெண்பா ஒவ்வொரு திணையின் புலவர்களையும் விளம்புகின்றது. ஒவ்வொரு புலவரும் அந்தந்த நிலத்திற்குரிய திணையை மிகச் சிறப்பாகப் பாடியுள்ளனர். இப்பாடல்கள் அனைத்தும் சங்கத் தமிழ்ப் புலவர்களின் புலமைக்குச் சான்றாக அமைகின்றன.

**பழையவுரை அமைப்பு**

சங்க அகத்திணை நூலான ஐங்குறுநூற்றுக்குப் பழையவுரை காணப்படுகின்றது. இந்நூலுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரை ஒவ்வொரு அகவற்பாவின் பின்னும் அமைந்துள்ளது. சில பாடல்களுக்கு இரண்டு கருத்துரைகளும் உண்டு. இக்கருத்துரைகளை எழுதியவர் பெயர் புலப்படவில்லை. தொல்காப்பியப் பொருளதிகார உரையில் இந்நூலிலிருந்து மேற்கோளாகச் சில பாடல்கள் சுட்டப்பெற்றுள்ளன. அவற்றுக்கு நச்சினார்க்கினியர் முதலியோர் இக்கருத்துக்களைத் தழுவாமல் வேறு கருத்துரைகளும் எழுதியுள்ளனர். அதற்கேற்ப அச்செய்யுட்களுக்குப் பொருளும் விளங்க எழுதியிருக்கின்றனர்.

ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையின் தன்மையை, ‘இந்நூலின் பழையவுரை பதவுரையுமன்று; பொழிப்புரையுமன்று; அகத்திணை நூல்களுக்கேயுரிய உள்ளுறையுவமம்; இறைச்சிப்பொருள் முதலியவற்றைப் பெரும்பாலும் நலமுற விளக்கிச் சிலசில இடத்து மட்டும் திரிசொற்களின்

பொருளைப் புலப்படுத்திச் சிறுபான்மை இலக்கணக்குறிப்பையும் சொன்முடிபு பொருண்முடிபுகளையும் பெற்றுள்ளது. சசுகூ -ஆம் பாடலுக்கு மேலுள்ளவற்றிற்குக் கையெழுத்துப் பிரதியில் இவ்வுரை காணப்படவில்லை; இடையிடையே சிலசில பாடல்களுக்குமில்லை. ஆனாலும் கிடைத்தவரையிற் சிலசில பாடல்களின் பொருள்களைத் தெரிந்து கொள்வதற்கு இவ்வுரை மிகச் சிறந்த கருவியாகவுள்ளது. இந்நூல்போலவே நடையாலும் பொருள் நுணுக்கத்தாலும் இவ்வுரையும் மிகவும் பாராட்டற்பாலது. இவ்வுரை இல்லையாயின், இந்நூற்பாக்களிலுள்ள உள்ளுறையுவமம் முதலியனவும் மற்ற அருமை பெருமைகளும் நன்கு புலப்படா. இவ்வுரையாசிரியர் இன்னாரென்பது ஒருவாற்றானும் விளங்கவில்லை. ஆனாலும் நடையை உற்றுநோக்கின் பேராசிரியர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலியவர்களுள் இவர் ஒருவரோ அல்லது அவர்களைப் போன்ற வேறு ஒருவரோவென்று ஊகிக்கப்படுகிறார். தொல்காப்பியப் பொருளதிகாரம், இறையனாரகப்பொருள், நாற்கவிராய நம்பி அகப்பொருள் முதலிய நூல்களை உரையுடன் பன்முறை ஆராய்ந்தவர்களுக்கு, இந்நூலின் நயம் நன்கு புலப்படும். நடையும் தெற்றென விளங்கும்' (ஐங்.பழைய.முகவு.ப.7) என்று கூறுகிறார் உ.வே.சா. ஐங்குறுநூற்றுக்குத் தான் எழுதிய அரும்பதவுரையைப் பதிப்பிக்காமல் இருந்தமைக்குக் காரணமாக, 'பழையவுரை இல்லாத செய்யுட்களுக்கு உள்ளுறை உவமம் முதலியவற்றைப் புலப்படுத்தி ஏதோ ஒரு வகையாக உரையெழுதி இதனுடன் பதிப்பிக்கலாமென்ற விருப்பம் சில சமயம் எனக்கு நிகழ்ந்ததுண்டு. நிகழ்ந்தும் இந்நூலையும் உரையையும் உற்றுநோக்க அவ்விருப்பம் அடியோடே மாறிவிட்டது. இந்நூல் முழுமைக்கும் நான் எழுதி வைத்த அரும்பதவுரையை இதனுடன் பதிப்பியாமைக்குக் காரணமும் இதுவே'(ஐங்.பழைய.முகவு.பக்.7-8) என உ.வே.சா தம் ஐங்குறுநூற்று முன்னுரையில் சுட்டுகிறார். இந்நூலின் பழையவுரையை வ.சுப.மாணிக்கனார் "ஐங்குறுநூற்றுக்கு அமைந்த பெயரறியப்படாத உரை வெறுமனே நூலை விளக்கும் பணியை மட்டும் செய்வதில்லை. மாறாக தமிழின் தனித்தன்மையை நிறுவும் பணியையும் இது மேற்கொள்கிறது"[25] என்கிறார். இது ஐங்குறுநூற்றுப் பழையவுரையின் சிறப்பைப் புலப்படுத்தும்.

**உரை ஆராய்ச்சி**

உ.வே.சா. மேற்கொண்ட உரை ஆராய்ச்சியைப் பற்றி பூ.சொல்விளங்கும் பெருமாள், "பழையவுரை இல்லாத செய்யுள்களுக்கு உள்ளுறை உவமம்

முதலியவற்றைப் புலப்படுத்தி ஏதோ ஒரு வகையிலான உரையெழுதிய செய்தியையும் இந்நூல் முழுமைக்கும் அரும்பதவுரை எழுதிய செய்தியைக் கூறி, இவ்வுரையை இணைக்காததற்குப் பழையவுரையின் நுட்பமும் ஆழமுமே காரணம் என உணர வைத்தார். பிரதிகளின் பாடம் ஒன்றாகவும் பழையவுரை கொண்ட பாடம் வேறாகவும் நச்சினார்க்கினியர் எடுத்தாண்ட போது கொண்ட பாடம் மற்றொன்றாகவும் வெளிப்படுத்தியுள்ளார்"[26] என்று சுட்டுகிறார்.

ஐங்குறுநூற்றின் 129, 130-ஆம் செய்யுட்கள் ஒரு பிரதியிலும் காணப்படவில்லை. 419, 460-ஆம் செய்யுட்களின் இரண்டாம் அடிகளில் சீர்கள் குறைந்துள்ளன. அவற்றில் ஒரு பிரதியில் கூட உரை முழுமையானதாக இல்லை. இந்நூலின் மூலம், கருத்துரை, பழையவுரை இம்மூன்றிலும் எழுத்துக்கள் சிதைந்துபோன பாகத்தை ஒற்றைநிரைப் புள்ளிகள் (.........) மூலம் அறிந்து கொள்ள இயலும். பிறிதொரு சுவடியில் இருக்கும்பொழுது உண்டாகும் இன்பமும் குறிப்பிட்ட சொல் அல்லது உரை எந்தச் சுவடியிலும் இல்லாமல் போகையில் உண்டான மன வருத்தமும் சொல்லிடப் பெறாதவை. இவ்வனுபவத்தோடுதான் உ.வே.சா. பழஞ்சுவடிகளைத் தேடி ஒப்புநோக்கி யாத்துள்ளார். அவர் கையெழுத்துப் பிரதிகளில் காணப்பட்ட சொற்களாக,

"அடும்பு (=அடம்பு)

அணுமை (=அணிமை)

அலம்வருதல் (=அலம்வருதல்)

அற்சிரம் (=அச்சிரம்)

இற்றி (=இத்திமரம்)

கவிழ்தல் (=கலுழ்தல்)

குருசில் (=குரிசில்)

துடக்கம் (=தொடக்கம்)

துடங்கின்று (=தொடங்கின்று)

நெருனை (=நெருநை)

பஞ்சாய் (=பைஞ்சாய்)

பழுநி (=பழுனி)

வல்லினை (=வல்லுனை)

வேணும் (=வேண்டும்)''

என்பனவற்றைச் சுட்டுகிறார். இதுபோன்ற வெவ்வேறு வேறுபாடுகள் கையெழுத்துப் பிரதிகளில் காணப்பட்டன. கையெழுத்துப் பிரதிகளைத் தேடுதல், எழுதுதல், ஒப்புநோக்குதல், ஆராய்தல் முதலியவைகள் முடிவில் இன்பத்தை விளைவிப்பனவாயினும் எதுவும் தக்க பொருளுதவியின்றி நடைபெறாத இக்காலத்தில் அவைகளே அப்பொழுது பலவகையான துன்பத்தை விளைவிக்கின்றன. ''அருளில்லார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு'' என்பது பொய்யாமொழி யன்றோ. ஒரு பழைய நூலைப் பதிப்பிப்பதற்குரிய உழைப்பிலும் பொருட்செலவிலும் காலச்செலவிலும் அதனை ஆராய்தற்குரிய உழைப்பும் பொருட்செலவும் காலச்செலவும் மிக அதிகமென்பதைப் பழகியவர்கள் நன்கு அறிவார்கள்''(ஐங்.பழைய.முகவு.ப.6) என்று கையெழுத்துப் பிரதிகளில் ஏற்பட்ட இன்னல்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

ஐங்குறுநூற்றின் முதற்பதிப்பைப் பற்றிக் குறிப்பிடுகையில், உ.வே.சா. ''இதன் முதற்பதிப்பு 1903-ஆம் வருஷத்திற் பதிப்பிக்கப் பெற்றது. பின்பு கிடைத்த கையெழுத்துப் பிரதிகளால் அறிந்த பிரதிபேதங்களும் அரும்பதவகராதியில் பழைய நூலாராய்ச்சிக்கு இன்றியமையாத சில குறிப்புக்களும் இப்பதிப்பிற் சேர்க்கப்பெற்றுள்ளன'' (ஐங்.பழைய.முகவு.ப.12) என்கிறார். இந்நூல் முழுமை அடைவதற்குக் காரணமாக இருந்தவர்களுக்கு நன்றி கூறுகிறார். இதனைத் ''திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்வானும் எனதாசிரியருமாக விளங்கிய திரிசிபுரம் ஸ்ரீமீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களுடைய கண்மணிபோன்ற முதன் மாணாக்கரும் பாடஞ் சொல்லுதல், செய்யுள் செய்தல், நூலாராய்தல் முதலியவற்றில் அவர்களைப் போன்றவரும் முன்பு கும்பகோணம் கவர்ன்மென்ட் காலேஜ் தமிழ்ப் பண்டிதரா யிருந்தவரும் வேறு கவலையின்றி நூலாராய்ச்சியையே செய்துகொண்டு காலங்கழிக்கும்படி வற்புறுத்திக்கூறி அவ்வாறே யான் நடத்தற்குக் கரும்பு தின்னக் கூலி கொடுத்தாற் போலத் தம்முடைய அரிய வேலையை அன்புடன் எளிதிற் எனக்குக் கிடைக்கச் செய்தவரும் 'இரந்துபுன் மாக்கடமை யென்றுந் துதியா வரந்தரவென் முன்னின்ற வள்ளலு'மாகிய திரிசிரபுரம் வித்துவான் ஸ்ரீ தியாகராச செட்டியா ரவர்களுடைய பேருதவி எழுமையும் மறக்கற்பாலதன்று.

அவர்கள் செய்த மேற்கூறிய அரியவுதவி யில்லையேல் எனக்கும் பழைய தமிழ் நூலாராய்ச்சிக்கும் இக்காலத்தில் யாதோரியைபு மின்றென்பது திண்ணம். ஆதலால் இனியதும் அரியதுமான இந்நூற்பதிப்பை அவர்களிடத்துள்ள நன்றியறிவிற்கு அறிகுறியாக அவர்களுக்கு உரியதாக்குகின்றேன்.

இதனைப் பதிப்பிக்குங் காலத்துச் சலிப்பின்றி உடனிருந்து வழக்கம்போல் ஒப்புநோக்குதல் முதலிய பலவகை உதவிகள் புரிந்த பழைய மெய்யன்பர்கள்பால் மிக்க நன்றி பாராட்டுகிறேன்.

உடனிருந்து உதவிசெய்பவர்கள் முதலியோர் விஷயத்தில் எனக்குச் சிறிதும் பொருட் கவலை யுண்டாகாதபடி பேரன்புடன் பொருளுதவி செய்து சில வருஷங்களாக ஆதரித்துவரும் ஸ்ரீ சேது சமஸ்தானாதிபதிகளும் மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர்களும் சென்னை சட்ட நிரூபணசபை அங்கத்தினர்களுமான கௌரவம் பொருந்திய ம-ள-ள-ஸ்ரீ பா.இராஜராஜேசுவர ஸேதுபதியவர்களைப் பாதுகாத்தருளும் வண்ணம் தமிழ்த் தெய்வத்தை இறைஞ்சுகின்றேன்'' (ஐங்.பழைய.முகவு.ப.13) என்று சுட்டுகிறார். தன்னுடைய ஆசிரியராகிய மீனாட்சி சுந்தரம்பிள்ளையை ஒத்தவர் தியாகராச செட்டியார் என்றும் அவர் தன்னை நூலாராய்ச்சியில் ஈடுபடுத்தியமையையும் கல்லூரியில் பணியமர்த்தி உதவி புரிந்தமையையும் சுட்டுகிறார் உ.வே.சா. அவருடைய உதவி இல்லையேல் எனது நூலாராய்ச்சிப் பணி நடைபெற்றிருக்காது என்று நன்றி கூறுகிறார். தனக்கு மெய்ப்புத் திருத்தித் தந்தவர்களையும் நூல் வெளியிடுவதற்கு நிதி நல்கியவர்களையும் நினைவு கூர்கிறார். இது உ.வே.சாவின் நன்றி மறவாப் பண்பினைச் சுட்டுகின்றது.

### கையெழுத்துப் பிரதிகள்

ஐங்குறுநூற்றுப் பதிப்பு மேற்கொண்ட உ.வே.சா அவர்கள் பயன்படுத்திய கையெழுத்துப் பிரதிகள் மிகக் குறைவானவையே ஆகும். அவருக்கு இரண்டு வகையான பிரதிகள் கிடைக்கப்பெற்றன. அவற்றுள் ஒன்று மூலமும் கருத்துரையும் உள்ள பிரதி; மற்றொன்று மூலமும் கருத்துரையும் பழையவுரையும் உள்ள பிரதி ஆகும். பழங்காலத்தில் சுவடிகளைச் சேகரித்துப் பாதுகாத்து வைப்பதில் பெரும்பங்கு வகித்தவர்கள் ஆதீனத் தலைவர்கள் ஆவர். சுவடிகளில் சில செல்வந்தர்களின் வீடுகளிலும் காணப்பட்டன. இத்தகைய ஓலைச்சுவடிகளை

உ.வே.சா., பெரிதும் முயன்று சேகரித்தார். அவ்வாறு கிடைத்த கையெழுத்துப் பிரதிகளில் மூலமும் கருத்துரையும் உள்ள மூன்று பிரதிகள் கிடைக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி ஒன்றும், ம-ா-ா ஸ்ரீ ஜே.எம். வேலுப்பிள்ளையவர்கள், திருமயிலை வித்துவான் ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள் என இருவரும் ஒவ்வொரு பிரதிகள் என இரண்டு பிரதிகள் அளித்தனர். இவையன்றி மூலமும் கருத்துரையும் பழையவுரையுமுள்ள பிரதி ஒன்றினை ஆழ்வார் திருநகரி, ஸ்ரீ தே.லஷ்மண கவிராயரவர்களும் அளித்தனர். இப்பிரதிகள் அனைத்தையும் ஒப்புநோக்கியே உ.வே.சா. அவர்கள் ஐங்குறுநூற்றுப் பழையவுரையைப் பதிப்பித்தார்.

**அகநானூறு – பழையவுரைப் பதிப்பு வரலாறு**

1918-ஆம் ஆண்டு ‘அகநானூறு மூலமும் உரையும் முதற்பகுதி’ என்ற முதற்பதிப்பை மெட்ராஸ் கம்பர் விலாஸ் புக் டிபாட் மைலாப்பூர் வெளியிட்டுள்ளது. இந்நிறுவனமே ‘ஸ்ரீ:அகநானூறு மூலமும் உரையும் முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்’ என இரண்டாவது பதிப்பையும் 1920-ஆம் ஆண்டு வெளியிட்டது. முதற்பதிப்பின் முகப்புப் பக்கமும் இரண்டாவது பதிப்பின் முகப்புப் பக்கமும் மட்டுமே தற்பொழுது கிடைக்கப் பெற்றுள்ளது. இப்பதிப்பின் வேறு எப்பகுதிகளும் கிடைக்கப்பெறவில்லை என ஆய்வுகள் சுட்டுகின்றன. இந்நூலின் மூன்றாம் பதிப்பானது 1923-ஆம் ஆண்டு ‘ஸ்ரீ:எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும்’ என்ற முழுமைப் பதிப்பாக வே.இராஜகோபாலையங்காரால் வெளியிடப்பட்டுள்ளது. இந்த மூன்றாம் பதிப்பானது அகநானூற்றுக்குப் பழையவுரை இருந்தமையைச் சுட்டுகிறது. அதனைத் தொடர்ந்து ‘ஸ்ரீ:அகநானூறு மூலமும் பழைய உரையும்’ என்ற இராஜகோபாலையங்காரின் குறிப்புரையுடன் கூடிய நான்காம் பதிப்பு 1926 ஆம் ஆண்டும், ‘ஸ்ரீ:எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும்’ என்ற ஐந்தாம் பதிப்பு 1933ஆம் ஆண்டும் வெளிவந்தது. அகநானூற்றுக்கும் பழையதாகிய அரும்பத உரை உண்டு. இப்படிப் பல சங்க இலக்கியங்களுக்கும் அறிஞர் பலர் உரை வகுத்துள்ளனர். இவர்கள் எல்லோருடைய பெயர்களும் தமக்குத் தெரியும் வாய்ப்பு இல்லை”[27] என்று தமிழ் உரைநடை என்னும் நூல் சுட்டுகிறது.

## முகவுரை அமைப்பு

எட்டுத்தொகையில் ஏழாவதாக அகநானூறு இடம்பெற்றுள்ளது. இதன் முதற்பதிப்பு அகநானூறு மூலமும் உரையும் முதற்பகுதி என்று வெளிவந்துள்ளது. MADRAS KAMBAR VILAS BOOK DEPOT MYLAPORE என்றும் அதன்கீழ் 1918 என்றும் இடம்பெற்றுள்ளது. இதனை இரா.ஜானகி சங்க இலக்கியப் பதிப்புரைகள் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். இதன் இரண்டாவது பதிப்பின் முகப்புப் பக்கம் ஸ்ரீ என்ற தொடக்கக் குறியுடன் அகநானூறு மூலமும் உரையும் என்றும் முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும் என்றும் இடம்பெற்றுள்ளது. இப்பதிப்பும் MADRAS KAMBAR VILAS BOOK DEPOT MYLAPORE என்றும் பதிப்பு ஆண்டு 1920 என்றும் சுட்டப்பெற்றுள்ளது. அப்பக்கத்தின் இடதுபுறத்தின்கீழ் Copy right எனறும் வலதுபுறத்தில் Price Rs.9 என்றும் இடம்பெற்றுள்ளது. இதன் மூன்றாவது பதிப்பின் முகப்புப் பக்கம் மேற்கண்ட இரண்டு பதிப்புகளின் முகப்புப் பக்கத்தினும் சற்று மாறுபட்டதாகக் காணப்படுகின்றது. மூன்றாம் பதிப்பின் முகப்புப் பக்கம் 'ஸ்ரீ எட்டுத்தொகையுள் ஆகும் அகநானூறு (மூலமும் பழைய உரையும்)' என்று சுட்டப்பெற்றுள்ளது. முகப்புப் பக்கத்தின் மையப்பகுதியில் 'இவை ஸேதுஸமஸ்தான வித்வான் ஸ்ரீ உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் சோதித்துத் தந்தன' என்று இடம்பெற்றுள்ளது. அதன்கீழ் 'சென்னை, மயிலாப்பூர் கம்பர் விலாசம் வே.இராஜகோபாலையங்கார் பதிப்பு என்று இடம்பெற்றுள்ளது. கீழ்ப்பகுதியின் இடதுபுறத்தில் ருதிரோத்காரி என்றும் விலை ரூ.10 என்றும் அமைந்துள்ளன. இது 1923 ஆம் ஆண்டு வெளிவந்த பதிப்பு ஆகும். இதனைத் தொடர்ந்து 1926, 1933ஆம் ஆண்டுகளிலும் இப்பதிப்பு வெளிவந்துள்ளன.

## உள்ளடக்கப் பகுதி

அகநானூற்றின் உள்ளடக்கப் பகுதியின் இரண்டாம் பக்கத்தில் 'THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE' என்று இடம்பெற்றுள்ளது. மூன்றாவது பக்கத்தில் ஸ்ரீ இப்பதிப்பில் அடங்கியவை என்ற குறிப்பும் காணப்படுகின்றது. அதன் கீழ்ப் பகுதியில் சேதுஸமஸ்தான வித்வான், ஸ்ரீ உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் முகவுரை, சோதனைப்பத்திரம், தொகுத்தோர், தொகுப்பித்தோர் வரலாறுகள், அரசர் முதலியோர் வரலாறு, உரையாசிரியர்கள் வரலாறு, அகநானூற்று ஆராய்ச்சிக் குறிப்பு பாடிய ஆன்றோர்

சாதி முதலியன, ஐந்திணைக்குமுரிய பாடல்கள் இலக்கணக் குறிப்பு, நூற்பெயர் முதலியவற்றின் சுருக்கக் குறிப்பு, அகநானூறு மூலமும் உரையும், பாயிரம், செய்யுள் முதற்குறிப்பகராதி, அபிதானக் குறிப்பு, பொருட் குறிப்பு ஆகியவற்றைக் கொண்டதாக உள்ளடக்கப் பகுதி அமைகின்றது.

**முகவுரை அமைப்பு**

அகநானூற்றுக்கு அமைந்த முதல் இரண்டு பதிப்புகளின் முகப்புப் பக்கங்கள் மட்டுமே கிடைத்துள்ள நிலையில் மூன்றாம் பதிப்பின் முகவுரை மிகவும் இன்றியமையாததாக அமைகின்றது. இப்பதிப்பின் முகவுரை ஸ்ரீ, அகநானூறு, முகவுரை என்று தொடங்குகின்றன. ‘‘இந்நூல் கடைச்சங்க காலத்துப் பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு எனப் பெயர் சிறப்பித்துக் கொண்டாடப்பெற்ற பெருந்தமிழ்ப் பனுவல் எட்டுத்தொகையு ளொன்றாய் உலக நிகழ்ச்சிக்கு இன்றியமையாது வேண்டப்பட்ட இல்லற நடாத்தற்கண் தலைவனுந் தலைவியும் ‘ஓருயிர்ப் புள்ளி னிருதலை’ போன்று ஒற்றுமைப்பட்டு ஒழுகற்குரிய விழுமிய பேரன்பின் பயனாகிய இன்பப் பகுதியை நன்கு விளக்கும் நானூறு அகவற்பாக்களை யுடையதோர் நூலாகும்’’(அகநா.பழைய.முகவு.ப.1) என்று அகநானூற்றுக்கு விளக்கமும் எட்டுத்தொகை நூல்களைக் குறிப்பிடும் பழம் பாடலும் இடம்பெற்றுள்ளது.

**அகநானூற்று ஆராய்ச்சி**

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் அகநானூற்றைப் பதிப்பித்து வெளியிடுவதற்கான ஆராய்ச்சி என்பது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைகின்றது. இதற்கான முயற்சி பெருமளவில் நடைபெற்றிருக்கின்றது. அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற ஓலைச்சுவடி பிங்கல நிகண்டினை அச்சிட்ட ஸ்ரீமான் சிவன்பிள்ளை அவர்களால் தேடி எடுக்கப்பட்டது. தமிழ்ச்சங்கம் ஆரம்பம் ஆவதற்கு முன்பே தமிழ்ச்சங்கத்தை உருவாக்கியவர். தமிழ்மொழி மீது பேரன்பு கொண்டவரும் பால்வண்ணனத்தம் (பால்வண்ண ஈசுவரர் என்பது இவ்வூர்ச் சிவபிரான் பெயர் என்று அகநானூற்று முகவுரைப் பகுதியின் அடிக்குறிப்பில் சுட்டப்பெற்றுள்ளது) ஜமீன்தாருமாகிய பாண்டித்துரைத் தேவர் சிவன்பிள்ளையிடமிருந்து அவ்வேட்டை விலைக்குப் பெற்றார். அதனை முகவை என்று அழைக்கப்படும் இராமநாதபுரம் அரண்மனையில் அனைவரும் படித்துப் பயன்பெறும் வகையில் நிலைபெறுவித்தார். சென்னைப் பல்கலைக்கழகத்தில்

பணிபுரிந்த தமிழ்ப்பண்டிதர் மு.இராகவையங்கார் அவர்களின் உதவியால் பாண்டித்துரைத் தேவர்களிடம் இருந்த ஏட்டினைப் பெற்றார். அதனை ஒருபிரதி செய்து கொண்டார். தன்னிடம் இருந்த சில சுவடிகளுடன் ஒப்புநோக்கும் பணியில் ஈடுபட்டார். இந்தக் காலகட்டத்தில்தான் பாண்டித்துரைத் தேவரவர்கள் மதுரைத் தமிழ்ச்சங்கத்தைத் தோற்றுவித்து தம்மிடம் இருந்த பழைமையான ஏடுகளைத் தமிழபிமானிகள் பலரும் படித்துப் பயன் கொள்ளும் வகையில் அச்சங்கத்திற்கே அருளினார். பெருந்தமிழ் வள்ளலும் பேரறிவாளரும் மதுரைத் தமிழ்ச்சங்கம் தோன்றுவதற்குப் பெரிதும் காரணமாக இருந்தவர்கள் பாஸ்கர சேதுபதி அவர்களும் பாண்டித்துரை தேவரவர்களும் ஆவர். இவர்கள் ரா.இராகவையங்கார் அவர்களை மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பிரகடன ஆசிரியனாக நியமித்தனர். அவர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் தோற்றத்திற்கு முன்னர் இருந்தே அகநானூற்றை ஆராய்ந்து வந்தார். இதனை அறிந்திருந்த பாஸ்கர சேதுபதி அவர்களும் பாண்டித்துரைத் தேவரவர்களும் அகநானூற்றை அச்சிட்டு வெளியிடும்படிக் கேட்டுக் கொண்டனர். அகநானூற்று ஆராய்ச்சி குறித்த நிகழ்வைக் குறிப்பிடும் ரா.இராகவையங்கார் “இற்றைக்கு ஓரிருபது வருடங்கட்கு முன் மதுரைத் தமிழ்ச் சங்கத்து என்னால் இவ்வகநானூறு அச்சிடத் தொடங்கப்பட்டுச் சிறிது தூரம் நடைபெற்றது. அக்காலத்து எனக்கு உண்டாகிய நோயாலும் மற்றுஞ் சில இடையூறுகளாலும் நிறைவேறாம னின்றது. தமிழ்ச் சங்கத்தி னவ்வேலையினை யான் அச்சங்கம் சம்பந்தமாகச் சோதித் தெழுதியவையும் தேவரவர்களால் திரும்ப வாங்கிக் கொள்ளப்பட்டன. அவையெல்லாம் இவ்வுலகிற்குப் பண்டை நற்றமிழை இறவாது செவ்வனம் பாதுகாத்து வளர்க்கின்ற புண்ணியமே நாளுஞ் செய்து நிலவும் பெருங் கல்வி வள்ளலாகிய மஹாமஹோபாத்யாய ஸ்ரீமான், உ.வே.சாமிநாதையரவர்கள் பாலுள்ளன”(அகநா.பழைய.முகவு.ப.9) என்று தம் அகநானூற்று ஆராய்ச்சி இடையில் நின்றுபோனமையைச் சுட்டுகிறார். பின்னர் மீண்டும் அகநானூற்றைப் பதிப்பிப்பதற்கான வாய்ப்பு கிட்டுகின்றது. இத்தகைய சூழலை, “என் நண்பரும் பண்டைச் சங்கத்தமிழ் நூல்களை ஆராய்தலிலே ஊக்கம் மிகுந்தவரும், சங்ககாலத்து நிகழ்ச்சிகளைச் சிறுவரும் எளிதிலறியும்படி பலபல கதைநூல்களால் விளக்கியவரும் ஆகிய தமிழ்ப்பண்டிதர் கம்பர் விலாஸம் ஸ்ரீமான் வே.இராஜகோபாலையங்காரவர்கள் இந்நூல் அச்சிடுதலை மேற்கொண்டு அதற்கான பரிசோதனைகளைச் செய்தளிக்குமாறு என்னை வேண்டினார்கள். அவர்கள் ஊக்கமும் பண்டைத் தமிழ் விருப்பமும் இப்பெருங்காரியத்தை இடையில் விடாது

நிறைவேற்றல் கூடுமென்னும் எண்ணத்தையுண்டாக்கியமையாலும், எப்படியானும் நெடுங்காலமாக மறைந்து கிடக்கும் இவ்வரிய பெரியநூல் வெளிப்படல் வேண்டுமென்னும் வேணவாவாலும் என் சிற்றறிவிற் கியன்றவரை இந்நூலைப் பரிசோதித்துத் தர இணங்கினேன்'' (அகநா.பழைய.முகவு.ப.10) என்று தம் எண்ணங்களைப் பதிவு செய்கிறார். மு.இராகவையங்கார் அளித்த அரிய ஆராய்ச்சியுரையைக் கொண்டு பாடினோர் வரலாறு, அரசர் முதலியோர் வரலாறு, ஆராய்ச்சிக் குறிப்பு, அபிதானக் குறிப்பு, பொருட்குறிப்பு முதலிய பலவற்றுடன் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டுள்ளார், வே.இராஜகோபாலையங்கார்.

### வே.இராஜகோபாலையங்காரின் பதிப்புப் பணி

வே.இராகவையங்கார் அகநானூற்றை முழுவதுமாகப் பயின்று அதிலுள்ள கதைக் குறிப்புகளைத் தொகுத்தார். அதனைக் க.கன்னையநாயுடு என்பவர் கதைப்புத்தகங்களாக அச்சிட்டு வெளியிட்டார். அவர் வே.இராஜகோபாலையங்காரை அகநானூறு முழுவதையும் குறிப்புக்கள் பலவற்றோடு பதிப்பித்து வெளியிட வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அதனைத் தொடர்ந்து சென்னை மேரி கலாசாலை தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் கா.ரா.நமச்சிவாய முதலியாரவர்கள் அகநானூற்றுப் பிரதி ஒன்றினை அளித்தார். பின்னர் ஸ்ரீமான் கனகசுந்தரம் பிள்ளையவர்களிடம் இரண்டு அகநானூற்றுப் பிரதிகளைப் பெற்றார். சென்னையிலுள்ள இராசாங்கக் கையெழுத்துப் புத்தக சாலைக்குச் சென்று அங்குள்ள அகநானூற்றுப் பிரதியுடன் ஒப்பிட்டார். பின்னர் ஆசிரியர் வரலாறு, அபிதானக் குறிப்பு முதலிய பலவகைக் குறிப்புக்களையும் எழுதி வைத்துக்கொண்டார். ஆயினும் சில பிரதிகளில் பாடல் அடிகள் குறைந்து காணப்பட்டன. வேறு பல பாடல்களில் சொற்களும் தொடர்களும் சிதைந்தும் பிறழ்ந்தும் பொருட் பொருத்தமின்றியும், அடி நிரம்புறாதும் காணப்பட்டமையால், அச்சிடத்தக்கதென்று அவருக்குத் தோன்றவில்லை. இதனால் அவர் பெரிதும் மனம் வருந்தி மு.இராகவையங்காரை நாடுகின்றார். இவர் வே.இராஜகோபால ஐயங்காருக்கு சேதுசமஸ்தான வித்வானாகிய ரா.இராகவையங்காரை அறிமுகம் செய்கிறார். அவர் வே.இராசகோபால ஐயங்காரை ஆதரித்து, தன்னிடம் இருந்த திருத்தம் செய்யப்பெற்ற சுத்தப் பிரதிகளையும் முதற்றொண்ணூறு பாடல்களுக்குரிய பழையவுரையையும் தந்தருளினார். (வே.இராஜகோபாலையங்காரின் பதிப்பு முயற்சிக்கு முன்பே ரா.ராகவையங்கார் அகநானூற்றைப் பதிப்பிக்க முயற்சி

மேற்கொண்டார். அவரின் உடல் நலம் குன்றவே இப்பதிப்பு முயற்சி கைவிடப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும்) அத்துடன் இராமநாதபுரம் சென்று ரா.இராகவையங்காரின் இல்லத்திலேயே தங்கி அகநானூற்றுப் பிரதிகளைச் சோதிக்கும் பணியில் ஈடுபட்டார். இராஜகோபாலையங்காருக்கு உணவு முதலிய அடிப்படை வசதிகளையும் குறைவற வழங்கினார். அவரின் உள்ளப் பாங்கினை, “அந்த சுவாமிகளின் திருமாளிகையிலேயே ஒருமாதம் வரையில் தங்கி, அவர்கள் போகனஞ்செய்த சேடமுண்டு, புனிதனாகி இந்நூலின் பாடல்களையும் அவர்கள் முன்னிலையில் சோதித்துக்கொண்டு சென்னை வந்து, ஸ்ரீ மு.இராகவையங்கார் ஸ்வாமிகள் ஸந்நிதியில் பிரார்த்தித்த வண்ணம் இந்நூல் அச்சாகுங்காலத்துச் செய்யவேண்டிய சோதனைகளை யெல்லாம் செய்துதர, ஒவ்வொரு பாரம் புரூபையும் நான் இராமநாதபுரம் அனுப்பி, அது ஸேது ஸமஸ்தான வித்வான் ஸ்ரீ ரா.இராகவையங்கார் ஸ்வாமிகளால் கடைசியாகப் பார்வையிடப்பெற்ற பிறகு அச்சிடுவித்தேன். இவ்வாறிந் நூற்பதிப்பு இரண்டு வருஷகாலத்தில் பகவத் கிருபையால் மூல முழுவதும் அச்சிட்டு முடிந்தது” (அகநா.பழைய.முகவு.ப.14) என்னும் இராஜகோபாலையங்காரின் எண்ண வெளிப்பாடு நன்குணர்த்தும். பிறருக்கு உதவும் மனப்பான்மை அற்றவர்களுக்கிடையே ரா.இராகவையங்கார் பிறருக்கு உதவுவதில் பெருந்தன்மை மிக்க உள்ளம் படைத்தவராகக் காணப்பட்டார் என்பது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பின்னர் வே.இராஜகோபாலையங்கார் பாடினோர் வரலாறு முதலிய குறிப்புகளையும் சேர்த்து அச்சிட்டு முற்றுவித்தார். இக்காலத்து அவருக்கு கடுமையான மார்பு நோய் மெலிவுறச் செய்தது. இதனால் சென்னையில் வசிக்க முடியாமல் கிராமத்திற்கே செல்லும் சூழல் ஏற்பட்டது. அங்கே அவரின் உடல்நோய் மிகவும் அதிகரித்துவிட்டது. எனவே அன்பர்கள் பலரும் அகநானூற்றை மூலம் மட்டிலுமாவது பதிப்பித்து வெளியிட வேண்டுமென்று வற்புறுத்தினார். வே.இராஜகோபாலையங்கார் உடல் வலிமைபெற்று மீண்டும் திரும்பி வருவேன் என்ற நம்பிக்கை இன்மையாலும், சென்னை வந்து முழுப்புத்தகமாக அகநானூற்றை வெளியிடுவேன் என்ற நம்பிக்கை இன்மையினாலும் குறைப்புத்தமாக வெளியிட்டார். அகநானூற்றைத் தம் வாழ்நாள் இறுதிக்குள் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்ற அவருடைய ஆவல் மிகவும் போற்றத்தக்கதாகும்.

**கிடைக்கப்பெற்ற ஓலைச்சுவடிகள்**

அகநானூற்றைப் பதிப்பிக்கும் முயற்சியில் இராஜகோபால ஐயங்கார் சுவடிகள் சேகரிக்கும் பணியில் ஈடுபட்டார். இந்நூற் பரிசோதனைக்குக் கிடைக்கப்பெற்ற துணையான பிரதிகள் என்ற முறையில்,

“சென்னை Oriental Manuscript Library பிரதியைக் பார்த்து எழுதிக்கொண்ட கையெழுத்துப் பிரதி…. …….. ….

(இது செந்தமிழ்ப் பதிப்பாசிரியர் ஸ்ரீ உ.வே. திருநாராயண ஐயங்கார் ஸ்வாமிகள் தமிழ்ச் சங்கத்திற்குத் தந்துதவிய தேவர்பிரான் கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியுடன் ஒப்புநோக்கித் திருத்தம் செய்யப்பட்டது)

பெரும்பழனை ஏட்டைப் பார்த்து எழுதிக்கொண்ட கையெழுத்துப் பிரதி……..

திருநெல்வேலி ஸ்ரீமான் நெல்லையப்பக் கவிராயரவர்கள் ஏடு ….

காலஞ்சென்ற சென்னை ஸ்ரீமான். தி. த. கனகசுந்தரம்பிள்ளை அவர்கள் ஏடு (இது குறை) …. …. ….

ஷயார் காயிதப் பிரதி …. …. …. ….

சென்னை மேரிராணியார் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீ கா.ரா. நமச்சிவாய முதலியாரவர்கள் பிரதி …. …. ….” (அகநா.பழைய.முகவு.ப.11) என்று தமக்குக் கிடைக்கப்பெற்ற அகநானூற்றுச் சுவடிகளைக் குறிப்பிடுகின்றார், ரா.இராகவையங்கார். இவர் அகநானூற்றை ஆறு ஓலைச்சுவடிகளைக் கொண்டு ஒப்புநோக்கி ஆராய்ச்சி செய்திருக்கின்றமை இதன் வாயிலாகப் புலப்படும்.

**சுவடிகளின் நிலை**

அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற சுவடிகள் பல்வேறு நிலைகளில் காணப்பட்டன. அவற்றின் சில பாடல்களின் அடி குறைந்தும் காணப்பட்டன. இந்நிலையை “336ஆம் பாடலின் கொளு முதலாக 343 ஆம் பாடலின் முற்பகுதி ஈறாக ஆறு ஏழு பாடல்கள் முற்றுங் குறைந்தும், 91, 106, 107, 108, 111, 162, 223, 311, 400 என்ற பாடல்களில் பலபல அடிகள் குறைந்தும், வேறுபல பாடல்களில் சொற்களும் தொடர்களும் சிதைந்தும், பிறழ்ந்தும், பொருட்பொருத்தமின்றியும் அடி நிரம்புறாதும் காணப்பட்டமையால்,

அச்சிடத்தக்கதென்று தோன்றவில்லை'' (அகநா.பழைய.முகவு.ப.13) என்கிறார், இராஜகோபாலையங்கார். இது அகநானூற்றை அச்சிட எண்ணிய இராஜகோபாலையங்காரின் ஆராய்ச்சித் திறத்தையும் மனநிலையையும் நன்கு புலப்படுத்தும்.

### பழையவுரை அமைப்பு

அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரை குறிப்புரையாகவே உள்ளது. இவ்வுரை பெருமளவிலான இன்பப் பகுதிகளையும், மிக அறிதற்கு அரிய பெரிய வழக்கங்களையும் தமிழர் இயல்புகளையும் புலப்படுத்தித் தமிழ்மொழிக்கு உரையாணிபோல் விளங்குகின்றது. இந்நூலின் உரை முழுமையும் இன்றி கடவுள் வாழ்த்திற்கும் முதல் தொண்ணூறு பாடல்களுக்கு மட்டுமே கிடைத்துள்ளது. இதன் உரை அமைப்பை, ''இவ்வுரை ஒவ்வொரு செய்யுளிலுமுள்ள திரி சொற்கும் அருந்தொடர்க்கும் பொருள் புலப்படுத்தியும், அகத்திணைக்குச் சிறந்த உள்ளுறை யுவமம் இறைச்சிப் பொருள் இவற்றை ஆங்காங்கு இனிது விளக்கியும் வேண்டிய இடங்களில் சொல் முடிபு, பொருண்முடிபு காட்டியும், முக்கியமானவை சிலவற்றிற்கு இலக்கணக் குறிப்புகள் கூறியும், கதை பொதிந்தவிடத்து அவ்வக் கதைகளை எடுத்துணர்த்தியுஞ் சேறலாற் பலவழியானுஞ் சிறந்து இனிது விளக்குவதாகும்'' (அகநா.பழைய.முகவு.பக்.7-8) என்பதன்வழி அறிய இயலுகின்றது.

### உரையின் காலம்

அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரை தோன்றிய காலம், இதன் ஆசிரியர் குறித்த ஆராய்ச்சிகள் நிகழ்ந்து கொண்டு இருக்கின்றன. இந்நூலின் பழையவுரை தோன்றிய காலத்தை வரையறை செய்யும் ரா.இராகவையங்கார், ''இவ்வுரை எழுதிய பழையதோர் ஏட்டின்கண் கொல்லம் 460 என்று வரையப்பட்டிருந்தது கொண்டு இவ்வுரையாளர் இற்றைக்கு அறுநூற்று முப்பத்தெட்டு வருடங்கட்கு முற்பட்ட காலத்தவரென்பது மட்டிலறியலாவது. நச்சினார்க்கினியர் காலம் கி.பி.14—ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகையால், இவ்வுரைகாரர் நச்சினார்க்கினியர்க்கு முந்தியவர் என்று கொள்ளலாகும்''(அகநா.பழைய.முகவு.ப.8) என்று அகநானூற்றின் முகவுரைப் பகுதியில் சுட்டுகிறார்.

### தொகுப்புரை

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கிற்கும் பழையவுரை காணப்படுகின்றது. இவற்றுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு என்ற மூன்று நூல்களையும் பதிப்பித்தவர் உ.வே.சாமிநாதையர் ஆவார். அகநானூற்றைப் பதிப்பித்தவர் வே.இராஜகோபாலையங்கார் ஆவார். புறநானூற்றின் முதற்பதிப்பை 1894 ஆம் ஆண்டும் பதிற்றுப்பத்தை 1904 ஆம் ஆண்டும் ஐங்குறுநூற்றின் முதற்பதிப்பை 1903 ஆம் ஆண்டும் உ.வே.சா., பதிப்பித்து வெளியிட்டார். அகநானூற்றின் முதற்பதிப்பை 1918 ஆம் ஆண்டு இராசகோபாலையங்கார் வெளியிட்டார். இவை அனைத்தும் பழைய உரையுடன் கூடிய பதிப்புகள் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். புறத்திணை நூல்களான புறநானூறு 266 பாடல்களுக்கான பழைய உரையுடனும் பதிற்றுப்பத்து கிடைக்கப்பெற்ற எட்டுப்பத்துக்களுக்கான பழைய உரையுடனும் அகத்திணை நூல்களான ஐங்குறுநூறு 197 பாடல்களுக்கான பழைய உரையுடனும் அகநானூறு 90 பாடல்களுக்கான பழைய உரையுடனும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

புறநானூற்றுக்கு அமைந்த பழையவுரைப் பதிப்பு வரலாற்றில், 'எட்டுத்தொகையுள் எட்டாவதாகிய புறநானூறு மூலமும் உரையும்' என்று நூலின் முகப்புப் பக்கமும், முகவுரை அமைந்த பக்கத்தில் 'உ' முதலாவதாகவும் 'கணபதி துணை' என்பது இரண்டாவதாகவும் அமைந்துள்ளது. அமிழ்திற் சிறந்த தமிழ்மொழிகளுள் கடைச்சங்கப் புலவர்கள் அருளிச் செய்த தொகை நூல்களுள் ஒன்று புறநானூறு என அறிமுகம் செய்யப்பட்டுள்ளது. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்குநல்லாரின் காலம் பன்னிரெண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி ஆகும். இவர், 'முந்நீர்' என்ற சொல்லிற்குப் பழையவுரையாசிரியரின் கருத்தினை எடுத்தாண்டுள்ளார். இதிலிருந்து பழையவுரையாசிரியர் அடியார்க்குநல்லார் காலத்திற்கு முற்பட்டவர் என்பது தெளிவாகிறது. உ.வே.சாவின் சீவகசிந்தாமணி ஆராய்ச்சி, புறநானூற்று ஆராய்ச்சிக்கு வித்திட்டது. இந்நூலுக்குக் கிடைக்கப்பெற்ற 266 பாடல்களுக்கான பழையவுரை பதப்பொருளை இனிது விளக்கக் கூடியதாக இருந்தது. தொல்காப்பியம், கலித்தொகை, குறுந்தொகை, சீவகசிந்தாமணி, பெரும்பாணாற்றுப்படை

ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளார், பழையவுரையாசிரியர். புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற மூலப்பிரதிகளையும் உரைப்பிரதிகளையும் முகவுரைப்பகுதி சுட்டுகிறது. கிடைக்கப்பெற்ற ஓலைச்சுவடிகள் பாடினோர் பெயர் சிதைந்தும் பாடப்பெற்றோர் பெயர் சிதைந்தும் சில இடைப்பாகங் குறைந்தும் சில கடைப்பாகங் குறைந்தும் என பல்வேறு நிலைகளில் காணப்பட்டன. அயல்நாட்டவரான ஜி.யூ.போப் என்பவருக்கு தமிழ் மீது விருப்பம் உண்டாகக் காரணமாக இருந்ததும் புறநானூறு என்பதும் குறிப்பிடத்தக்கது ஆகும்.

பதிற்றுப்பத்துப் பழையவுரைப் பதிப்பு வரலாற்றில் நூலின் முகப்புப் பக்கம் முதலாவதாகவும் உள்ளடக்கப் பகுதி இரண்டாவதாகவும் அமைந்துள்ளது. மூன்றாவது பக்கத்தில் இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்புகள் காணப்படுகின்றன. நான்காவது பக்கம் 'சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்....' என்னும் கடவுள் வாழ்த்துப் பாடலுடன் பதிற்றுப்பத்தை அறிமுகம் செய்கிறது. கிடைக்கப்பெற்ற எட்டுப் பத்திலும்கூட உரைகள் சிதைந்தும் மூலங்கள் பிறழ்ந்தும் காணப்படுகின்றன. இந்த எட்டுப்பத்திலும் கிடைக்கப்பெறாத பாடல்கள் சில தொல்காப்பியப் பொருளதிகார உரையில் நச்சினார்க்கினியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது. திருக்குறள், பதிற்றுப்பத்து, புறநானூறு, மதுரைக்காஞ்சி ஆகிய நூல்களில் இருந்து மேற்கோள் இடம்பெற்றுள்ளது. பாடியோர் பாடப்பட்டவர் குறிப்புகள் காணப்படுகின்றன. இந்நூலுக்கான பழையவுரை இன்றியமையாத இடங்களில் பதப்பொருளை இனிது விளக்கி சொல்முடிபு பொருள்முடிபுகளைத் தருவனவாக உள்ளன. நேமிநாதத்திற்குரிய மற்றொரு பெயரான சின்னூல் என்பதனைப் பழையவுரையாசிரியர்தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். இதனால் அவருடைய காலம் நேமிநாத ஆசிரியரான குணவீர பண்டிதர் காலத்திற்குப் பிற்பட்டதாக இருக்கலாம் என எண்ண இடமளிக்கிறது. துறை, வண்ணம், தூக்கு ஆகியவை இடம்பெற்ற பாடல்களின் விவரங்கள் முகவுரைப் பகுதியால் நன்கு விளங்குகின்றது.

ஐங்குறுநூற்றுக்கு அமைந்த பழையவுரைப் பதிப்பு முகவுரை 'சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்.... என்னும் பாடலைக் கடவுள் வாழ்த்தாகக் கொண்டு தொடங்குகிறது. நூலானது சிவபெருமானுடைய

துதிப்பாடலைக் கடவுள் வாழ்த்தாகக் கொண்டுள்ளது. இதன் பழையவுரை, பதவுரையுமன்று; பொழிப்புரையுமன்று; அகத்திணை நூல்களுக்கேயுரிய உள்ளுறையுவமம்; இறைச்சிப்பொருள் முதலியவற்றைப் பெரும்பாலும் நலமுற விளக்கிச் சிலசில இடத்து மட்டும் திரிசொற்களின் பொருளைப் புலப்படுத்திச் சிறுபான்மை இலக்கணக் குறிப்பையும் சொன்முடிபு பொருண்முடிபுகளையும் பெற்றுள்ளது. சசகூஆம் பாடலுக்கு மேலுள்ளவற்றிற்குக் கையெழுத்துப் பிரதியில் இவ்வுரை காணப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். ஐங்குறுநூற்றின் 129, 130-ஆம் செய்யுட்கள் ஒரு பிரதியிலும் காணப்படவில்லை. 419, 460-ஆம் செய்யுட்களின் இரண்டாம் அடிகளில் சீர்கள் குறைந்து காணப்படுகின்றன. உ.வே.சா., முயன்று சேகரித்த உரைப்பிரதிகளில் மூன்று பிரதிகள் மூலமும் கருத்துரையும் உள்ளவை ஆகும். இவற்றை ஒப்பு நோக்கியே உ.வே.சா., ஐங்குறுநூற்றைப் பதிப்பித்தார். ஐங்குறுநூற்றுக்கு அமைந்த பழையவுரைப் பதிப்பு முகவுரை அமைப்பு, நூலமைப்பு, உரை அமைப்பு, ஆராய்ச்சிக்குக் கிடைக்கப்பெற்ற கையெழுத்துப் பிரதிகள் போன்றவைகளின் விவரங்களைக் குறிப்பிடுகின்றது.

அகநானூற்றுப் பழையவுரைப் பதிப்பு வரலாறு, நூலின் முகப்புப் பக்கம் ‘அகநானூறு மூலமும் உரையும் முதற்பகுதி’ என்று வெளிவந்துள்ளமையைச் சுட்டுகிறது. இரண்டாவது பக்கம் உள்ளடக்கப் பகுதி அமைந்துள்ளது. அகநானூற்றுக்கு அமைந்த முதல் இரண்டு பதிப்புகளின் முகப்புப் பக்கங்கள் மட்டுமே கிடைத்துள்ள நிலையில் மூன்றாம் பதிப்பின் முகவுரை மிகவும் இன்றியமையாததாக அமைகின்றது என்ற செய்தியையும் சுட்டுகிறது. மு.இராகவையங்கார் அளித்த அரிய ஆராய்ச்சியுரையைக் கொண்டு பாடினோர் வரலாறு, அரசர் முதலியோர் வரலாறு, ஆராய்ச்சிக் குறிப்பு, அபிதானக் குறிப்பு, பொருட்குறிப்பு முதலிய பலவற்றுடன் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டுள்ளார், வே.இராஜகோபாலையங்கார். பாடல்களில் உள்ள சொற்களும் தொடர்களும் சிதைந்தும் பொருட் பொருத்தமின்றியும் அடி நிறம்புறாதும் காணப்பட்டமையால் மு.இராகவையங்கார், ரா.ராகவையங்காரின் உதவியை நாடுகின்றார். இதனால் அகநானூற்று ஆராய்ச்சி நிறைவடைந்து வே.இராஜகோபாலைங்காரால் பதிப்பிக்கப்படுகிறது. இந்நூல் ஐந்து

பிரதிகளை ஒப்பிட்டுத் திருத்தம் செய்யப்பட்டது. இவ்வுரை எழுதிய பழையதோர் ஏட்டின்கண் கொல்லம் 460 என்று வரையப்பட்டிருந்தது கொண்டு இவ்வுரையாளர் இற்றைக்கு அறுநூற்று முப்பத்தெட்டு வருடங்கட்கு முற்பட்ட காலத்தவரென்பது மட்டிலறியலாவது நச்சினார்க்கினியர் காலம் கி.பி.14–ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகையால், இவ்வுரைகாரர் நச்சினார்க்கினியர்க்கு முந்தியவர் என்று கொள்ளலாகும் என்று அகநானூற்றின் முகவுரைப்பகுதி சுட்டுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.88
2. அ.மு.பரமசிவானந்தம், தமிழ் உரைநடை வரலாறு, ப.78
3. தமிழண்ணல், தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள், பாகம்-2, ப.102
4. தொல்.பொருள்.செய்.நூ.1429
5. இரா.மோகன், ந.சொக்கலிங்கம், உரை மரபுகள், ப.9
6. குளோரியா சுந்தரமதி, டாக்டர்.உ.வே.சா., சங்க இலக்கியப் பதிப்புகள், ப.9

7. இரா.சுப்பிரமணியன், மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை வாழ்வும் இலக்கியமும், ப.26

8. அ.சதீஷ், சங்க இலக்கிய உரைகள், ப.182

9. சிலப்பதிகாரம்.17:31, அடியார்க்குநல்லார் உரை, ப.455

10. சிலப்பதிகாரம்.4:81, அடியார்க்குநல்லார் உரை, ப.127

11. உ.வே.சாமிநாதையர், என் சரித்திரம், ப.549

12. தொல்.பொருள்.புறத்.நூ.80

13. கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழ்நூற் பதிப்புப் பணியில் உ.வே.சா. பாடவிமர்சனவியல் நோக்கு, ப.69

14. அறிவுச்சுடர், தமிழ்த்தொண்டர்கள், ப.69

15. வ.சுப.மாணிக்கம், சங்கநெறி, ப.121

16. அ.பாண்டுரங்கன், சான்றோர் கவி, ப.46

17. தொல்.பொருள்.நச்.புறத்.நூ.63

18. மேலது, நூ.12

19. மேலது, கற்.நூ.39

20. மேலது, நூ.26

21. மு.அருணாச்சலம், தமிழ் இலக்கிய வரலாறு பதிமூன்றாம் நூற்றாண்டு, ப.87

22. கோ.இளவழகன்(ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், செய்.நூ.212

23. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.378

24. கோ.இளவழகன்(ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், செய்.நூ.87

25. சு.சண்முகசுந்தரம், கலை இலக்கியப் பண்பாட்டிற்கான காலாண்டிதழ், ஜுலை-செப்டம்பர்-2016, ப.94

26. பூ.சொல்விளங்கும் பெருமாள், உ.வே.சா. பதிப்புப்பணி ஓராய்வு, பக்.230-231

27. அ.மு.பரமசிவானந்தம், தமிழ் உரைநடை வரலாறு, ப.102

## இயல் - இரண்டு

## புறநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் பதிற்றுப்பத்து, புறநானூறு இரண்டும் முழுவதும் புறத்திணை பற்றிய செய்திகளைக் குறிப்பிடுவதாக அமைகிறது. இந்நூல்களுள் பதிற்றுப்பத்து என்னும் நூல் சேர அரசர்களை மட்டுமே

பாடக்கூடியது. புறநானூறு மூவேந்தர்களையும் குறுநிலமன்னர்களையும் தலைவர்களையும் பாடுவதாக அமைந்த பாடல்களின் தொகுப்பாக விளங்குகின்றது. புறநானூற்றின் 266 பாடல்களுக்கு மட்டும் பழையவுரை காணப்படுகிறது. இதில் 265-ஆம் பாடலின் உரை சிதைந்துள்ளது. பலவகையிலும் சிறந்த இவ்வுரை நூல் முழுமையும் கிடைக்கப் பெறாமல் போனது வருந்தத்தக்க ஒன்றாகும். பாட்டின் போக்கில் ஆற்றொழுக்காகவும் ஒரே தொடர்புபடவும் அமைந்த இப்பழையவுரை பல இடங்களில் பொருள் உணர்த்துவதற்கு இயலாததாக உள்ளது. இந்நூலை 1894ஆம் ஆண்டு உ.வே.சா., பதிப்பித்து வெளியிட்டார். அவ்வகையில், புறநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும் குறித்து ஆராயும் விதமாக இவ்வியல் அமைகின்றது.

**புறநானூற்றுப் பழையவுரை**

சங்க இலக்கிய எட்டுத்தொகையில் உ.வே.சா. பதிப்பித்தவை மொத்தம் ஐந்து நூல்கள் ஆகும். அவை அகத்திணை சார்ந்த ஐங்குறுநூறு, அகநானூறு என்ற இரண்டு நூல்களும் புறத்திணை சார்ந்த புறநானூறு, பதிற்றுப்பத்து என்ற இரண்டு நூல்களும் மற்றும் அகமும் புறமும் சார்ந்த நூலான பரிபாடலும் ஆகும். அவற்றுள் புறநானூற்றுப் தொகுப்பையும் பதிப்பையும் குறிப்பிடும் பாண்டுரங்கன், “புறநானூறு பதிற்றுப்பத்துக்கு மாறாகத் தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளை ஆட்சி செய்த மூவேந்தர்களையும் குறுநில மன்னர்களையும் வள்ளல்களையும் வீரர்களையும் வீரத் தாய்மார்களையும போற்றிப் புலவர்களால் வெவ்வேறு காலங்களில் பாடப்பட்ட தனித்தனிப் பாடல்களின் தொகுப்பாக அமைந்துள்ளது. இத்தொகை நூலும் டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்களால் முதன்முதலில் 1894-ஆம் ஆண்டில் அச்சு நூலாக வெளியிடப்பட்டது. புறநானூற்றின் வெளியீடு தமிழக வரலாற்று ஆராய்ச்சிக்கு ஓர் உறுதியான அடித்தளம் அமைத்துத் தந்தது”[1] என்று சுட்டுகின்றார். இந்நூலுக்கான பழையவுரை 266 பாடல்களுக்கு மட்டுமே கிடைக்கப்பெறுகின்றது. இதனைப் பற்றி “இப்பழையவுரையானது நூல் முழுமைக்கும் கிடைக்கவில்லை. மூலத்தை உரையோடு ஐயரவர்கள் பலமுறை அச்சிட்டார்கள். அவர்களுக்குக் கிடைத்த மூல ஏடுகள் 8; உரைப்பிரதிகள் 13. உரைப்பிரதி ஒன்று மட்டும் 266 பாடலுக்கு உரை உடையது. ஏனையவை யாவும் குறைவான பாடல்களே கொண்டவை. புறநானூறு 400 பாடலுடைய நூலாயிருந்தும், அதன் 267-8 பாடல்கள் எப்பிரதிகளிலும் கிடைக்கவில்லை. உரை 266ஆம்

பாடலோடு நின்று விடுகிறது”[2] என்று மு.அருணாச்சலம் சுட்டுகின்றார். சங்க இலக்கியப் பதிப்புப் பணியில் உ.வே.சாவின் அதிக உழைப்பினை உறிஞ்சிய நூல் புறநானூறு ஒன்றே ஆகும். இதனைப் பதிப்பிக்கும்பொழுது ஏறத்தாழ 16 ஓலைச்சுவடிகளை ஒப்பிட்டுப் பார்த்திருக்கின்றார் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். புறநானூற்றில் சுட்டப்பெற்றுள்ள ஊர்களுக்கு எல்லாம் சென்று ஏதேனும் சான்றுகள் கிடைக்குமா என்று தேடினார். பாடினோர் வரலாறு, பாடப்பட்டோர் வரலாறு, திணை துறை ஆகியவற்றின் விளக்கம், அணிகலன்கள், ஆயுத வகைகள், உடை வகைகள், உணவுப் பழக்கம், அரிய பழக்கவழக்கங்கள், பண்டைய கல்வி நிலை போன்ற அறுபத்திரெண்டு செய்திகளைத் தொகுத்து அனைவரையும் படிக்கச் செய்யும் வகையில் பதிப்பித்து வெளியிட்டார். புறநானூற்றுப் பழையவுரையின் சிறப்பை, “இவ்வுரையின்றேல் புறநானூற்றை நயமுணர்ந்து சுவைக்கும் வாய்ப்பு இல்லாமற் போயிருக்கும். 1947இல் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை உரையெழுதினார். அவ்வுரையைப் பதிப்பித்தவர் ‘பழையவுரை மிகச் சிறந்த உரையாதலின் அதனைச் சிறிதும் மாற்றாது’ இ∴து எழுதப்பட்டதென்பர்”[3] என்று கு.வெ.பாலசுப்பிரமணியன் சுட்டியுள்ள சான்று மிகவும் குறிப்பிடத்தக்கது ஆகும். புறநானூற்றுப் பழையவுரையில் பல்வேறு வகையான உரைமரபுகள் பின்பற்றப்பெற்றுள்ளன. அவை, துறை விளக்கல் முறை, மரபு, வழக்கு, பழஞ்செய்யுட்பகுதியை உரைநடையாக உரைத்தல், சொல் வருவித்துரைத்தல், பெறப்பட்டவை கூறுதல், சொற்பெய்துரைத்தல், மாறிக் கூட்டுதல், சொல்நடை, மாறுபாடு நீக்கல், வகுத்துக் கூறல், வரலாற்றுச் செய்திகள், இன்னாமைக் குறிப்பு, உவமை விளக்கல், குறிப்புமொழி, குறிப்பாலறிந்த பொருள், பயன் நினைவுறுத்தல், இன்ன சிறப்பென்றுரைத்தல், இலக்கணக்குறிப்பு கூறுதல், துறைப்பொருத்தம் கூறுதல், அணிநயம் கூறுதல், நயங்கள், கருத்துரைத்தல் போன்றவைகள் ஆகும். இவை அனைத்தும் புறநானூற்றுப் பழையவுரையின் உரைப்போக்கினையும் அதன் திறத்தினையும் எடுத்து விளம்புவனவாக உள்ளன.

**துறை விளக்கல் முறை**

சங்க இலக்கியப் புறப்பாடல்கள் துறைகளை மையமாகக் கொண்டு யாக்கப்பட்டுள்ளன. இந்தக் துறைகள் நடைபெறும் சூழல்தான் பாடல்கள் உருவாகுவதற்குக் காரணமாக அமைகின்றன. சங்க இலக்கியப் புறநானூற்றுப் பாடல்களுக்கு ஆரம்ப காலக்கட்டங்களில் எழுந்த உரைகளில் சில பாடல்களுக்கு

மட்டுமே துறையினை விளக்கும் முறை காணப்படுகின்றது. அவை புறநானூறு 62, 72, 173, 258 ஆகிய நான்கு பாடல்கள் ஆகும்.

புறநானூற்றின் 62ஆம் பாடலில் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பல்தடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரைக் கழாத்தலையார் பாடியது. ‘‘வேந்தர் மாய்ந்தனர் குடை துளங்கின முரசு ஒழிந்தன அமர் உடன் வீழ்ந்தது பெண்டிரும் மார்பகம் பொருந்தி அமைந்தனர். நாற்ற உறவினரும் விருந்து பெற்றனர். இவ்வாறான பின்பும் யாம் அமரினை மேற்கொண்டு பொருது வெல்வேமென்று தாந்தாம் நினைந்த நினைவு எவ்வண்ணமாவதென்று தம் நெஞ்சோடு கூறிப் பின் பொலிக புகழேயென அவ்வரசர் கிடந்தவாறு கண்டு கூறியவாறு’’(புறநா.பழைய.ப.151) என்று கழாத்தலையாரின் துறை விளக்கல் முறையினைப் பழையவுரையாசிரியர் சுட்டுகிறார்.

புறநானூற்றின் 72ஆம் பாடல் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பாடியது. ஆகவே இப்பாடலின் பாட்டுடைத் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் ஆகின்றான். புறநானூற்றின் பழையவுரையாசிரியர் இத்துறையினைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது ‘‘உளையக் கூறியதனைத் தம்மிடத்திருந்து கூறியதாகவும் சிறுசொற் சொல்லியதனைப் போர்க்களத்து எதிர்ப்பட்டுக் கூறியதாகவும் கொள்க’’ (புறநா.பழைய.ப.172) என்று உரை பகர்கிறார்.

உளைய என்ற சொல் ‘வெறுப்ப’[4]

என்று பொருள்படும்.

சிறுசொல் என்பது ‘பழிச்சொல்’ ‘இழிசொல்’[5]

எனப் பொருள்படும். இப்பாடலின் பாட்டுடைத் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் தன்னுடைய ஆட்சிப் பொறுப்பினை ஏற்ற காலத்தே மிகவும் இளையவனாக இருந்தான். இத்தருணத்தில் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கும் சிற்றரசரும் பேரரசருமாகிய எழுவருக்கும் தலையாலங்கானம் என்னுமிடத்தில் போர் உண்டாயிற்று. இவன் இளையவன் என்று மற்றவர்கள் இகழ்ந்தனர். இதனால் பாண்டியன் நெடுஞ்செழியனுக்குச் சினம் எழுந்தது. உடனே

தனது படையே போரிட்டு வெற்றி வாகை சூட வேண்டும் என்று முடிவு செய்தான். அப்பொழுது சில நெடுமொழிகள் கூறிப் பாடலுற்றான். அவை அழகிய பாட்டாய் வெளிவந்தன. இது பாண்டியன் நெடுஞ்செழியனின் நல்லிசைப் புலமையையும் மாங்குடிமருதனார் போன்ற சான்றோர்களிடம் நட்புக் கொண்டிருந்தமையையும் புலப்படுத்தும். இதிலிருந்து பாண்டியன் நெடுஞ்செழியனின் துறை விளக்கமானது, பகைவர்களை வெறுப்பாகக் கூறியவை மனதில் இருந்து வெளிப்பட்டனவாகவும் பழிச்சொல் சொல்லியமை போர்க்களத்து எதிர்ப்பட்ட பின்பு கூறியதாகவும் கொள்ள வேண்டும்.

புறநானூற்றின் 173ஆம் பாடலில் சிறுகுடிக்கிழான் பண்ணனைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாடியது. இப்பாடலில் துறை விளக்கம் நேரடியாக அமையப்பெற்றிருந்தாலும் பாடலின் கருத்து பாணன் ஒருவன் பண்ணன் ஒருவனின் கொடைத் தன்மையைப் புகழ்ந்து கூறுவதாக அமைந்துள்ளது. இதனைப் பழையவுரையாசிரியர், ‘‘இது பரிசில் பெறப் போகின்றான் வருகின்றவரைக் கண்டு வினவுவான் பண்ணனது இயல்பு கூறி வாழ்த்தியவாறு’’ (புறநா.பழைய.ப.322) என்று விளக்குகிறார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை நோக்கச் சிறுகுடிக்கிழான் பண்ணன் எளியவனாகத் திகழக் கூடியவன். அக்கிள்ளிவளவன் பண்ணனிடம் பேரன்பு கொண்ட நட்பினைச் செய்தான். அதன் விளைவாக பண்ணனின் கொடைப் பண்பினை வாழ்த்தி தமிழ்ப்பாடல் ஒன்று பாடினான். அதன்மூலம் உலகமெல்லாம் பண்ணனின் புகழைப் பரவச் செய்தான். இச்சிறுகுடிக்கிழான் பண்ணன் மலைபோலக் குவிக்கும் சிறந்த மறப்பண்பு பெற்றவனாக இருப்பினும் தன்மீது பேரன்பு கொண்டவனாக இருப்பினும் அவற்றை விதந்து கூறவில்லை. பண்ணனது உள்ளன்பினை வெளிப்படுத்தக் கருதி அவனின் கொடைத் தன்மையைப் புகழ்ந்து பாடினான். இதனைக் கிள்ளிவளவன் தான் கூறுவதுபோல் கூறாமல் பரிசில் பெற்று வந்த பாணன் பண்ணனின் கொடைத்தன்மையைச் சிறப்பித்துக் கூறுவதாகக் குறிப்பிடுகிறான்.

புறநானூற்றின் 258-ஆம் பாடலின் துறைக்குறிப்பு ‘‘இவன் நிரை கொள்ளச் செல்கின்றமை கண்டார் கள்விலையாட்டிக்குக் கூறியது’’ (புறநா.பழைய.ப.435) என்று

அமைந்துள்ளது. இத்துறைக்குறிப்பில் ‘இவன்’ என்பது இராயசூயம் பெருநற்கிள்ளியையும் ‘கண்டார்’ என்பது உலோச்சனாரையும் குறித்து நிற்கின்றது.

உலோச்சனார் என்பவர் சோழநாட்டுச் சான்றோர்களுள் ஒருவராவார். இவர் நெய்தல் நிலத்தைப் பற்றி இனிமையாகப் பாடக்கூடியவர். எனவே உலோச்சனாரை நெய்தல் நிலத்தைச் சேர்ந்தவர் என்று கூறுவர். கண்டவாயில் என்பது இவரது ஊர் ஆகும். இவர் காலத்தே சோழன் இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளி உறையூரில் ஆட்சி செய்து வந்தான். அவ்வரசனை, உலோச்சனார் ஒருமுறை சென்று கண்டார். பெருநற்கிள்ளியும் உலோச்சனாரைச் சேய்மை நாட்டில் இருப்பவரென அறிந்து மணியும் பொன்னும் முத்தும் பிறவும் உடையும் பிறவும் நிரம்பத் தந்து மகிழ்வித்தான். இவ்வண்ணம் சிறப்புற்று விளங்கிய இவர் ஒருமுறை பகைவர் நாட்டிற்குச் சென்று அவர்தம் நிரைகளைக் கவர்ந்து வரும் திறத்தைக் கண்டார். அவன் மறுபடியும் வேற்று நாட்டிற்கு நிரைகவரச் செல்லக் கருதினான். இவை குறித்து வீரரிடையே உண்டாட்டு நிகழ்ந்தது. உலோச்சனாரும் அங்கே இருந்தார். அவர் பெருநற்கிள்ளியின் வீரருக்குக் கள் வழங்குவோனைப் பார்த்துக் கூறுவதுபோல “கள் வழங்குபவனே முன்பு இத்தலைவன் கந்தார நாட்டிற்குள் புகுந்து நிரை கவர்ந்து கொணர்ந்து கள்விலைக்கு ஈடாக வழங்கினான். இன்றும் அவ்வாறே செல்லச் சமைந்துள்ளான் சென்றுள்ளானெனவே கூறலாம். நின்பால் கள்ளை வழங்குவையாயின் முடிவில் அவற்கு இல்லையாய்விடும் அவன் ஆநிரைகளைக் கொணருங்கால், விடாய் மிக உடையனாவன். அப்போது வழங்குவதற்கு முதுகட் சாடியொன்றைப் பேணிவைப்பாயாக”[6] என்று கூறுகின்றார். இவ்வாறு பாடலில் புதைந்து கிடக்கக்கூடிய பொருண்மையை விளக்கி உரைக்கும் தன்மை பழையவுரையாசிரியரிடம் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

**வழக்கு**

‘வழக்கு’ என்பது மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று. வழங்கப்படுகின்ற சொல் செயல்முறை ஆகும். ஒரு நூலின் உரையினைப் படிப்போர் எளிதில் புரிந்து கொள்ள வேண்டும். அதற்கு ஏற்றாற்போல் உரையாசிரியர் நடைமுறையில் உள்ள சில வழக்காறுகளைச் சொல்லிச் செல்கின்றார். அப்பொழுதுதான் உரையாசிரியர் சொல்ல வேண்டிய கருத்துக்கள் அனைவரையும் சென்றடையும். அபிதான சிந்தாமணி வழக்கு என்பதற்கு,

“வழக்கு 1. உலக வழக்கம், நாடக வழக்கம் என்பன.

2. இது சொற்கள் வழங்கி வரும் வழக்கம். இயல்பு வழக்கு தகுதி வழக்கென இரு விதப்படும். இயல்பு வழக்கு ஒரு பொருளியற் பெயரென பொருளைக் கூறல். அது இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ என மூவகைப்படும். இலக்கணமுடையது இலக்கண நெறியால் வருவது; இலக்கணப்போலி இலக்கணத்தைப்போல் வருவது; மரூஉ- இலக்கணஞ் சிதைந்து மருவியது. தகுதி வழக்கு என்பது ஒரு பொருளிற்கு இயல்பாயுள்ள சொல்லையொழித்துத் தக்க வேறுசொல்லால் அப்பொருளைக் கூறுவது. அது இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என மூன்று வகை. இடக்கரடக்கல் சொல்லத் தகாத மொழியை அடக்கிக் கூறல், பவ்வீ என்றாற்போல்; மங்கலம் அமங்கலத்தை மங்கலமாகக்கூறல், தாலி பெருகிற்று என்றாற்போல்; குழூஉக்குறி- ஒரு கூட்டத்தார் யாதானுமோர் காரணத்தால் வைத்த பெயர், பொன்னைப் பறி என்றாற்போல. உலக வழக்கு உலகத்தாரின் வழக்கம்.

3. இது உலக வழக்கு, செய்யுள் வழக்கு, இயல்பு வழக்கு, தகுதி வழக்கு எனப்படும். உலக வழக்கு உலகத்தார் வழங்கும் சொற்கள், செய்யுள் வழக்கு செய்யுள் வழக்கம், இயல்பு வழக்கு ஒரு பொருளுக்கியல்பாகமைந்த சொல்லையொழித்து தகுதியான வேறு பெயரிட்டு வழங்குவது. இயல்பு வழக்கு இலக்கணமுடையது. இலக்கணப்போலி மரூஉ என மூன்று வகை தகுதி வழக்கு இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என மூன்று வகை”[7] என்று விளக்கமளிக்கிறது.

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி வழக்கு என்பதற்கு “1.மக்களால் பின்பற்றப்படுவதாகவும் பயன்படுத்தப்படுவதாகவும் இருப்பது வழக்கம் that which his current (in) usage. நீங்கள் குறிப்பிடும் பல வார்த்தைகள் வழக்கில் இல்லை. / வழக்கில் உள்ள நடைமுறை இதுதான். 2. மொழி வழங்கி வரும் முறை use of language veriety (of style). பேச்சு வழக்கு, எழுத்து வழக்கு, வட்டார வழக்கு”[8] என்று விளக்கம் கூறுகிறது. கௌரா தமிழ் அகராதி, “வழக்கு – செய்கை, ஈகை, இயங்குகை, நீதி வழக்கம், ஒழுக்கம், நெறி உலக வழக்கு செய்யுள் வழக்கு, இயல்பு வழக்கு, தகுதி வழக்கு”[9] என்று விளக்கம் அளிக்கிறது.

“வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட்கு ஆகலான”[10]

என்னும் நூற்பாவில் வழக்கு என்னும் சொல்லைத் தொல்காப்பியர் சுட்டியிருக்கின்றார்.

‘வழக்கு’ உலக வழக்கு, செய்யுள் வழக்கு என இரண்டு வகைப்படும், என்கிறது நன்னூல். இவற்றுள் உலக வழக்கை,

“(எ-டு) வேற்கை முருகன், கருங் காக்கை

ஓரடையும் ஒரு சினையும் ஒரு முதலுமாகி ஒன்றையொன்று சிறப்பித்து வந்தன”[11] என்ற சான்றுகள் தெளிவுறுத்தும். அடுத்ததாகச் செய்யுள் வழக்கினைக் குறிப்பிடுகையில்,

“(எ-டு) சிறு பைந்தூவி, கரு நெடுங்கண்

இரண்டடைகள் சினையைச் சிறப்பித்து வந்தன”[12] என்றும் வழக்கைப் பற்றிய விளக்கம் காணப்படுகின்றது.

‘சில இடங்களில் இன்ன உலக வழக்கைக் குறிக்கொண்டது இதுவென்றும் இச்சொல் இன்ன நாட்டவர் வழக்கென்றும் புலப்படுத்துவர்’ என்று உ.வே.சாமிநாதையர் புறநானூற்றுப் பழையவுரையில் குறிப்பிடுகின்றார். இத்தகைய வழக்குச் சொற்கள் புறநானூற்றின் 50, 133, 138, 261 ஆகிய நான்கு பாடல்களுக்கு அமைந்த பழையவுரைகளில் இடம்பெற்றுள்ளன. புறநானூற்றில்,

“பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்டி” (புறநா.50:4)

என்னும் அடி இடம்பெற்றுள்ளது. இவ்வடியில் வரும் உழிஞை என்ற சொல்லுக்கு, “பொற்றளிரையுடைய உழிஞையுடனே பொலியச் சூட்டப்பட்டு” என்று உரை கூறிவிட்டு அதன் விசேடவுரையில், “உழிஞை – கொற்றான்; அது குடநாட்டார் வழக்கு” (புறநா.50.பழைய.ப.121) என்று சுட்டுகிறார், பழையவுரையாசிரியர்.

“வடவேங்கடம் தென்குமரி
ஆஇடைத்
தமிழ்கூறும் நல்உலகத்து”[13]

என்று தமிழகத்தின் எல்லைகளைத் தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரம் வரையறுத்துச் சுட்டுகிறது. ‘குண’ என்பது கிழக்குப் பகுதியையும் ‘குட’ என்பது மேற்குப் பகுதியையும் குறிக்கும். தமிழ்நாடு தெற்கில் குமரியையும் வடக்கில் திருவேங்கடத்தையும் கிழக்கிலும் மேற்கிலும் கடல்களையும் எல்லைகளாகக் கொண்டிலங்குகின்றது. தமிழ்நாட்டின் குடக்குப் பகுதியைச் சேரநாடு என்றும் அழைப்பர்.

“உழிஞை - எண்வகை மாலைகளுள் ஒன்று. கொற்றான் - சிறுபூளை”[14] என்று கௌரா தமிழகராதி ‘உழிஞை’ என்பதற்கு விளக்கம் அளிக்கின்றது. இதிலிருந்து உழிஞைப் பூவிற்கு ‘கொற்றான்’ என்ற இன்னொரு பெயர் உண்டு என்பதையும் இவ்இரண்டையுமே குடநாட்டார் பயன்படுத்துவர் என்பதையும் பழையவுரையாசிரியரின் உரை நன்குணர்த்தும்.

“விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்” (புறநா.133:4)

என்ற அடிக்கு ‘மணம் வளரும் கூந்தலிலே வரையிடத்துக் காற்று வந்தசைப்ப’ என்று உரை கூறிவிட்டு அதன் விசேடவுரையில் “விரைவளர் கூந்தல் வரைவளி யுளர’ என்றது ‘கொண்டைமேற் காற்றடிக்க’ என்பதொரு வழக்கைப் பற்றி நின்றது”(புறநா.பழைய.ப.251) என்கிறார். பழையவுரையாசிரியர் குறிப்பிடும் கொண்டை என்ற சொல் மக்களின் பேச்சு வழக்கில் இன்றளவும் பயன்படுத்தப்பட்டு வருவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

“கிளிமரீஇய வியன்புனத்து
மரனணி பெருங்குர லனைய னாதலின்” (புறநா.138:9-1)

என்ற அடிகளுக்கு, “‘கிளி மருவிய அகன்ற புனத்தின்கண் மரப்பொதும்பின்கண் வைத்த பெரிய கதிரையொப்பனாதலின்’ என்று விளக்கவுரையிலும் ‘கிளி…….குரலனையன்’ என்றது கிளியீடு வாய்த்தாற்போல்வனென்னும் வழக்குப் பற்றி நின்றது” (புறநா.பழைய.பக்.259-260) என்று விசேடவுரையிலும் பழையவுரையாசிரியர் சுட்டுகிறார்.

“கிளியீடு - கிளியினால் பொந்துகளில் சேர்த்து வைக்கப்பட்ட கதிர்கள்”[15] என்று கௌரா தமிழ் அகராதி பொருள் கூறுகின்றது. “இங்கு ‘கீழ்செய் தவத்தால்

கிளியீடு’ என்ற திருவாசகத்தொடர் ஒப்புநோக்கத்தக்கது. தேவர்களும் அசுரர்களும் பொருவழிப்பகலும் இராப்போல இயங்கித் தாம் போர் செய்தற் பொருட்டு அசுரர் ஞாயிற்றைக் கரந்தார்கள். ஞாலம் அதனால் உள்ள பருவரல் தீரத் திருமால் அதைக் கொண்டு விட்டதொரு கதை என்கிறார்’’[16] என்று பழையவுரையாசிரியரை மு.அருணாச்சலம் சுட்டிக் காட்டுகிறார். புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் பயன்படுத்தியுள்ள கிளியீடு சொல்லாட்சியே இன்று பணத்தினைச் சேமிக்கும் பொருட்டுப் பயன்படுத்தப்படும் முதலீடு, காப்பீடு போன்ற சொற்கள் உருவாக்கத்திற்குக் காரணமாக இருக்கக் கூடும்.

‘‘நெய்யுலை சொரிந்த மையூன் ஓசை’’ (புறநா.261:8)

என்ற அடியில் வரும் ஓசை என்ற சொல்லுக்கு ‘‘ஓசையென்றது ஆகுபெயரான் ஓசையையுடைய கறியை இ∴து ஒரு திசைச்சொல்’’(புறநா.பழைய.ப.439) என்று சுட்டுகிறார், பழையவுரையாசிரியர். இதற்கான விளக்கவுரையில் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ‘‘ஓசையுடைமை பற்றிக் கறியெனப்பட்டதாயினும் ஒரு நாட்டார் கறியை ஓசையென்றே வழங்குகின்றனரென்பார். ‘இ∴தொரு திசைச்சொல்’ என்று உரைகாரர் குறிக்கின்றார்’’[17] என்று சுட்டுவதன்வழி அறிய இயலும். ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை, உரைகாரர் என்று குறிப்பிடுவது புறநானூற்றுப் பழையவுரையாசிரியரை ஆகும். இவர் தாம் வாழ்ந்த காலத்தில் மக்கள் பயன்படுத்திய வழக்குச் சொற்களை உரையிடையே சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**மரபு**

மரபு என்பது ஒவ்வொரு பொருளுக்கும் ஆன்றோர் வழங்கிய சொற்களை அவர்கள் வழங்கிய முறைப்படியே வழங்குவது ஆகும். மரபியல், மரபினம், மரபுக்கூறு, மரபுக்கலை, மரபுத்தொடர், மரபுநோய், மரபணு என்று பல்வேறு துறைகளில் இன்று மரபணு என்ற சொல் பயன்பட்டு வருகின்றது. தொல்காப்பியர் மரபு என்ற சொல் சிறப்பான சொற்களை ஆளும் முறை என்று குறிப்பிடுகிறார்.

‘‘மரபே தானும்
நாற்சொல் இயலான் யாப்புவழிப் பட்டன்று’’[18]

இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச் சொற்களால் பாடல்களை யாப்பது மரபு என்பதை இந்நூற்பா உணர்த்தும்.

> ‘‘எப்பொருள் எச்சொல்லின் எவ்வாறு உயர்ந்தோர்
> செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே’’[19]

என்ற அடிகளின்வழி ‘அறிவுடையோர் எந்தச் சொல்லை எந்த முறைப்படி குறிப்பிட்டார்களோ அதே முறைப்படி வழங்குதல் மரபாகும்’ என்கிறார், பவணந்தி முனிவர். சொல்லையும் பொருளையும் மட்டுமல்லாது அவர்கள் மேற்கொண்ட செயல்களையும் அவ்வாறே பின்பற்றுவதும் மரபு ஆகும்.

சிவபெருமான், திருமால், பலதேவர், முருகக் கடவுள் முதலியவர்களைப் பற்றிய செய்திகள் வருமிடங்களில் அவ்வக் கடவுளின் அன்பர்களை வழங்கும் மரபு பிழையாமல் உரை வகுக்கின்றார், பழையவுரையாசிரியர். சிவபிரானுக்குரிய பொருள்களைத் திரு என்னும் அடை கொடுத்துத் ‘திருநுதல்’ ‘திருச்சடை’ ‘திருமுடி’ என்றும் குறிப்பிடுகின்றார். புறநானூற்றின் முதற் பாடலாக அமைந்துள்ள கடவுள் வாழ்த்துப்பாடல் சிவபெருமானைத் துதித்துப் போற்றும் வகையில் அமைந்துள்ளது.

> ‘‘கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
> வண்ண மார்பிற் றாருங் கொன்றை
> ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
> சீர்கெழு கொடியு மவ்வே றென்ப
> கறைமிட றணியலு மணிந்தண் றக்கறை
> மறைநவி லந்தணர் நுவலவும் படுமே
> பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
> தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்’’ (புறநா.1:1-9)

என்னும் அடிகளின் தொடக்கமாக ‘கண்ணி’(1) என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இச்சொல்லுக்கு உரையெழுதும் பழைய உரையாசிரியர் ‘திருமுடிமேற் சூட்டப்படும் கண்ணி’ என்கின்றார். இரண்டாம் அடியில் உள்ள ‘மார்பில்’(2) என்ற சொல்லுக்கு ‘திருமார்பு’ என்றும், ஐந்தாம் அடியில் வரும் ‘மிடறு’(5) என்ற சொல்லுக்கு ‘திருமிடறு’ என்றும், ஒன்பதாம் அடியில் வரும் ‘பிறைநுதல்’(9) என்ற சொல்லுக்கு ‘பிறை திருநுதல்’ என்றும் உரை கூறுகின்றார். இக்கருத்துடன் பொருந்துவதாய் புறநானூற்றின் 56-வது பாடலுக்கான உரையில், ‘திருமால் மேனியைத் திருமேனி

யென்றும், பலதேவரை நம்பி மூத்தபிரானென்றும் அவரது நிறத்தைத் திருநிறமென்றும் முருகக் கடவுளை பிள்ளையார் என்றும் முன்னோர் வழங்கியுள்ள செய்தியும் சுட்டத்தக்கதாகும். இவை முன்னோரின் மரபு பிழையாமல் பழையவுரையாசிரியர் உரை வரைந்தமைக்குச் சான்றாக அமைகின்றன.

**பழஞ்செய்யுட் பகுதியை உரைநடையாக உரைத்தல்**

பண்டைக் காலத்து எழுந்த சங்கத் தமிழ் நூல்களுக்கு உரை எழுதிய இடைக்கால உரையாசிரியர்கள் பழஞ்செய்யுட் பகுதிகளை உரைநடையாகச் கூறியுள்ளனர். இது அவ்வுரையாசிரியர்களின் பன்னூல் புலமைக்குச் சான்றாக அமைகின்றது.

“நிற்றிறஞ் சிறக்க” (புறநா.6:10)

என்ற சொற்களுக்கு உரையெழுதும் பழையவுரையாசிரியர், “படை குடி முதலிய கூறுபாடுகள் சிறக்க” (புறநா.பழைய.ப.18) என்று சுட்டுகிறார். இது

“படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு”[20]

என்னும் திருக்குறளை நினைவிலிருத்தி உரை எழுதியிருக்கும் தன்மையைப் புலப்படுத்தும்.

“பல்கதிர்ச் செல்வன்” (புறநா.34:18)

என்ற தொடருக்கு, “‘வாழ்நாட்கு அழகாகிய பல்கதிரையுடைய செல்வன்’ எனப் பழையவுரையாசிரியர் உரை வரைகின்றார். இவ்வுரையில் வரும் வாழ்நாட்கு அழகாகிய என்பது ‘வாழ்நாட் கழகா வயங்கொளி மண்டிலம்’ (நாலடி.22)” (புறநா.பழைய.ப.89) என்னும் நாலடியாரின் பாடலடியைத் தழுவியதாக உள்ளது.

“புரவலர்” (புறநா.69:2)

என்ற சொல்லுக்கு பழையவுரை “‘ஈத்தளிப்போர்” என்பதாகும். இது ‘இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்கு’ (குறள்.387)” (புறநா.பழைய.ப.164) எனும் திருக்குறளின் கருத்தை ஒட்டியதாக இடம்பெற்றுள்ளது.

"கவிழ்ந்த மண்டை" (புறநா.103:3)

எனும் தொடருக்கு, "ஏலாது கவிழ்ந்த என் மண்டை' என உரை எழுதி இருப்பது புறநானூற்றின் வேறொரு செய்யுளின் அடியாகிய, 'ஏலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை'(புறநா.179:3) என்பதை நினைவூட்டுகிறது. இந்தப் பாடலுக்கான இவ்வடியில், "ஏலாது கவிழ்ந்த எனது இரத்தலையுடைய மண்டையை" (புறநா.பழைய.ப.216) எனப் பொருள் கூறுகிறார்.

"உழுத நோன்பக டழிதின் றாங்கு" (புறநா.125:7)

என்ற அடிக்கான பழையவுரை, "உழுத வலிய பகடு பின் வைக்கோலைத் தின்றாற்போல நினது தாளாற்றலாற் செய்த பொருளை யாவர்க்கும் அளித்துப் பின் நீ விரும்பியுண்ணும் கள் நல்ல அமிழ்தாவதாகுக"(புறநா.பழைய.ப.240) என்று அமைந்துள்ளது. இவ்வுரையில், உவமையை விளக்கும் பகுதி,

"தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு"[21]

என்ற குறளைத் தழுவியதாக அமைந்திருப்பது நோக்கத்தக்கதாகும். இவ்வாறு புறநானூற்றுக்கு உரையெழுதிய பழையவுரையாசிரியர் பழஞ்செய்யுட் பகுதியாகிய திருக்குறள், நாலடியார் ஆகிய நீதி நூல்களின் பாடலடிகளைத் தம் உரையிடையே சுட்டுவதும் அவற்றின் கருத்துக்களை உரையிடையே உரைநடையாகவே சுட்டிச்செல்வதும் உரை மரபாக அமைகின்றது.

**பெறப்பட்டவை கூறுதல்**

புறநானூற்றுப் பாடல்களில் வரும் தொடர்களுக்கு முன்பு கூறப்பட்ட செய்திகளைக் கொண்டு இவற்றால் இன்னவை பெறப்பட்டன என்று வேறு சிலவற்றைக் கூறுவர். புறநானூற்றின் 93 ஆம் பாடலில் அதியமானின் வீரம் ஔவையாரால் சிறப்பித்துப் பேசப்படுகின்றது. அதியமான் தன்னுடைய பேராற்றலால் பொருது பகைவரிடம் புறங்கொடாது விழுப்புண் பெற்றான். அவனிடத்துப் போரிட்ட பகைவர்கள் அனைவரும், அவனது ஆற்றலுக்கு முன் நின்று போரிட இயலாமல் அஞ்சி ஓடினர். அப்பகைவர்கள் வீர சுவர்க்கம் அடைய மார்பில் வடுச் செய்தனர். இதனால், அவர்கள் சுவர்க்கம் அடைந்தனர். இருப்பினும் வீர சுவர்க்கம் அடையாது பகைவர்கள் இறந்த பின்னும் சிறுமை அடைந்தனர். இத்தகைய வீரர்களும் அழிந்து

போனமையின் அதியமானை யார் போரிட்டு வெல்லப் போகின்றனர். இவ்வாறு அதியமானின் வீரத்தைச் சிறப்பிக்க, பகை மன்னர்கள் வீர மரணம் எய்தாத செய்திகளைச் சுட்டிக் காட்டுகின்றார், ஔவையார். இதனைப் பழையவுரையாசிரியர், "சென்றமர் கடத்தல் யாவதென்றதனானும் வாள்போழ்ந் தடக்கலும் உய்ந்தனரென்றதனானும் வந்தோர் பட்டமை விளங்கும்" (புறநா.93.பழைய.ப.200) என்னும் உரை வாயிலாகத் தெளிவுபடுத்துகிறார்.

புறநானூற்றின் 108 வது பாடல் பாரி ஆட்சி செய்யக்கூடிய பறம்பு மலையின் சிறப்பினைச் சுட்டுகின்றது. அம்மலையில் சந்தன மரங்களும் வேங்கை மரங்களும் மிகுதியாகக் காணப்படுகின்றன. பறம்பு மலையில் அடுப்பு எரிப்பதற்குச் சந்தன மரக் கட்டைகள் பயன்படுத்தப்படுகின்றன. அதிலிருந்து வரும் புகையானது வேங்கை மரத்தின் பூங்கொம்பின் இடையே சென்று தங்கி நிற்கும். இத்தகைய இரண்டு மரங்களைத் தவிர வேறு மரங்கள் இல்லை. சந்தன மரத்திலிருந்து எழக்கூடிய புகையினைத் தவிர வேறு பகைவர்களின் தாக்குதலால் ஏற்படும் புகை இல்லை. இதனைப் பழையவுரையாசிரியர், "சந்தனப் புகை வேங்கைமிசைத் தவழும் பறம்பெனவே, இவையொழிய மரமின்மையும், பகைவர் சுடும் புகையின்மையும் கூறியவாராயிற்று" (புறநா.பழைய.ப.221) என்கிறார்.

"பெண்டிரும் தன்பதம் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீரக்கோன் ஆகலின்" (புறநா.151:5-6)

என்ற அடிக்கான சொல் வருவித்துக் கூறும் பழையவுரையில், "பெண்டிரும் தன்பதங் கொடுக்குமெனவே ஆடவரும் தம் தரத்தே களிறு கொடுத்தல் போந்தது" (புறநா.பழைய.ப.151) என்று இடம்பெற்றுள்ளது. இந்தப் பாடலில் இளவிச்சிகோவும் இளங்கண்டீரக்கோவும் ஒருங்கு இருக்கின்றனர். அவ்விடத்திற்குப் பரணர் வருகின்றார். அவர் இளங்கண்டீரக்கோவைத் தழுவுகின்றார். இளவிச்சிக்கோவைத் தழுவவில்லை. இதன் காரணத்தை, "கண்டீரக்கோன் நாட்டில் மலைக்கிழவன் தொலைவில் செல்லினும், மனைக்கிழத்தி இரவலர்க்குப் பிடிகளை நல்கிச் சிறப்புச் செய்வர். ஆதலால் அவனைத் தழுவினேன். நின் முன்னோர் பெண்கொலை புரிந்த நன்னன் ஆவான்; நின் நாடு பாடி வருவார்க்கு கதவு அடைத்து மறுக்கும் தன்மையது; ஆதலால் எம்போல்வர் நின் விச்சிமலையைப் பாடுதல் ஒழிந்தனர்"[22] என்ற செய்தியின் வாயிலாகச் சுட்டுகிறார்.

ஒரு காலத்தில் சோழநாடு அரசனை இழந்து துன்பமுற்றது. அவ்வேளையில் காவிரி பாயக்கூடிய சோழ வளநாடு சிறக்கும்படி மலையமான் செய்த உதவி அளவிடற்கு அரியது. மலையமான் சோழ மன்னனுக்குத் துணையாய் நின்றதோடு அவனிடத்து அன்புடையவனாகவும் இருந்தான். அதனைப் பிறருக்கு உணர்த்தும் பொருட்டுத் தன் கோட்டையில் சோழனுக்குரிய புலி இலாஞ்சியைப் பொறித்து வைத்திருந்தான். இதனால் சோழ நாட்டுக்கும் மலையமானுக்கும் இருந்த தொடர்பு பெறப்பட்டது என்பதை, ‘‘விடர்ப்புலி பொறித்த கோட்டை யென்றதனால் சோழநாடு தொடர்புபட்டு அவனுக்குத் துப்பாதல் தோன்றி நின்றது’’ (புறநா.174.பழைய.ப.326) என்னும் விசேடவுரை உணர்த்தும்.

‘‘யானே பரிசில னென்பதனால் நினக்கு என் குறை முடிக்க வேண்டுமென்பதூஉம், அந்தணரென்றதனால் யான் தருதற் குரியேனென்பதூஉம் கொள்ளப்படும்’’ (புறநா.200.பழைய.ப.361) என்னும் பழையவுரையின் பெறப்பட்டவை கூறுதலாக, விச்சிகோனிடம் சென்று கபிலர் பரம்பு மலையை ஆண்ட தன் நண்பனின் மகளிர் இருவரையும் கொள்வாயாக என்று கூறுகிறார். இதுவே நான் உன்னிடத்து வேண்டும் பரிசிலும் ஆகும். எனக்குக் கொடுக்கும் பரிசிலாக இவர்களையே நீ கொள்ள வேண்டும். அந்தணராகிய நான் பாரி மகளிரைக் கொடுப்பதற்கு தகுதியுடையவன் ஆவேன். இதுவே பழையவுரையின் பெறப்பட்ட செய்தியாக அமைகின்றது.

புறநானூற்றின் 204ஆம் பாடல் வல்வில் ஓரி என்னும் மன்னனைக் கழைதின் யானையார் என்னும் புலவர் பாடியதாக அமைந்துள்ளது. பெரிய கடலாக இருப்பினும் உண்ணும் நீர் வேட்கை அதிகமாக, அதனை எடுத்து உண்ண மாட்டார். ஆவும் மற்ற விலங்குகளும் உண்ட நீர் கலங்கிச் சிறுமை நிலையில் காணப்பட்டாலும் அதனை நாடிச் செல்வர். அதுபோல நாங்கள் பரிசில் பெறுவதற்குப் பரந்துபட்ட கடல்நீர்போல் செல்வம் காணப்படினும் அவர்களை நாடிச் செல்லவில்லை. நீ கொடுக்கும் உள்ளம் படைத்தவன் ஆகலின் நின்னையே நாடி வந்துள்ளோம் என்று கழைதின் யானையார் கூறுகின்றார். இத்தகைய புலவர்களின் எண்ணங்களை, ‘‘பெருங்கடலுண்ணாராகுப நீர்வேட்டோ ரென்பதனாற் செல்வரேயாயினும் வல்லியோ ரல்லார்பாற் செல்லேனென்பதும், உண்ணீர் மருங்கின் அதர் பலவாகு மென்பதனால் நீ வள்ளியை யாகலின் நின்பால் வந்தேனென்பதும் கொள்ளப்படும்’’ (புறநா.பழைய.ப.368) என்று கூறுகிறார், பழையவுரையாசிரியர். இவை

அனத்தும், ஒரு பாடலின் பெறப்பட்டவை கூறுதலைக் குறிப்பிடும் பழையவுரையாசிரியரின் உரைப்போக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததமையை நன்கு புலப்படுத்தும்.

**சொற்பெய்துரைத்தல்**

ஒவ்வொரு சொல்லுக்கும் மூலத்திலுள்ள முறையிலேயே உரை கூறும்பொழுது சில இடங்களில் கருத்தை விளக்குவதற்குரிய சொற்களைக் குறிப்பிடுவது பழையவுரையாசிரியரின் வழக்கமாக இருந்திருக்கின்றது. இவர் சொற்பெய்துரைக்கும் முறைகளை இரண்டு விதமாகக் குறிப்பிடுகின்றார். அவற்றுள் ஒன்று, சொல்லுக்கான பொருளை மட்டும் சுட்டுவதாகவும் மற்றொன்று, சொல்லுக்குரிய பொருளையும் காரணத்தையும் சுட்டுவதாகவும் அமைகின்றது.

முதலில் சொல்லுக்குரிய பொருளை மட்டும் சுட்டும் சொற்பெய்துரைத்தல் முறை அமைகின்றது. கடவுள் வாழ்த்துச் செய்யுளில் இறைவனுடைய திருமிடற்றிலுள்ள கறையை,

‘‘………………… அக்கறை
முறைநவில் அந்தணர் நுவலவும் படுமே’’ (புறநா.1:5-6)

என்ற அடிக்கு, ‘‘அக்கறுப்பு, தான்மறுவாயும் வானோரை உய்யக் கொண்டமையின் வேதத்தைப் பயிலும் அந்தணராற் புகழவும் படும்’’(புறநா.1.பழைய.ப.1) என்று புகழப்படுதற்குரிய காரணங்களைக் குறிப்பிடுகிறார்.

‘‘….. ……… ………. அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே’’ (புறநா.1:9-10)

என்ற அடிக்கு, ‘‘பெரியோன் சூடுதலால் பதினெண் கணங்களாலும் புகழவும் படும்’’ (புறநா.பழைய.ப.2) என உரை கூறியுள்ளார். இப்பழையவுரையில் ‘பெரியோன் சூடுதலால்’ என்னும் சொல்லைப் பெய்துரைக்கின்றார்.

‘‘இருநிலத் தன்ன நோன்மை’’ (புறநா.14:18)

என்ற தொடருக்கு ‘‘துளக்கப்படாமையின் பெரிய நிலம் போன்ற வலியினையும்’’ (புறநா.பழைய.ப.37) எனச் சொற்பெய்துரைக்கின்றார். இப்பாடலில் கபிலர்

செல்வக்கடுங்கோ வாழியாதன் கையினது வலிமையைப் போற்றிப் பாடுகின்றார். இவ்விடத்தில் பழையவுரையாசிரியர் சுட்டியுள்ள 'துளக்கப்படாமையின்' என்பதன் பொருள் "நடுக்கமுறாத பெரிய நிலம் போன்ற வலிமையையும் கொண்டவன்"[23] என்றமைகின்றது.

"நாடன் என்கோ வூர னென்கோ,
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ" (புறநா.49:1-2)

என்பதற்கு "குறிஞ்சி நிலமுடைமையால், நாடனென்று சொல்லுவேனோ? மருதநிலமுடைமையால், ஊரனென்று சொல்லுவேனோ? நெய்தனிலமுடைமையால், ஒலிமுழங்குகின்ற குளிர்ந்த கடலையுடைய சேர்ப்பனென்று சொல்லுவேனோ?" (புறநா.பழைய.ப.120) என்று தொடர்ச்சியாகச் சொற்களை முன்வைக்கின்றார் பழையவுரையாசிரியர். இப்பாடலில் நாடன், ஊரன், சேர்ப்பன் என்றே இடம்பெற்றுள்ளது. ஆனால் பழையவுரையாசிரியர் யார் எந்நிலத்திற்குரிய தலைவன் என்று சொற்பெய்துரைக்கின்றார்.

"மையன்மாலை" (புறநா.67:5)

எனும் சொல்லுக்கு, தமியோராயினோர்க்கு மயக்கத்தைச் செய்யும் மாலைப்பொழுதின்கண்" (புறநா.67.பழைய.ப.159) என்று பொருள் கூறுகிறார், பழையவுரையாசிரியர். 'மையன்மாலை' என்பது மயக்கத்தைச் செய்யும் என்று பொருள்படும். இத்தகைய மாலை யாருக்கு மயக்கத்தைச் செய்யும் என்பதைத் தெளிவாக்க தமியரானோர்க்கு என்ற சொல்லைப் பெய்துரைக்கின்றார். 'தமியராயினோர்' என்பது 'தம் துணையின்றித் தனித்து விடப்பட்டவருக்கு' என்று பொருள் தருகிறது. எனவே பழையவுரையாசிரியர் 'மையன்மாலை' என்ற சொல்லுக்கு உரை கூறும்பொழுது 'தமியராயினோர்' எனும் சொல்லைப் பெய்து உரைத்திருக்கின்றார்.

" …….. ……… ….. பகைவர்
ஓடுகழற் கம்பலை கண்ட" (புறநா.120:19-20)

என்றவிடத்து, "பகைவரது புறக்கொடுத்தோடும் வீரக் கழலினது ஆரவாரத்தைக் கேட்டு நாணிப் பின்செல்லாது கண்டுநின்ற" (புறநா.பழைய.பக்.255-256) என்று உரை கூறுகின்றார்.

இரண்டாவதாக, சில பாடல்களுக்கான சொற்பெய்துரைக்கும் முறைகளில் பழையவுரையாசிரியர் கூட்டியுரைத்தற்குரிய காரணங்களையும் சுட்டிக் காட்டுகின்றார்.

> ''மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
> வீசியோயே ....... .........'' (புறநா.50:11-13)

என்ற அடிகளில் வரும் 'வீசியோயே' என்பதற்கு, ''சாமரத்தாற் குளிர வீசினாய்' என்று உரை கூறிவிட்டு, அதன் விசேடவுரையில் 'முழவுத்தோளோச்சியெனவும், தண்ணென வீசியோயெனவும் கூறியவாற்றால், சாமரையென்பது பெற்றாம்'' (புறநா.பழைய.ப.122) எனக் காரணமும் காட்டுகின்றார். இதற்கான விளக்கமாக, ''சாமரை வீசுவது தண்ணென் காற்றெழுப்புங் குறிப்பினாலாதலால் தண்ணென வீசியோய் என்றார். வெகுட்சியால் வெம்மை செய்தற்குரிய நீ சாமரையால் தண்ணென வீசினாய் என்பதாம்''[24] என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை குறிப்பிடுகிறார்.

> ''முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளி னேனே
> ஆழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே
> பாழூர்க் கிணற்றிற்றூர்கவென் செவியே'' (புறநா.132:1-3)

என்னும் அடிகளுக்கு, ''யாவரினும் முன்னே நினைக்கப் படுமவனைப் பின்பே நினைத்தேன் யான்; அவ்வாறு நினைந்த குற்றத்தால் எனதுள்ளம் அமிழ்ந்திப் போவதாக; அவனையன்றிப் பிறரைப் புகழ்ந்த நாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக; அவன் புகழன்றிப் பிறர் புகழைக் கூறக் கேட்ட எனது செவியும் பாழ்பட்ட ஊரின்கட் கிணறு போலத் தூர்வதாக' என்று உரை வகுக்கின்றார். அத்துடன், முன்னுள்ளுவோனைப் பின்னுள்ளினேனே உள்ளம் ஆழ்தற்குக் காரணங் கூறினமையால், பிறரைப் புகழ்ந்த நாவெனவும், பிறர் புகழ் கேட்ட செவியெனவும், ஏனையவற்றிற்கும் காரணம் வருவித்து உரைக்கப்பட்டது'' (புறநா.பழைய.ப.250) என்று விசேடவுரையில் சொற்பெய்துரைத்தமைக்குக் காரணமும் உரைக்கின்றார், பழையவுரையாசிரியர்.

**மாறிக் கூட்டுதல்**

புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் பாடல்களின் அடிகளை மாறிக் கூட்டியுரைக்கும் முறைமையைத் தம் உரையிடையே குறிப்பிட்டுள்ளார். இத்தகைய

மாறிக்கூட்டியுரைக்கும் முறையைத் தொல்காப்பியம் ‘மாட்டு’ என்னும் பெயரால் சுட்டும். ‘‘தமிழ் உரை மரபில் ‘மாட்டு’ ‘எச்சம்’ ஆகிய உத்திகளின் மூலம் உரை கூறும் முறைமை சுவையான உரையாடலுக்கு உட்பட்டவை. நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டுக்கு உரை எழுதும்போது மிகுதியான அளவில் இவ்வுத்தியைக் கையாண்டார் என்பது அவர் மீதான குற்றச்சாட்டு. இன்னொரு பக்கம் இவ்வுத்தியை பொருள்கோடலுக்கான முதன்மையான உத்தியாகக் கொள்கின்றனர். மாட்டு என்பதை ஒரு நீக்கல் உத்தியாகக் கொள்கின்றார் நச்சினார்க்கினியர். அதாவது ஒவ்வொரு தவறான பொருள்கோடல் சாத்தியங்களிலிருந்து பிரதியை மீட்டெடுக்கவும் அல்லது பிரதி உருவாக்கும் தவறான பொருள்கோடல் சாத்தியங்களிலிருந்து பிரதியை மீட்டெடுக்கவும் அல்லது பிரதி உருவாக்கும் தவறான அர்த்தங்களை (உரையாசிரியர் கருதும் அர்த்தத்திலிருந்து மாறுபடுபவை) நீக்கவும் பயன்படும் ஒரு உபாயமாகக் கருதுகிறார். நவீன இலக்கிய விமரிசனம், வாசகன் பிரதியின் எந்தப் பக்கத்தின் வழியாகவும் உள்நுழைந்து பல்வேறு விதமான பொருள்கோடல்களை உருவாக்குவதற்கான சாத்தியங்களை அளிக்கிறது. ஏறக்குறைய உரைமரபும் பிரதியின் உள்நுழைவதற்கான வெவ்வேறு திறப்பினை உருவாக்குகிறது. ‘மாட்டு’ என்பது அத்தகைய திறப்புகளில் ஒன்றுதான். இங்கு மாட்டு என்ற பொருள்கோடல்முறை பிரதியின் மையத்தை அழித்து வேறு ஒரு மையத்தை உருவாக்குகிறது. இவ்வாறு உருவாக்கப்படும் மையம் உரையாசிரியன் சார்ந்து இயங்குகின்ற கல்வி மற்றும் சமய நிறுவனங்களின் தன்மையில் அமைகிறது. ஆக மாட்டு என்ற இலக்கண உத்தியை உரை மரபின் செயல்பாடாகவே நோக்க வேண்டியுள்ளது’’[25] என்ற கருத்தை அ.சதீஷ் குறிப்பிடுகின்றார். மாட்டு என்னும் முறை குறித்துப் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள உரையின் இறுதியில் ‘‘என மாட்டு உறுப்பானும் எச்ச உறுப்பானும் வினை முடிக்க, என்று கூறி ‘அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு மியன்றுபொருண்முடியத் தந்தன ருணர்த்தன், மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்’ (தொல்.செய்யுளியல்.சூ.210), ‘சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை, புல்லிய கிளவி யெச்ச மாகும்’ (தொல்.செய்யுளியல்.சூ.207) என்னுஞ் சூத்திரங்களாற் கூறிய இலக்கணம், ‘நல்லிசைப் புலவர் செய்யுளுறுப்பு’(தொல்.செய்.சூ.1) எனத் தொல்காப்பியர் கூறினமையின், இவரும் நல்லிசைப் புலவராதலின், இங்ஙனம் செய்யுள் செய்தாரென்றுணர்க’’[26] என்று நச்சினார்க்கினியர் எழுதிச் செல்கின்றார். இதிலிருந்து

தொல்காப்பிய வரம்பிற்கு உட்பட்டே பத்துப்பாட்டிற்கு, நச்சினார்க்கினியர் உரை எழுதி இருக்கின்றார் என்பதை அறிய இயலும். நச்சினார்க்கினியர் தம் உரையில் பயன்படுத்தியுள்ள மாட்டு என்ற இலக்கண முறை 11,12-ஆம் நூற்றாண்டுகளில் சங்க இலக்கியங்களுக்கு உரை எழுதியுள்ள பழையவுரையாசிரியர்களின் உரையிலும் காணப்படுகின்றது. இவற்றுள் புறநானூற்றுப் பழையவுரையும் அடங்கும்.

> ''உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
> உண்டி முதற்றே உணவின் பிண்டம்'' (புறநா.18:19-20)

என்ற அடிகளில், 'முதற்றே உணவின் பிண்டம்' என வரும் இரண்டாம் தொடருக்கு, ''உணவை முதலாகவுடைத்து அவ்வுணவால் உளதாகிய உடம்பு' என்று உரை கூறுகிறார். பின்னர் அதன் விசேடவுரையில், 'உணவின்பிண்டம் உண்டி முதற்றாதலான், உண்டிகொடுத்தோர் உயிர் கொடுத்தோர் (19-20) என மாறிக் கூட்டுக'' (புறநா.பழைய.ப.48) என்று கூட்டியுரைக்கின்றார். ''உடம்பு உணவால் வளர்தலின், உணவின் பிண்டமெனப்பட்டது. 'மக்கள் யாக்கை யுணவின் பிண்டம்' (கூ0:சூ) என மணிமேகலையாசிரியரும் கூறுவர்''[27] என ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை கூறி இருக்கின்றார். இதன்மூலம் பழையவுரையாசிரியரின் உரையைப் பின்பற்றியே பின்னர் வந்த உரையாசிரியர்கள் உரை வரைந்துள்ளமை புலனாகும்.

> ''நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்,
> செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்'' (புறநா.36:2-3)

என்னும் தொடருக்கு, ''செறிந்த உள்ளிடு பருக்கையையுடைய சிலம்பினையும் நீண்ட கோற்றொழிலாற் செய்யப்பட்ட குறிய வளையையுமுடைய மகளிர்' என்று மாறிக்கூட்டி உரை கூறிவிட்டு, அப்பாடலின் விசேடவுரையில், 'வார்கோற் குறுந்தொடி என மாறியுரைக்கப்பட்டது''(புறநா.பழைய.ப.97) என்றும் உரை கூறுவர்.

புறநானூற்றின் 37-ஆம் பாடலில், 'கராஅங் கலித்த குண்டுகண் ணகழி' 7-வது அடியாகவும், 'கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சி' 10-வது அடியாகவும் அமைந்துள்ளது. இந்த இரண்டு அடிகளையும் தொடர்புபடுத்தி, ''இலஞ்சியையுடைய அகழியென மாறிக்கூட்டினும் அமையும்''(புறநா.பழைய.ப.99) என உரை கூறுகிறார், பழையவுரையாசிரியர்.

“வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி

நெடிய வென்னாது சுரம்பல கடந்து” (புறநா.47:1-2)

என்ற அடிகளுக்கு, வண்மையுடையோரை நினைத்துப் பழுமரந்தேரும் பறவைபோலப் போகி நெடியவென்று கருதாது அரியவழி பலவற்றையுங் கழிந்து” என்று உரை கூறுகிறார். பின்னர் அதன் விசேடவுரையில், “சுரம்பல கடந்து புள்ளிற் போகியென மாறிக் கூட்டுக” (புறநா.பழைய.ப.118) என்று இரண்டாம் அடியிலுள்ள சொல்லை முதல் அடியிலுள்ள சொல்லுடன் மாறிக் கூட்டி உரைக்கின்றார். இவை அனைத்தும் புறநானூற்றுப் பழையவுரையாசிரியரின் மாறிக்கூட்டுதல் என்னும் உரைப்போக்கினை நன்கு புலப்படுத்தும்.

**வேறு உரை கூறுதல்**

புறநானூற்றுப் பழையவுரையில் பொழிப்புரைக்குக்கீழ் விசேடவுரை என்னும் பகுதி இடம்பெற்றுள்ளது. பழையவுரையாசிரியர் பொழிப்புரையில் உரை கூறி இருந்தாலும், அதன் விசேடவுரையில் வேறுசில உரைகளையும் கூறி, ‘எனினும் அமையும்’ என்று முடித்துக் காட்டுவார்.

‘என்றுரைப்பாருமுளர்’ எனப் பிற உரையாசிரியர்களின் உரையை, “தெற்றியென்பதனைக் கைகோத்தாடும் குரவையென்பாரும் உளர்” (புறநா.53.பழைய.ப.128) என்றும் சுட்டியுள்ளார். இதுபோன்று “ஆந்தையடியுறை யென்பதற்கு ஆந்தை நின் அடிக்கண் உறைவானென்றுரைப்பாரும் உளர்” (புறநா.67.பழைய.ப.159) என்ற உரையின்வழியும் அறிய இயலும்.

“மடவர் மெல்லியர் செல்லினும்” (புறநா.106:4)

என்ற அடியில் வரும் மெல்லியர் என்பதற்குப் புல்லிய குணங்களையுடையாரும் என்று கூறிவிட்டு அதன் விசேடவுரையில், “மெல்லியரென்பதற்கு வறுமையுற்றா ரென்றும் உரைப்பர்” (புறநா.பழைய.ப.219) என்று உரை கூறுகிறார்.

பழையவுரையாசிரியர் சிலவிடங்களில் வேறுபட்ட உரையாசிரியர் கூறும் வேறுபாடத்தைப் பழையவுரையின் விசேடக் குறிப்புப் பகுதியில் சுட்டிக் காட்டுகிறார்.

“எருவை நுகர்ச்சி, யூப நெடுந்தூண்” (புறநா.224:8)

என்ற அடியில் வரும், 'எருவை நுகர்ச்சி' எனும் சொல்லுக்கு 'பருந்து விழுங்குவதாகச் செய்யப்பட்ட' என்று பொருள் கூறிவிட்டு, அதன் விசேடவுரையில் "'எருவை நுவற்சி' என்று பாடமோதுவாரும் உளர்"(புறநா.பழைய.ப.394) என்று வேறுபாடத்தையும் சுட்டுவதைப் பழையவுரை நன்குணர்த்தும்.

**மாறுபாடு நீக்கல்**

புறநானூற்றுச் செய்யுள்களில் கூறப்பட்ட பொருள் சிலவகைகளில் மாறுபாடாகத் தோன்றும். அவ்வாறு மாறுபாடாகத் தோன்றுவதற்கு இடமிருப்பின், அம்மாறுபாடு நீங்க, இன்ன காரணத்தால் இன்ன கூறப்பட்டதென்று தெளிவுறுத்துவது பழையவுரையாசிரியரின் இயல்புகளுள் ஒன்றாகும்.

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலும்
போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்" (புறநா.2:1-6)

என்ற பாடலில் போற்றார்ப் பொறுத்தல் முதலியவற்றுக்கு உவமையாக, ஐம்பெரும்பூதங்கள் கூறப்பட்டுள்ளன. இவை நிலன், விசும்பு, வளி, தீ, நீர் என்ற முறையில் அமைக்கப்பட்டுள்ளன. இம்முறை ஐம்பெரும்பூதங்களின் தோற்ற முறையாகவோ, ஒன்றினுள் மற்றொன்று அடங்கும் என்ற முறையிலோ அமைக்கப்படவில்லை. இம்மாறுபாட்டைப் பழையவுரையாசிரியர், "போற்றார்ப் பொறுத்தல் முதலாகிய குணங்களை அரசியலடைவாற் கூறுகின்றாராதலின் பூதங்களின் அடைவு கூறாராயினார்"(புறநா.பழைய.ப.7) என்று குறிப்பிடுகின்றார்.

"ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்" (புறநா.60:8-9)

என்ற அடிகளில், உயர்ந்த பண்பு நலன்களை உடைய தலைவனுக்கு, இழிந்த பகடு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இது குற்றமாகுமோ என்னும் மயக்கத்தை,

‘‘இராஜ்சியத்தைப் பொறுத்து நடத்துமாறு நோக்கி நோன் பகட்டோடு உவமித்தமையின், இறப்ப இழிந்த ஆனந்த உவமை அன்றாயிற்று’’ (புறநா.பழைய.ப.147) என்னும் உரையின்மூலம் தெளிவுபடுத்துகிறார்.

‘‘மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி’’ (புறநா.73:1)

என்னும் அடியில், தன்னுடைய அடியைத் தானே நல்லடி என்று சொல்வதுபோல் அமைந்துள்ளது. இது தன்னைத்தானே புகழ்ந்துகொள்வது குற்றமாகுமோ என்பதைக் களைய, ‘‘தன் மேம்பாடு கூறுகின்ற இடமாதலின், நல்லடியென்பது தற்புகழ்தலென்னும் குற்றமாகாது’’ (புறநா.பழைய.ப.175) என்று விளக்கிச் செல்கிறார்.

‘‘காலன புனைகழல்’’ (புறநா.100:1)

என்ற தொடருக்கு, ‘‘காலனபுனை கழலென்பது வீரத்திற்கும் வென்றிக்கும் கட்டின; போர்தோறும் வென்றுகட்டினவெனவுமாம்’’ (புறநா.பழைய.ப.211) என்று விரித்துக் கூறுகிறார்.

‘‘மூவரு ளொருவன் றுப்பா கியரென’’
ஏத்தினர் தரூஉங் கூழே’’ (புறநா.122:5)

என்ற அடிகளில் வரும், ஒருவன் என்னும் ஒருமையும் ஏத்தினரென்னும் பன்மையும் பொருளொடு பொருந்தி வருகின்றது. இது பொருந்தும் விதத்தை, ‘‘ஏத்தினர் தரூஉமென்று உரைப்பினும் அமையும் என்று பன்மையாற் கூறியது, அவ்வேந்தன் அமைச்சரை; மூவருள் யான் ஒருவன், எனக்குத் துப்பாகியரென அம்மூவரும் ஏத்தினர் தரூஉமென்று உரைப்பினும் அமையும்’’ (புறநா.பழைய.பக்.237-238) என்னும் உரையால் அறிய இயலும்.

‘‘மாறுகொண் மன்னரும் வாழியர் நெடிதே’’ (புறநா.172:11)

என்ற அடிக்கு, ‘‘மாறுகொண் மன்னரும் வாழியரென்ற கருத்து: இவன் வென்று திறை கொள்வது அவருளராயினென்பதாம்’’ (புறநா.பழைய.ப.321) என்று உரை கூறுவதன் மூலம் அம்மன்னன் பகைவரையும் வாழ்த்துதல் முரண்பாடுடையதாக உள்ள மயக்கத்தினைச் சுட்டுகிறார்.

''பயனின் மூப்பிற் பல்சான்றீரே'' (புறநா.195:1)

என்ற தொடருக்கு, பழையவுரையின் விசேடவுரையில், ''பயனின் மூப்பென்று வைத்துப் பல்சான்றீரேயென்றது இகழ்ச்சிக் குறிப்பு'' (புறநா.பழைய.ப.352) என்று இடம்பெற்றுள்ளது. இவ்வாறு செய்யுளில் மாறுபாடாகத் தோன்றும் சொற்களுக்கு உரையில் தெளிவுபடுத்துவது பழையவுரையாசிரியரின் உரைப்போக்காக உள்ளது.

**வகுத்துக் கூறல்**

உரையாசிரியர்கள் செய்யுட்களில் கூறப்பட்ட பொருள்கள் இன்னவை இன்னவற்றைச் சார்ந்தன என்று எளிதில் அறியும்படி வகுத்துக்கூறும் முறையினை தம் உரையிடையே பின்பற்றியுள்ளனர். இத்தகைய வகுத்துக் கூறும் உரை மரபினைப் புறநானூற்றுப் பழையவுரையாசிரியரின் உரையிலும் காண இயலும்.

''பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே
வாடுக விறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே
செலிய ரத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே'' (புறநா.6:17-24)

என்ற அடிகள் இடம்பெற்றுள்ளன. இவ்வடிகள், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் வெண்கொற்றக்குடை சிவபெருமானின் திருக்கோயிலை வலம் வந்து வணங்கும் வகையில் தாழ்ந்து விளங்க வேண்டும். நான்கு மறைகளை ஓதிய அந்தணர்கள் நின்னை வாழ்த்தும்பொழுது, அவர்களை நின் முடிதாழ்ந்து வணங்க வேண்டும். பகைவர்களுடைய நாடுகளை எரிப்பதனால் ஏற்படும் புகையால் உன்னுடைய மாலை வாடட்டும். உம்முடைய உரிமை மகளிரின் முன் நின் வீரம் தணியட்டும் என்று பலவாறு வாழ்த்துவதாக அமைகின்றது. இதற்குப் பழையவுரையாசிரியரின் வகுத்துக்கூறல் முறை, ''நகர்வலஞ்செயற்குப் பணியியரென வீடும், ஏந்துகை யெதிர் இறைஞ்சுகவென அறமும், புகையெறித்தலான் வாடுகவெனப் பொருளும், முகத்தெதிர் தணிகவென இன்பமும் கூறியவாராயிற்று''

(புறநா.பழைய.ப.19) என்ற உரையே சான்றாக அமையும். இதில் அறம், பொருள், வீடு என்னும் நாற்பொருள் வகுத்துக் கூறப்பட்டுள்ளமை நோக்கத்தக்கதாகும்.

''அடிபொலியக் கழல் தைஇய
வல்லாளனை வயவேந்தே
யாமேநின், இகழ்பாடுவோ ரெருத்தடங்கப்
புகழ்பாடுவோர் பொலிவு தோன்ற
இன்று கண்டாங்குக் காண்குவ மென்றும்
இன்சொலெண் பதத்தை யாகுமதி பெரும
ஒருபிடி படியுஞ் சீறிடம்
எழுகளிறு புரக்கும் நாடுகிழ வோயே'' (புறநா.40:4-11)

என்று அமைகின்றது. இவ்வடிகளை '''கழறைஇவல்லாளன்' என்றதனாற் பகையின்மையும், 'ஒருபிடி படியுஞ் சீறிட மெழுகளிறு புரக்கும் நாடுகிழவோய்' என்றதனாற் பொருட்குறைவின்மையும் கூறியவாராயிற்று'' (புறநா.பழைய.ப.100) என்று வகுத்துக் கூறுகின்றார். பகைவரது முடிப்பொன்னை அவரை வென்றதன் அடையாளமாக கழலாகவோ, ஆரமாகவோ சூடுவது மன்னர் இயல்பு. இத்தகைய கழலை மன்னன் அணிந்துள்ளதால் பகைவரை வென்ற தன்மையும், ஒரு பெண்யானை படியும் சிறிய இடத்தில் ஏழு யானைகளைக் காக்கின்ற உணவு வளம் நிறைந்தவனாதலால் பொருட்குறைவின்மையும் வகுத்துக் கூறப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இவை அனைத்தும் பழையவுரையாசிரியரின் வகுத்துக் கூறும் உரைத்திறத்திற்குச் சான்றாக அமையும்.

### வரலாற்றுச் செய்திகள்

சங்கத்தொகை நூலான புறநானூறு பழங்காலத் தமிழர்களின் நாகரிகங்களையும், பண்பாடுகளையும், பழக்கவழக்கங்களையும் ஒருங்கே கொண்டு திகழ்கின்றது. இந்நூல் சேர, சோழ, பாண்டியர்களாகிய முடியுடை மூவேந்தர்களையும் சிற்றரசர், சேனைத்தலைவர் போன்றோர்களைப் பற்றியும் பாடக்கூடிய வரலாற்றுக் கருவூலமாக உள்ளது. இந்நூலின் 11, 68, 80, 99, 131, 175 ஆகிய பாடல்களின் விசேடக் குறிப்புப் பகுதியில் வரலாற்றுச் சிறப்பினை

வெளிப்படுத்தும் வகையில் பழையவுரை இடம்பெற்றுள்ளது. இப்பழையவுரை, வரலாற்று உண்மைகளைத் தெளிவாக வெளிப்படுத்துகின்றது.

புறநானூற்றின் 11-ஆம் பாடல் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பேய்மகள் இளவெயினி பாடியது. இப்பாடலில், பாடினி அணிகலன் பெற்றாள்; பாணன் பூ பெற்றான்; எனக்குத் தேவையான தசை தரமாட்டியா? எனப்பேய் கேட்பதாக இளவெயினி பாடுகின்றார். உன்னுடன் போரிட்டு வெற்றி பெறும் வள்ளண்மை பெற்றவர் இவ்வுலகில் இல்லையாதலால், எனக்குப் பரிசிலாகக் கிடைக்க வேண்டிய தசைப் பிண்டம் கிடைக்காமல் போயிற்று. இந்நிகழ்வு சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ சிறந்த மறப்பண்பு கொண்டு திகழ்கின்றான் என்பதைக் காட்டுகின்றது. இவர் பாலை நிலத்தைப் பாடுவதில் ஆற்றல் மிக்கவராகத் திகழ்ந்தமையால் பாலை பாடிய பெருங்கடுங்கோ என சிறப்புப் பெயர் பெற்றார். இப்பாடலில் இடம்பெற்றுள்ள வரலாற்றுப் பதிவை,

> ''இழைபெற்ற பாடினிக்குக்
>
> குரல்புணர் சீர்க் கொலைவல் பாண் மகனும்மே'' (புறநா.11:14-15)

என்ற அடி புலப்படுத்தும். '''பாடினி இழைபெற்றாள், பாணன் பூப்பெற்றான், யான் அது பெறுகின்றிலேனெனப் பரிசில்கடாநிலையாயிற்று; இனி, அவள் பேயாயிருக்கக் கட்புலனாயதோர் வடிவுகொண்டு பாடினாளொருத்தியெனவும், 'இக்களத்து வந்தோர் யாவரும் பரிசில் பெற்றார்கள்; ஈண்டு நின்னோடு எதிர்ந்து பட்டோரில்லாமையான், எனக்கு உணவாகிய தசை பெற்றிலேன்' தான் பேய்மகளானமை தோன்றப் பரிசில் கடாயினாளெனவுங் கூறுவாருமுளர்'' (புறநா.பழைய.ப.32) என்று பேய்மகள் இளவெயினியின் வரலாற்றைப் புலப்படுத்தும் பழையவுரை அமைகின்றது. பேய்மகள் இளவெயினி - பேய்மகள் - தேவராட்டி பூசாரிச்சி; பேயினது ஆவேசமுற்றவள். இந்த வகையார் இக்காலத்தும் ஆங்கங்கே உள்ளனர். பேயே மகள் வடிவங் கொண்டு பாடியதாகப் பழையவுரையாசிரியரின் விசேடவுரையால் அறிய இயலுகின்றது. இப்பாடலில் பாடியோர் பாடப்பட்டோர் என இருவர் பெயர்களிலும் ஒரு வரலாற்று உண்மை புதையுண்டிருப்பதைப் பழையவுரையால் அறிய இயலும்.

> ''உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்
>
> கேவா னாகலிற் சாவேம் யாமென'' (புறநா.68:11-12)

என்ற அடி சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்க்கிழார் பாடியது. இப்பாடலின் பழையவுரையின் விசேடக் குறிப்புப் பகுதியில், "'புட்பகை யேவானாகலின்' என்றோதி உள்பகை தம்மிற் கூடிற்றாக, புள் நிமித்தத்திற்குப் பகைவன் ஏவானாகலிற் சாவேம்யாமென மறவர் தோள் புடைப்பவென்று உரைப்பாருமுளர். புட்பகையென்பது இவனுக்கு ஒரு பெயர்"(புறநா.பழைய.ப.162)) என்று இடம்பெற்றுள்ளது. இவன் கவி செய்வதில் வல்லவன். பாண்டிய நாட்டிலுள்ள ஏழு அரண்களை அழித்துக் கைக்கொண்டு அவற்றில் புலிக் கொடியை நாட்டியவன். தன் தாயத்தாரையும் பகைத்து அவர்கள் இருந்த ஆவூரையும் உறையூரையும் முற்றுகை செய்தவன். மாவளத்தான் என்பவனுக்குத் தமையன். இவனுக்குச் சேட்சென்னியென்றும், புட்பகையென்றும் பெயருண்டு. இதனைப் புறநானூற்றுப் பழையவுரை உணர்த்தும்.

புறநானூற்றின் 80-ஆம் பாடலில் இடம்பெற்றுள்ள வரலாற்றுப் பதிவினை வெளிப்படுத்தும் பழையவுரை "என்றது, தந்தையுடன் வெறுத்துப் போந்தான் அமருட் புகுந்து இப்போர் செய்தானை அவன் விரும்பின் உவக்கின்றான்; விரும்பாவிடின் அஞ்சுகின்றானென்பதாம்" (புறநா.பழைய.ப.186) என்று அமைந்துள்ளது. கோப்பெருநற் கிள்ளியின் தந்தை தித்தன். தந்தையின் செயல் மீது வெறுப்புற்ற பெருநற்கிள்ளி வேறு ஊரில் வாழ்ந்து வந்தான். இவன் கட்டிளமையும் சிறந்த போர்த்திறமையும் கொண்டு விளங்கினான். கோப்பெருநற்கிள்ளி முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனோடு போரிட்டு வெற்றி பெற்ற காலத்தில் சாத்தந்தையார் என்னும் புலவர் நேரில் கண்டார். இக்காட்சி அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தமையால் இப்பாடலில் மற்போரை விரித்துக் காட்டுகிறார். கோப்பெருநற்கிள்ளி ஆமூர் மள்ளனோடு போர்புரிந்து வெற்றி பெற்றமையை, தித்தன் தன்மகனை விரும்பினான் என்றால் மகிழ்ச்சி அடைவான். அச்செய்தியைக் கேட்டு மகிழ்ச்சி அடையவில்லையென்றால் தன்னுடைய மகனுக்குத் தித்தன் அஞ்சுகின்றான் என்பது பொருள் ஆகும். இந்நிகழ்வுகள் தந்தைக்கும் மகனுக்கும் உள்ள வரலாற்றுப் பின்புலத்தை விளக்குவதாக அமைகின்றது.

அதியமான் அரசு கட்டிலேறியதும் தன் முன்னோர்களுடைய சிறப்பினைத் தான் எய்தினான். ஏழு பொறிகள் அமைந்த இலஞ்சனையைப் பெற்றான். அவன் கோவூர்மேல் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றான். இதனால் பெருஞ்சிறப்புப் பெற்றான்.

"பூவார் காவிற் புனிற்றுப்புலா னெடுவேல்" (புறநா.99:6)

என்ற அடியில் வரும் 'பூவார்கா' என்னும் சொல் 'வானோர்கள் அதியமானின் முன்னோர்க்கு வரம் தர வந்திருந்த சோலை என்று வாழ்த்தினர்' என்னும் பொருள்குறித்து நிற்கின்றது. இதனையே "பூவார் கா – வானோர் இவன் முன்னோர்க்கு வந்திருந்த கா" (புறநா.பழைய.ப.210) என்று அதியமான் நெடுமானஞ்சியைப் பற்றிய வரலாற்றைப் பழையவுரையாசிரியர் பதிவு செய்கிறார்.

ஆய் வேளாளரில் உழுதுவித்து உண்ணும் வகையினைச் சார்ந்தவன். அரசரால் கொடுக்கப்படும் வேள் என்னும் உரிமைப் படைத்தலைவன் ஆவான். கடையெழு வள்ளல்களில் ஒருவன். சிறந்த வீரன். பொதிகை மலைத் தலைவன். ஆய்குடி என்பது இவனுடைய ஊர் ஆகும். இவனுடைய ஊர் ஆய் என்றும் ஆய் அண்டிரன் என்றும் அழைக்கப்படுகிறது. இவன் பாணர்க்கும் இரவலர்க்கும் யானைகளையும் பிறவற்றையும் மிகுதியாகக் கொடுப்பவன். ஆய் அண்டிரனைப் பற்றி நன்கு அறிந்தவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார். இவர்,

"களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே" (புறநா.131:4)

என்ற அடியில், ஆய் அண்டிரனின் நாட்டிலுள்ள குன்றுகளில் யானைக் கூட்டம் மிகுதியாக மேய்ந்து கொண்டிருப்பதைச் சிறப்பித்துக் கூறுகின்றார். இவ்அடிகளுக்குப் பழையவுரையாசிரியர், "களிறுகளை மிகவுமுடைய இந்தக் கவினையுடைய காடு" என்று உரை கூறுகின்றார். அதன் விசேட உரையில் "யானைக்குப் பிறப்பிடமாயிருக்கிற காட்டினும் அண்டிரனைப் பாடினோர், யானை மிகவுமுடையரென்று அவன் கொடைச் சிறப்புக் கூறிவாறு ஆய்க்கு அண்டிரனென்பது ஒரு பெயர்" (புறநா.பழைய.ப.249) என்று ஆய் அண்டிரண் பற்றிய செய்தியொன்றும் இடம்பெற்றுள்ளமையை பழையவுரையாசிரியரின் உரை நன்குணர்த்தும்.

"நன்னன் மருகனன்றியு நீயும்" (புறநா.151:8)

என்ற அடிக்கு, பொன்னாற் செய்யப்பட்ட தேரினையுடைய நன்னன் மரபினுள்ளானாதலன்றியும் என்று உரை கூறுகின்றார். அதன் விசேடவுரையில், 'நன்னன் மருகனன்றியும்' என்பதற்கு, "பெண்கொலைபுரிந்த நன்னன்போல, வரையாநிரயத்துச் செலியரோ வன்னை" (குறுந்.292) என்றமையின் அதுவும்

வரைதற்கு ஒரு காரணமாக உரைப்பாரும் உளர்''(புறநா.பழைய.ப.279) எனக் குறிப்பிடுகின்றார், பழையவுரையாசிரியர். இங்கே சுட்டப்படும் குறுந்தொகையின் 292-ஆம் பாடலின் பாட்டுடைத் தலைவன் நன்னன் பற்றிய செய்தி காணப்படுகிறது. ''நன்னன் தான் உண்டால் நீண்ட நாள் உயிர்வாழ வல்ல மாங்கனியைத் தரக்கூடிய மரக்கன்று ஒன்றினைத் தன்னுடைய ஏழில் குன்றத்து ஆற்றோரத்து மிகவும் விரும்பி வளர்த்து வந்தான். இதிலிருந்து கிடைத்த மாம்பிஞ்சு ஒன்றினை, ஆற்றில் குளித்த பெண் ஒருத்தி அறியாது உண்டாள். இச்செயல் தவறு எனக் கருதிய நன்னன், அவளைக் கொன்றான். இத்தகைய கொடிய செயலால் புலவர்கள் அவனைப் பாடவில்லை. அப்பெண் கோசர் குலத்தைச் சேர்ந்தவள் என்றும் கூறுவர்''[28] என்று கு.வெ.பாலசுப்பிரமணியனின் உரை குறிப்பிடுகிறது. குறுந்தொகையில் இடம்பெற்றுள்ள வரலாற்றுச் செய்தியைப் புறநானூற்றில், பழையவுரையாசிரியர் சுட்டியிருப்பது அவரின் உரைத்திறனுக்குச் சான்றாக அமையும்.

''விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்'' (புறநா.175:6)

என்ற அடியில் வரும் 'மோரியர்' என்பதற்கு, நிலமுழுதும் ஆண்ட வேந்தரது என்று பொருள் கூறுகின்றார், பழையவுரையாசிரியர். அதன் விசேடவுரையில், ''மோரியராவார் சக்கரவாள சக்கரவர்த்திகள் விச்சாதரரும் நாகருமென்ப'' (புறநா.பழைய.ப.327) என்கிறார். மோரியர் என்பவர் வடநாட்டில் அரச பரம்பரையினராய் வாழ்ந்தவராவார். இவர்கள் தங்கள் நாட்டின் தென்பகுதி நோக்கிப் படையெடுத்து வரும்பொழுது, ஆங்கொரு மலைத்தொடர் குறுக்கிட்டது. அதனை ஒருபுறமாக வெட்டி, படைக் கருவிகளும், பிற பொருள்களும் கொண்டு செல்லும் தேர்கள் செய்தனர். இத்தகைய செய்திகள் பழையவுரையில் குறிப்பாகவும் சுருக்கமாகவும் பண்டைய வரலாற்றை வெளிப்படுத்தும் வகையில் சுட்டப்பெற்றுள்ளன. இவை பின்னர் வந்த உரையாசிரியர்களின் உரை வளர்ச்சிக்கு வித்திடுவதாக அமைந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

### இன்னாமைக் குறிப்பு

புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையில் இன்னாமைக் குறிப்பு பற்றிய செய்தி காணப்படுகின்றது. இன்னாமைக்குறிப்பு என்பது நடக்கக் கூடாத செயலைப் பற்றிக் குறிப்பிடுவதாகும். எனினும் அவை நடந்தவையாகலின்

அவற்றின் நிலை பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதனைக் கண்டறிந்து பழையவுரையாசிரியர்தம் உரையில் சுட்டுகின்றார்.

''ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென'' (புறநா.34:1-4)

என்பதன் உரையில், இன்னாமைக் குறிப்பினை உணர்த்தும் செய்தி காணப்படுகின்றது. இதனை, ''கோவதை முதலாயின வாக்காற் சொல்லவும் படாமையின், ஆன்முலையறுத்தவெனவும் மகளிர் கருச்சிதைத்தவெனவும், பார்ப்பார்த் தப்பிய வெனவும் மறைத்துக் கூறப்பட்டன'' (புறநா.34.பழைய.ப.89)என்னும் விசேடக் குறிப்புப் பகுதி சுட்டுகின்றது. பசுவதை, பெண்கொலை, பார்ப்பார் கொலை என வெளிப்படக் கூறுதல் தகாது என்று மறைத்து, 'ஆன்முலை அறுத்தல், கருச்சிதைத்தல், பார்ப்பார்த் தப்புதல்' என்று குறிப்பாகக் கூறியுள்ளார், பழையவுரையாசிரியர்.

புறநானூற்றின் 220 ஆம் பாடலில் 'தேர்வண் கிள்ளி போகிய'(6) என்ற அடி இடம்பெற்றுள்ளது. இவ்வடிக்கான பழையவுரை ''தேர் வண்மையைச் செய்யும் கிள்ளி போகப்பட்ட'' என்று உரை கூறுகிறார். அதன் விசேடவுரையில் ''இறந்தவென்று சொல்லுதல் இன்னாமையால் போகியவென்றார்'' (புறநா.220.பழைய.390) என்கிறார். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் நீத்த நிகழ்வையே பொத்தியார், பாடலில் 'போகிய' என்ற சொல்லால் சுட்டியிருக்கின்றார். இதற்கு உரை கூறிய பழையவுரையாசிரியர் பாடலில் 'போகிய' என்ற சொல் பயன்படுத்தபெற்றதற்கான காரணத்தைக் குறிப்பிடுகின்றார். இவை பழையவுரையாசிரியரின் உரைத்திறத்தை நன்கு புலப்படுத்தும்.

''மைந்துடை யானை கைவைத் துறங்கவும்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவும்'' (புறநா.229:18-21)

என்பதற்கான பாடலில், கோச்சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ்சேரல் துஞ்சும் நாளில் நிகழ்ந்த இன்னாத செயல்கள் மறைத்துக் கூறப்பட்டுள்ளன. வலிமை மிக்க யானை கையை நிலத்திலே இட்டுத் துஞ்சியது. திண்ணிய வாராற் செய்யப்பட்ட முரசமானது அவற்றின் கண் கிழிந்து உருண்டது. உலகினையே காக்கக் கூடிய வெண்கொற்றக்குடை கால் ஒடிந்து வீழ்ந்தது. காற்றுபோலும் இயக்கத்தைக் கொண்ட மனம் செருக்கிய குதிரைகள் இயக்கமின்றிக் கிடந்தன. இதனையே பழையவுரையாசிரியர், ‘‘படவென்றல் இன்னாமையிற் கைவைத்துறங்கவும் கண் கிழிந்துருளவும் கால்பரிந்துலறவும் கதியின்றி வைகவுமெனத் தகுதி பற்றிக் கூறப்பட்டன’’(புறநா.பழைய.ப.401) என்று இன்னாத செயல்களை மறைத்துக் கூறுகின்றார். இவர் புலவர்தம் பாடல்களில் சுட்டியுள்ள துன்பமான நிகழ்வுகளுக்கு உரை கூறுகிறார். பின்னர் அதன் விசேடக்குறிப்புப் பகுதியில் இன்னாமைக் குறிப்புகளாகத் தந்திருக்கின்றார். இது உலக வாழ்வியலில், எவை இன்னாதவை என்பதை நன்கு உணர்ந்து, பழையவுரையாசிரியர் உரை வரைந்தமைக்குச் சான்றாக அமையும்.

**உவமை விளக்கல்**

ஒரு கருத்தை மனம் கொள்ள விளக்குவதற்கு வாய்ந்த ஒன்றாக உவமை அமைகின்றது. உவமை என்பது ஒருபொருளுடன் ஒருபொருள், ஒருபொருளுடன் பல பொருள், பலபொருளுடன் பல பொருள், பலபொருளுடன் ஒருபொருள் என ஒப்புமைப்படுத்தும் நான்கு முறைகளில் அமையும். உவமையின் பண்புகளாக, ‘‘எப்பொழுதும் அவ்வப் பண்பில் உயர்ந்ததையே உவமை கூறுவர். சிறப்பு, நலன்(அழகு), வளமை என்பனவே உவமை கூறத் துண்டுவன. ஒன்றன் சிறப்பை உவமையால் வெளிப்படுத்துவர்; ஒன்றன் அழகை உணர்த்தவும் உவமையை எடுத்தாள்வர்; காதலால் கூறப்படும் உவமைகளே கணக்கில; வலிமையைச் சுட்டும் உவமைகளும் உள. இவை நான்கும் உயர்வு காட்டும் பண்புகள். ஒன்றன் தாழ்வை இழிவைக் காட்டவும் உவமை கூறுவர்.’’[29]

> ‘‘களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
> பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்’’ (புறநா.13:5-6)

எனபதற்கு, நாவாய் எவ்வாறு தண்ணீரைக் கிழித்துக்கொண்டு செல்கிறதோ, அதுபோல கோப்பெருநற்கிள்ளியின் யானை பகைவர்மேல் ஏறிச் செல்கின்றது. வானத்தில் விண்மீன் தொகுதிகளுக்குள் உலவும் நிலவு எவ்வாறு அவற்றுக்கெல்லாம் தலைவன்போல் விளங்குகின்றதோ, அதுபோல சோழன் பகைவர்களுக்கு நடுவே தலைவனாகத் திகழ்கின்றான். இந்த உவமையினையே, ''களிற்றுக்கு நாவாயோடு உவமை எதிர்ப்படையைக் கிழித்தோடலும், திங்களோடு உவமை வாளோர் சூழத் தன்தலைமை தோன்றச் செல்லுதலுமாகக் கொள்க'' (புறநா.பழைய.ப.35) என்று பழையவுரையாசிரியர் கூறுகின்றார்.

> ''மாசு ணுடுக்கை மடிவா யிடையன்
> சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
> புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
> வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே'' (புறநா.54:11-14)

என்ற அடிகள், சேரமான் செங்குட்டுவன் கோதையின் சிறப்பினைக் குறிப்பிடுவதாக அமைகின்றன. மாசு படிந்த ஆடையையும் மடிந்த வாயினையும் உடைய இடையன் தன் சிறிய தலையையுடைய ஆநிரையுடன் அணுக இயலாதபடி புலியுறங்கும் அகன்ற இடம்போல வலிமை தங்கிய பெரிய கையினையுடைய அவனுடைய நாடு விளங்கும். ஆகையால் பகைவர் புகுதல் அரிது என்ற பொருளைத் தருகின்றன. இதனையே, ''மன்னர்க்கு இடையனும், அவர் படைக்குச் சிறுதலையாயமும், கோதை நாட்டிற்குப் புலிதுஞ்சு வியன்புலமும் உவமையாகக் கொள்க'' (புறநா.பழைய.ப.131) என்ற பழையவுரையின் விசேடவுரை குறிப்பிடுகின்றது.

> ''இசைவிளங்கு கவிகை நெடியோய் திங்கள்
> நாணிறை மதியத் தனையை யிருள்'' (புறநா.102:6-7)

என்பதன் பழையவுரை, ''திங்கள்நாள் நிறைமதியத் தனையை யென்றது, அறிவும் நிறைவும் அருளும் முதலாகிய குணங்களால் அமைந்தா யென்றவாறாம்'' (புறநா.பழைய.ப.214) என்று அமைகின்றது. இவ்வுவமை அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியை உவமிப்பதாக வருகின்றது. பொகுட்டெழினி நிறைமதியை ஒப்பவன் என்றும், அவன்நிழற்கண் வாழும் மக்களுக்கு துன்பமாகிய இருள் எவ்விடத்தும் இல்லை. இதனையே, அறிவும் நிறைவும் அருளும் அமைந்த

குணங்கள் அமைந்தவன் என்று பழையவுரையாசிரியர் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கதாகும்.

### குறிப்பு மொழி

சங்ககால இலக்கியச் செய்யுட்களை எழுதிய புலவர்களின் பாடல்களில் குறிப்புச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. இவை குறிப்பினால் பொருள் உணர்த்தக் கூடியனவாக உள்ளன. இத்தகைய சொற்களைப் பழையவுரையாசிரியர் எடுத்துக்காட்டுகின்றார். பாரி மகளிர் தம் தந்தையின் பகைவராகிய வேந்தரை,

''வென்றெறி முரசின் வேந்தரெம்'' (புறநா.112:4)

என்கின்றனர். இதனையே பழையவுரையாசிரியர், ''வென்று அறைந்த முரசினையுடைய அரசர் எம்முடைய மலையையுங் கொண்டார்'' என்றும் சுட்டுகிறார். அதன் விசேடவுரையில், ''ஒருவனை மூவேந்தரும் முற்றியிருந்து வஞ்சித்துக் கொன்றமையின் வென்றெறி முரசின் வேந்தர் என்றது ''ஈண்டு இகழ்ச்சிக் குறிப்பாய் நின்றது'' (புறநா.பழைய.ப.226) என்பர். பாரியை பகை மன்னர்கள் எதிர்த்துப் போரிட்டு வெல்லும் வலிமையின்றி வஞ்சித்துக் கொன்றனர். இத்தகைய இழிவான செயலினையே பழையவுரையாசிரியர் இகழ்ச்சிக் குறிப்பாய் நின்றது என்று தம்உரையின்வழித் தெளிவுபடுத்துகின்றார்.

புறநானூறு 196ஆம் பாடல் பரிசில் கொடாமல் காலம் நீட்டித்த நன்மாறனுக்கு அறிவுறுத்துவதாக அமைந்தது. இப்பாடல் ஆவூர்கிழாரால் பாடப்பட்டதாகும். பரிசில் வேண்டி வருவோருக்குக் காலம் நீட்டித்தல் என்பது எம்குடியிலுள்ளோர் இதுவரை காணாத நிகழ்வு ஆகும். இத்தகைய உன்னுடைய செய்கையால் நின்புதல்வர் நோயில்லாமல் வாழ வேண்டும். நீ மிகுந்த ஆயுளோடு வாழ வேண்டும் என்றும் வாழ்த்துகின்றார் புலவர். இதனை,

''நோயிலராக நின்புதல்வர்'' (10)

''சிறக்க நின்னாயுள்'' (15)

என்னும் அடிகள் சுட்டுகின்றன. இப்பாடலுக்கு உரை கூறிய பழைய உரையாசிரியர், அதன் விசேடவுரையில், '''நோயிலராக நின்புதல்வர்' என்பதூஉம், 'சிறக்க நின்னாயுள்' என்பதூஉம் குறிப்புமொழி'' (புறநா.பழைய.ப.353) என்று சுட்டிக்

காட்டியிருக்கின்றார். தனக்குத் துன்பம் ஏற்படுத்தும் செய்கையை மன்னன் செய்தாலும் அவனையும், அவனது புதல்வரையும் புலவர் வாழ்த்துகின்றார். தன்னிடம் வந்து இரந்து வேண்டினோர்க்குப் பரிசில் கொடாதநிலையைப் பழையவுரையாசிரியர் இகழ்ச்சிக் குறிப்புமொழியாகச் சுட்டுகிறார்.

புறநானூறு 198ஆம் பாடல், இலவந்திகைப் பள்ளி துஞ்சிய பாண்டிய நன்மாறன் பரிசில் நீட்டித்தமைக்காக வடமவண்ணக்கண் பேரிச்சாத்தன் பாடியதாகும். இப்பாடலில் 11-ஆம் அடிக்கான குறிப்பு மொழியாக நும்முடைய போர்ப்பூ வாழ்க எனவும், 17-ஆம் அடிக்கு நின் முன்னோர்கள் எவ்வாறு பொருட்களை வழங்காது வைத்து இருந்தார்களோ, நீயும் வைத்திருப்பாயாக எனவும் உணர்த்தினார். நீ எனக்குச் செய்த கொடுமையால் தீங்கு வரும் என்றும் அத்தீங்கு நினக்கு வராதிருக்க வேண்டும் என்றும் புலவர் எண்ணினார். எனவே, இப்படிப்பட்ட நீ நின் புதல்வர் பிள்ளைகளைக் காணுந்தோறும் விரும்பிய செல்வத்துடனே நெடுங்காலம் வாழ்வாயாக என்று வாழ்த்துகிறார். இந்தப் பாடலில்,

“விடுத்தனென் வாழ்கநின் கண்ணி தொடுத்த”(11)

“முன்னோர் போல்க இவர் பெருங் கண்ணோட்டம்”(17)

“நீடு வாழிய நெடுந்தகை யானும்” (23)

என்னும் மூன்று அடிகளும் குறிப்புமொழியினை வெளிப்படுத்துவனவாக உள்ளன. இதனை, தம் உரைத்திறத்தால் வெளிப்படுத்தும் பழையவுரையாசிரியர் அதன் விசேடவுரையில், “முன்னோர் போல்கிவர் பெருங்கண்ணோட்டம்’ எனவும், ‘வாழ்க நின் கண்ணி’ யெனவும் ‘நீடுழிவாழிய’ வெனவும் நின்றவை குறிப்புமொழி” (புறநா.பழைய.ப.358) எனச் சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். பாரி மகளிரைக் கொள்ள மறுத்த இருங்கோவேளினைக் கபிலர்,

“விடுத்தனென் வெலீஇயர்நின் வேலே யடுக்கத்” (புறநா.202:17)

என்ற அடியில் சுட்டுகிறார். இதனைக் குறிப்பிடும் பழையவுரை, “வெலீஇயர் நின் வேல் என்றது குறிப்புமொழி” (புறநா.பழைய.ப.365) என்று சுட்டிச் செல்கிறது. ‘வெலீஇயர் நின்வேல்’ என்பது ‘நின்வேல் வெல்வதாக’ என்பதைக் குறிக்கும்.

எனினும், இது ‘நீ வெல்லமாட்டாய்’ என்ற பொருள் தோன்றுமாறு கூறியதாகும். எனவே, பழையவுரையாசிரியர் இதனைக் குறிப்புமொழி என்று சுட்டியுள்ளார்.

புறநானூறு 205-ஆம் பாடலில், ‘‘களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே’’(14) என்ற அடியை, ‘‘நோன்சிலை வேட்டுவ நோயிலை யாகுக’’(9) என்ற அடியுடன் தொடர்புபடுத்தி, ‘‘யான் களிறின்றிப் பெயராநின்றேனென்பது கருத்தாகலின், நோயிலையாகுக வென்பது இகழ்ச்சிக் குறிப்பு’’ (புறநா.பழைய.ப.371) என்றும் கூறுகிறார், பழையவுரையாசிரியர்.

‘‘பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்தே’’ (புறநா.210:15)

என்ற அடிக்கான பாடலில் சேரமான் குடக்கோ சேரலிரும்பொறையிடம் பொருள்வேண்டிச் செல்கிறார், பெருங்குன்றூர்க்கிழார். அம்மன்னன் பரிசில் நீட்டித்தானாய் இருக்க, ‘பெரிய செயலற்ற எனது வறுமையைப் போகவிட்டு நான் போவேன்’ என்பதை ‘‘புலம்பை முந்துறுத்துக்கொண்டு போகாநின்றேனென இரங்கிக் கூறியவதனால், வாழியர் குருசிலென்பது இகழ்ச்சிக் குறிப்பாயிற்று’’ (புறநா.பழைய.ப.378) என்பர்.

‘‘இன்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொல்’’ (புறநா.234:4)

என்ற அடிக்கான உரையில், ‘‘இன்சிறுபிண்டமென்றது இகழ்ச்சிக் குறிப்பு’’ (புறநா.பழைய.ப.406) எனக் குறிப்புமொழியைச் சுட்டிக் கூறுவர் பழையவுரையாசிரியர். இன்சிறு பிண்டம் என்பது இறந்தவர்களுக்குப் படைக்கப்படுகின்ற உணவு ஆகும். இது சுவை குறைவாக இருக்கும். இதனை வேள் எவ்வி என்னும் மன்னன் உண்டான், என்பதை விளக்கும் வகையில் பழையவுரையாசிரியரால் இகழ்ச்சிக் குறிப்பு சுட்டப்பட்டுள்ளது. இகழ்ச்சிக் குறிப்புகள் என்பவை பெரிதும் புலவர்களுக்குப் பரிசில் வழங்காமல் காலம் நீட்டித்த மன்னர்களைச் சுட்டிச் செல்வதாகவே உள்ளது. இதனைப் பழையவுரையாசிரியர் நன்கு உணர்ந்து உரை கூறியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**குறிப்பாலறிந்த பொருள்**

சங்க இலக்கிய நூல்களுள் அகத்திணைப் பாடல்களில் உள்ளுறை, இறைச்சி போன்ற குறிப்புப் பொருட்கள் காணப்படும். அதேபோன்று புறநானூற்றுப்

பாடல்களில் காணப்படும் இன்ன சொற்களால் இன்ன பொருள் தோன்றுகின்றதென்றும் இன்னநயம் புலப்படுத்துகின்றதென்றும் புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் எடுத்தியம்புகின்றார். இதனை,

''அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறிதழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்'' (புறநா.23:18-21)

என்னும் அடிகள்வழி அறியலாம். இதற்கான பழையவுரை, ''அற்ற கோட்டையுடைய பெரிய கலை புலியின்கண்ணே அகப்பட்டதாகச் சிறிய மறியை அணைத்துக்கொண்ட துள்ளிய நடையையுடைய மெல்லிய மான்பிணை பூளையோங்கிய அஞ்சத்தக்க பாழிடத்து வேளையினது வெளிய பூவைத் தின்னும்'' என்று அமைந்துள்ளது. அதன் விசேடக் குறிப்புப்பகுதி, ''கலை புலிப்பாற்பட்டெனச் சிறுமறி தழீஇய மடப்பிணை பறந்தலை வேளை வெண்பூக் கறிக்குமென்பது, அவன் பகைவரைக் கொன்றவழி அவர் பெண்டிர் தம் இளம் புதல்வரை ஓம்புதற் பொருட்டு இறந்துபடாது அடகு தின்று உயிர்வாழ்கின்றாரென்பதோர் பொருள் தோன்ற நின்றது'' (புறநா.23.பழைய.பக்.62-63) எனச் சுட்டும். இதில் ஆண்மான் புலியால் கொள்ளப்பட்டபோது, பெண்மான் தன் குட்டிகளை அணைத்தபடி வேளையின் பூவினை உண்டு உயிர் வாழும். இது இப்பாடலின் குறிப்புப்பொருள். அதுபோல செழியனால் அழிந்த பகைவர்களின் மனைவியர் தம்தம் மக்களுக்காக, கைம்மை நோன்பு மேற்கொண்டு வேளைக்கீரையை உணவாக உண்டு உயிர் வாழ்வர் என்பது தோன்ற நின்றது. இக்குறிப்பினைப் பழையவுரையாசிரியரின் விசேடக்குறிப்புப் பகுதி நன்கு விளக்குகின்றது.

புறநானூற்றின் 143 ஆம் பாடல், தன் மனைவியைத் துறந்த பேகனைக் கபிலர் பாடியதாக அமைந்துள்ளது. இப்பாடலின் குறிப்புப் பொருளை,

''மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்'' (புறநா.143:1-4)

என்னும் அடிகள் சுட்டும். பேகனுடைய மலையில் வாழக் கூடிய குறமக்கள் மழை வேண்டிக் கடவுளை வழிபட்டனர். தேவையான மழையும் பெய்தது. ஆகையால், வேண்டிய தினை விளைந்தது. மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். அதுபோல நின் மனைவியாகிய கண்ணகியும் நின் அருளைப் பெற்று இன்பம் நுகர வேண்டும். மயிலுக்குக் கொடை நல்கிய பேகன் மனைவியைத் துன்பப்பட விடலாமா என்ற செய்தி மறைபொருளாகச் சுட்டப்பெற்றுள்ளது. இதனை விளக்கும் பழையவுரையாசிரியர், ‘‘நின்மலையிற் குறவர் மாக்கள் கடவுட் பேணி மழை வேண்டிய பொழுது பெற்றுத் தாம் வேண்டுமுணவு நுகருமாறுபோல் இவளும் நின் அருள்பெற்று இன்பம் நுகர்வாளாக வேண்டுமென்பதொரு நயந்தோன்ற நின்றது’’ (புறநா.பழைய.ப.266) என்று பாடலில் உள்ள குறிப்புப் பொருளை நயம்படச் சுட்டிக் காட்டுகின்றார்.

‘‘பனிவரை நிவந்த பாசிலைப் பலவின்
கனிகவர்ந் துண்ட கருவிரற் கடுவன்
செம்முக மந்தியொடு சிறந்து சேண் விளங்கி
மழைமிசை யறியா மால்வரை யடுக்கத்துக்
கழைமிசைத் துஞ்சும் கல்லக வெற்ப’’ (புறநா.200:1-5)

என்னும் அடிகளுக்கான பாடல், பாரி மகளிரை மணந்து கொள்ளுமாறு விச்சிகோனுழைச் சென்று கபிலர் பாடியதாக அமைந்துள்ளது. பசிய இலையினையுடைய பலாவின் பழத்தை உண்ட கடுவன், தன் துணையாகிய மந்தியுடன் தொலைவில் மலைப்பக்கத்தில் உள்ள மூங்கிலின் உச்சியில் தூங்கும். அதுபோல நீயும், பாரி மகளிரை வரைந்துகொண்டு இன்புறுவாயாக என்பது பாடலின் குறிப்புப்பொருள். இதனை, ‘‘பலவின் கனி கவர்ந்துண்ட கடுவன் மந்தியோடு சிறந்து சேண் விளங்கிக் கழைமிசைத் துஞ்சுமென்றதனால் நீயும் இவரை வரைந்துகொண்டு இன்புற்று வாழ்தல் வேண்டுமென்பது தோற்றி நின்றது’’ (புறநா.பழைய.ப.361) என்ற பழையவுரையாசிரியர் உரை நன்கு விளக்குகின்றது.

‘‘அரும்புஅற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட்டு ஒள்வீ தாய துறுகல்
இரும்புலி வரிப்புறங் கடுக்கும்’’ (புறநா.202:18-20)

என்னும் அடிகளுக்கான பழையவுரை, ‘‘அரைமலையில் முகையற மலர்ந்த கரிய காலையுடைய வேங்கையினது கரிய புறவிதழையுடைய ஒள்ளிய பூப்பறந்த பொற்றைக்கல் பெரும்புலியானது வரியையுடைய புறத்தை யொக்கும்’’ என்று அமைகிறது. பின்னர் அதன் விசேடவுரையில் பாடலின் குறிப்புப்பொருளை, ‘‘வேங்கைவீ தாயதுறுகல் இரும்புலி வரிப்புறங்கடுக்கு மென்ற கருத்து ஏதம்செய்யாததூஉம் ஏதம் செய்வதுபோலக் கண்டார்க்கு அச்சம்வரத் தோன்றுமென்றமையான், இதுவும் இகழ்ச்சி தோன்ற நின்றது’’ (புறநா.பழைய.ப.366) என்று பழையவுரையாசிரியர் சுட்டுகிறார். வேங்கை மலர்கள் விரிந்து கிடக்கும் பாறையானது பார்ப்பதற்குத் துன்பத்தை விளைவிக்கும் புலிபோல் காட்சி அளிக்கும். இதற்கு அஞ்சத் தேவையில்லை. அதுபோல பாரிமகளிரைக் கொள்வதற்கு அஞ்ச வேண்டாம் என்பதே, இப்பாடலின் குறிப்புப்பொருள். இவ்வாறு பாடலில் இடம்பெற்றுள்ள குறிப்புப்பொருளை விளக்குவதில் பழையவுரையாசிரியரின் உரைப்போக்கு தனித்தன்மை உடையதாக அமைகின்றது.

**பயன் நினைவுரைத்தல்**

சங்க இலக்கியப் பாடல்கள் ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு பயனை நினைவுபடுத்திச் செல்வதாக அமைந்துள்ளன. இது பாடலுடன் தொடர்புடையதாக இருக்கும். இதனைப் பழையவுரையாசிரியர் ‘பயன் நினைவுரைத்தல்’ என்னும் தம் உரைமரபின் வாயிலாகச் சுட்டிக் காட்டுகின்றார். இதனை,

‘‘வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி யருளிலர்’’ (புறநா.27:16-17)

என்ற அடிகளுக்கு, ‘பகைவர் கொடாமை வல்லராதலினால் இவனுக்கு என்ன பயன்?’ என்ற வினாவெழுங்கால் அதற்குரிய விடை எளிதிற் றோற்றுவதில்லை. இவ்வினாவை இவ்வுரையாசிரியர், ‘‘அருளிலர்கொடாமை வல்ல ராகுகவென்றதனாற் பயன், அவையுடையோர் தத்தம் பகைவரை வெல்வராதலால், பகையெதிர்ந்தோர் அவை இலராகவென்பதாம்’’(புறநா.பழைய.ப.73) என்று விடுத்தார். நலங்கிள்ளி அருளும் கொடையுள்ளமும் ஒருங்கே பெற்றவனாகக் காணப்பட்டான். அவன் பகையை எளிதில் வென்று விடுவான். அருள் இல்லாருக்கு நலங்கிள்ளியின் அருள் இல்லை. ஆதலால் நலங்கிள்ளியால் அவன் வெல்லப்படுவான். இந்தப் பாடலின்

பயனைச் சுட்டுவதாக பழையவுரையாசிரியரின் உரை அமைகின்றது. அன்னச்சேவலைப் பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழன்பால் தூதுவிடும் செய்தியை,

> ‘‘ஆந்தை யடியுறை யெனினே மாண்டநின்
> இன்புறு பேடை யணியத்தன்
> நன்புறு நன்கல நல்குவ னினக்கே’’ (புறநா.67:12-14)

என்னும் அடிகள் உணர்த்தும். இப்பாடலின் விசேடவுரை, ‘‘பேடையணிய நன்கலம் நல்குவனென்றதனாற் பயன்: மறவாது போதல் வேண்டுமென்னும் நினைவாயிற்று’’ (புறநா.பழைய.ப.159) என்று சுட்டுகிறது. இப்பகுதியில் பிசிராந்தையார், அன்னத்தைப் பார்த்து பேரரசனாகிய கிள்ளி கேட்குமாறு பிசிர் என்னும் பெரிய ஊரில் உறையும் ஆந்தையின் அடிக்கீழ் எனச் சொல்லுவாயானால் நின்னுடைய பெண் அன்னம் பூணுமாறு நல்ல அணிகலன்களை அளிப்பான். இதனையே மறவாது நீ போவாய் என்று அமைந்துள்ள பிசிராந்தையாரின் கூற்றின் பயனை நினைவுறுத்திச் செல்கின்றார், பழையவுரையாசிரியர். சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியைப் பாடிய நக்கண்ணையார்,

> ‘‘உமணர் வெரூஉந் துறையன் நன்னே’’ (புறநா.84:6)

என்பர். இதன் விசேடவுரையில், உமணர் வெரூஉம் துறையன்ன னென்றதனாற் பயன்: வருத்துங் கூற்றின் ஆடவரையும் மகளிரையும் ஒக்க வருத்துவதல்லது அருளுமாறு கற்றிலனோவென்னும் அறிவிற்றாக’’ (புறநா.பழைய.ப.191) என்பர், பழையவுரையாசிரியர். போர்க்கள ஆடவர் அஞ்சுவதற்கும் பெண்கள் பசலையுற்று வருந்துவதற்கும் கிள்ளியின் தோள்களே காரணமாக அமைகின்றன. இதுபோன்று மேடு பள்ளங்களில் வண்டியில் உப்பு ஏற்றிச் செல்லும் உமணர்களும் போர்க்கள ஆடவர் போன்று அச்சம் மிகுந்தவர்களாகக் காணப்படுகின்றனர். இதனையே பழைவுரையும் நினைவுறுத்திச் செல்கின்றது.

> ‘‘பாடுவல் விறலியோர் வண்ண நீரும்’’ (புறநா.152:13)

என்பதன் விசேடவுரை, ‘‘பாடுவல் விறலியோர் வண்ணமென்றது நீயும் ஒன்று பாடுவாயாகவென்னும் நினைவிற்று’’ (புறநா.பழைய.ப.281) என்று அமைந்துள்ளது. இப்பாடல் வல்வில்ஓரியை வன்பரணர் பாடுவதாக அமைந்துள்ளது. இப்பாடலில் வன்பரணர் விறலியைப் பார்த்து வல்வில்ஓரியை நீயும் புகழ்ந்து ஒரு பாடல்

பாடுவாயாக என்று கூறுகின்றார். இச்செய்தியைப் பழையவுரையாசிரியர் நினைவிற்று என்னும் உரைமரபில் சுட்டுகிறார்.

மூவனென்பான் பரிசில் கொடுக்க நீட்டித்த காலத்துப் பெருந்தலைச் சாத்தனார்,

''நோயிலை யாகுமதி பெரும நம்முட்
குறுநணி காண்குவ தாக நாளும்'' (புறநா.209:14-15)

என்பர். இதற்குப் பழையவுரையாசிரியர், ''நம்முட் குறுநணி காண்குவதாக வென்றது, நீ என் மாட்டுச் செய்த அன்பின்மையை அவ்விருக்கையன்றிப் பிறரறியாதொழிவாராகவென்னும் நினைவிற்று'' (புறநா.பழைய.ப.376) என விளக்கம் கூறுவர். மூவன் என்னும் அரசனிடம் பெருந்தலைச் சாத்தனார் பரிசில் வேண்டிச் செல்கின்றார். அவன் பரிசில் கொடாமல் காலம் நீட்டிக்கின்றான். இதனால் பெருந்தலைச் சாத்தனார், நீ என் மீது காட்டும் அன்பும் அன்பின்மையும் பிறர் அறியாதவாறு அமைய வேண்டும் என்று கூறுகின்றார். இவ்வாறு பாடல்களில் இடம்பெற்றுள்ள பயனை நினைவுறுத்துவது பழையவுரையாசிரியரின் உரை இயல்புகளுள் ஒன்றாக அமைகின்றது.

**இன்ன சிறப்பென்றுரைத்தல்**

புறநானூற்றுக்கு அமையப்பெற்ற பழையவுரையின் சிலபாடல்களின் இறுதியில், அப்பாடலுக்கான சிறப்பு உணர்த்தப்படுகின்றது. இச்சிறப்பை எடுத்துக்காட்டுதல் என்னும் உரைப்போக்கு பதிற்றுப்பத்துப் பழையவுரையிலும் இடம்பெற்றுள்ளது. புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் 95, 96, 128, 130, 156 ஆகிய ஐந்து பாடல்களுக்கான உரைகளில் 'இன்ன சிறப்பென்றுரைத்தல்' என்னும் உரைமரபினைக் குறிப்பிடுகின்றார்.

''இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்

உண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணும்
இல்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே'' (புறநா.95)

என்னும் பாடல் அதியமான் ஔவையாரைத் தொண்டைமானிடம் தூது அனுப்பியதாக அமைந்ததாகும். தொண்டைமானின் படைக்கருவிகள் அழகுற விளங்கின என்னும் புகழ்ச்சி அவன் போர்க்களம் கண்டு போரிடாத தன்மையால் பொலிவு மாறாமலிருந்தன என்பதையும் அதியமானின் படைக்கருவிகள் பொலிவிழந்து கொல்லனின் பட்டறையில் கிடந்தன என்னும் இகழ்ச்சி அவன் பல போர்களைக் கண்டு வென்றவன் என்பதையும் உணர்த்தும். எனவே போர்க்கருவிகள் நுனி சிதைந்து, திருத்தப்படுவதற்குக் கொல்லன் பட்டறையில் கிடக்கின்றன என அதியமானின் பேராற்றலைப் புகழ்ந்து உரைக்கின்றார். ஔவையார் என்னும் புலவர் அதியமானுக்காகத் தூது செல்கிறார் என்பதன் வாயிலாக, அவன் கொடைச்சிறப்பு உணர்த்தப்படுகின்றது. இதனை, ''இது கொடைச்சிறப்பும் வெற்றிச் சிறப்பும் கூறியவாராயிற்று'' (புறநா.பழைய.ப.203) என்னும் பழையவுரையாசிரியரின் உரை மூலம் அறிய இயலும்.

அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியை ஔவையார்,

''அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பிற்
றிரண்டுநீடு தடக்கை யென்னை யிளையோற்
கிரண்டெழுந் தனவாற் பகையே யொன்றே
பூப்போ லுண்கண் பசந்துதோ ணுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன் றொன்றே
விழவின் றாயினும் படுபதம் பிழையாது
மையூன் மொசித்த வொக்கலொட துறைநீர்க்
கைமான் கொள்ளு மோவென
உறையுண் முனியுமவன் செல்லு மூரே'' (புறநா.96)

எனப்பாடுவர். இப்பாடலில் பொகுட்டெழினியைக் கண்டு மகளிர் பலர் காதல் கொள்கின்றனர். அதனால் ஏற்படுகின்ற பகை ஒன்று. அவனது ஊரில்

திருவிழாக்கள் நடைபெறவில்லையாயினும் போர்ப்படைகளின் ஆரவாரம் விழாக்களை ஒத்ததாகக் காணப்பட்டது. இதனால் எழுந்த பகை மற்றொன்று. இவ்வாறு பொகுட்டெழினி மீது மகளிர் பலர் கொண்ட இன்பமும் போர்ப்படைகளின் ஆரவாரத்தால் ஏற்பட்ட வெற்றிச் சிறப்பும் சுட்டப்பட்டுள்ளது. இதனையே பழையவுரையின் இறுதியில், ‘‘இதனால் அதன் இன்பச்சிறப்பும் வென்றிச் சிறப்பும் கூறியவாறு’’ (புறநா.பழைய.ப.104) என்று பழையவுரையாசிரியர் சுட்டி இருக்கின்றார்.

புறநானூற்றில் அமைந்துள்ள 128, 130 ஆகிய இரண்டு பாடல்களையும் ஆய் அண்டிரன் என்னும் மன்னனை, ஏணிச்சேரி முடமோசியார் பாடியதாகும். இவ்விரண்டு பாடல்களும் ஆய் அண்டிரனின் கொடைச் சிறப்பினையும் வெற்றிச் சிறப்பினையும் குறிப்பிடுவதாக உள்ளன. அவற்றுள்,

‘‘மன்றப் பலவின் மாச்சினை மந்தி
இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் றெண்கண் கனிசெத் தடிப்பின்
அன்னச் சேவன் மாறெழுந் தாலும்
கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்
ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ வரிதே’’ (புறநா.128)

என்னும் பாடலில், வீரக்கழல் அணிந்த ஆய் அண்டிரனின் பொதியின் மலையை, ஆடச்செல்லும் விறலியர் அணுக இயலுமேயன்றி போர் வேட்டுவர்களும் பெருமை பொருந்திய மாற்றரசர்களும் அணுகுவது மிகவும் அரிதான செயலாகும். ஊர்ப்பொதுவிடத்தில் இருந்த பெரிய பலா மரத்தின் கிளையில் மந்தி வாழ்கின்றது. அது பலாமரத்தில் கட்டியிருந்த முழவினைப் பலாப்பழம் எனக் கருதித் தட்டியது. இந்நிகழ்வு ஆய் அண்டிரனுடன் போரிடக் கருதும் பகைமன்னர்களை ஒப்புமைப்படுத்தவே கூறப்பட்டுள்ளது. இதன்மூலம் ஆய் அண்டிரனின் பொதியமலையை அணுகிப் போர் செய்ய நினைக்கும் பகைமன்னர்கள், மந்தி பலாப்பழம் என்று கருதி ஏமாற்றம் அடைந்த நிலையைப் போல ஏமாற்றம் அடைவர், என்பதே உட்குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளது. இதனை, ‘‘இது கொடைச் சிறப்பும் வென்றியும் கூறியவாராயிற்று’’ (புறநா.பழைய.ப.246) என்னும் பழையவுரை உணர்த்தும். அடுத்ததாக, புறநானூறு 130 ஆம் பாடலில்,

“விளங்குமணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்டு
இளம்பிடி யொருசூல் பத்தீ னும்மோ
நின்னுநின் மலையும் பாடி வருநர்க்
கின்முகங் கரவா துவந்துநீ யளித்த
அண்ணல் யானை யெண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே”

அடிகளில், ஆய் அண்டிரன் தன்னையும் தன் மலையையும் பாடி வருபவர்களுக்கு இன்முகத்தோடு யானைகள் பலவற்றைப் பரிசிலாக வழங்கக் கூடியவன் என்ற செய்தி சுட்டப்பட்டுள்ளது. அவன் தன்னை நாடி வருவோருக்குப் பரிசிலாக வழங்கிய யானைகள், கொங்கரை மேற்கடற்கண்ணே போரிட்டுத் துரத்தியபோது, அவர் புறங்கொடுத்தலால் பெயர்த்துப்போட்ட வேலினும் பலவாகும். இதன்மூலம் ஆய் மன்னனின் கொடைச் சிறப்பும் வெற்றிச் சிறப்பும் புலப்படும். இந்நிகழ்வுகளை, “இதனால் கொடைச் சிறப்பும் வென்றிச் சிறப்பும் கூறியவாறு”(புறநா.பழைய.ப.248) என்னும் பழையவுரையாசிரியரின் உரைப்பகுதி நன்கு உணர்த்தும். கொண்கானங்கிழானை மோசிகீரனார் பாடியதாக,

“ஒன்றுநன் குடைய பிறர்குன்ற மென்றும்
இரண்டுநன் குடைத்தே கொண்பெருங் கானம்
நச்சிச் சென்ற விரவலர்ச் சுட்டித்
தொடுத்துணக் கிடப்பினுங் கிடக்கு ம.ஃ.தொன்று
நிறையருந் தானை வேந்தரைத்
திறைகொண்டு பெயர்க்குஞ் செம்மலு முடைத்தே” (புறநா.156)

என்னும் பாடல் அமைந்துள்ளது. இப்பாடலில், பிற மன்னர்களுடைய மலைகள் வண்மை, வலிமை ஆகிய இரண்டில் ஒன்றை மட்டுமே உடையதாக இருந்தது. ஆனால் கொண்கானங்கிழானின் மலை இரண்டு சிறப்புகளையும் உடையதாக இருந்தது. ஒன்று: மன்னனிடம் இரந்து பொருள் கேட்டு வருவோரின் பரிசுப் பொருளை, முன்பு இரவல் கொடுத்தவர்கள் வாங்கிச் செல்வதற்காக வரும் தன்மையுடையது. மற்றொன்று: கொண்கானங்கிழானுக்குத் திறை செலுத்தி மீளும்

சிற்றரசர்களால் சூழப்பட்டிருக்கும். இவ்விரண்டு சிறப்புக்களைக் குறிப்பிடும் பழையவுரை, “இது கொடைச்சிறப்பும் வென்றிச் சிறப்பும் கூறியவாறு” (புறநா.பழைய.ப.288) என்று சுட்டுகிறது. இவற்றிலிருந்து பழையவுரையாசிரியரின் இன்ன சிறப்பென்றுரைத்தல் என்னும் உரைப்போக்கினை அறிய இயலும்.

**இலக்கணக் குறிப்புக் கூறுதல்**

பண்டைத் தமிழ் இலக்கியங்களுக்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் பலரும் இலக்கணக் குறிப்புகள் தந்து உரையெழுதுவதை உரைமரபாகக் கொண்டுள்ளனர். இலக்கிய உரைகளில் அதிகமாக இலக்கணக் குறிப்புகள் கூறி உரையெழுதியவர் திருக்குறள் உரையாசிரியர் பரிமேலழகர் ஆவார். இவர் திருக்குறளுக்கு எழுதிய உரை, இலக்கண உரை என்றும் அழைக்கப்படுகிறது. சங்க இலக்கியங்களுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளிலும் இலக்கணக் குறிப்பு காணப்படுகின்றது. அவற்றுள் புறநானூற்றுப் பழையவுரையும் குறிப்பிடத் தக்கதாகும். புறநானூற்றுக்கு உரையெழுதிய பழையவுரையாசிரியர் ஆங்காங்கே பலவகையான இலக்கணங்களை எழுதிச் செல்கின்றார். இவர் அசைநிலைகளையும், விகாரங்களையும், எச்சத் திரிபுகளையும், அடுக்கு, இடைச்சொல் முதலியவற்றாற் பெறப்படும் பொருள்களையும் எடுத்துரைக்கின்றார். இலக்கணத்தின் அனைத்துக் கூறுகளையும் தம் உரையிடையே சுட்டியுள்ளமை மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பழையவுரையாசிரியர் கூறியுள்ள இலக்கணக் குறிப்புகளாக, அசைநிலையும்மை, அசைநிலையேகாரம், அடுக்கு இரங்கற் குறிப்புணர்த்தல், அடுக்கு விரைவின்கண் வருதல், அடை, அத்தையென்னும் அசைநிலை, அம்மவென்னும் அசைநிலை, அம்ம கேட்பித்தற்கண் வருதல், அல்லீற்றுத் தனித்தன்மை வினை, அல்லீற்று வியங்கோள், அல்வழிச் சாரியை, ஆகுபெயர், ஆங்கதென்பது ஒரு சொல், ஆங்கென்னும் அசைநிலை, ஆசாகென்னும் இரங்கற் குறிப்புப் படுமொழி, ஆல் என்னும் அசை, ஆலுருபு விரித்தல், ஆற்றலாற் போந்த பொருள், இகழ்ச்சிக் குறிப்பு, இசினென்பது தன்மைக்கண் வருதல், இசினென்பது படர்க்கைக்கண் வருதல், இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்துமேல் ஏறிநிற்றல், இட வழுவமைதி, இடைக்குறை, இயரீற்று வியங்கோள், இருமுறை கூறுவதால் ஆதரவு தோற்றல், இழிவு சிறப்பும்மை, இறப்ப இழிந்த ஆனந்த உவமை, அன்னென்னும் அசைநிலை, இன்னென்னும் சாரியை, உம் உந்தாய் நிற்றல், உம்மை இசைநிறை, உம்மை எஞ்சி நிற்றல், உம்மை விகாரத்தால் தொகுதல்,

உயர்திணை ஆறனொருமையில் அதுவெனும் உருபுகெடக் குகரம் வருதல், உருபு மயக்கம், உருபு விரித்துரைத்தல், உவமங்கருதாத அடை, உவமை, எச்சத் திரிபு, எச்சவும்மை, எதிர்காலச்சொல் இறந்த காலப் பொருட்டாய் நிற்றல், எதிர்மறை வினையெச்ச முற்று, எனவென்னும் அசைநிலை, எனாவென்னும் எண்ணிடைச்சொல், ஏ என்னும் அசைநிலை, ஐ என்னும் அசைநிலை, ஐகாரம் முன்னிலையை விளக்கி நிற்றல், ஐகாரம் விகாரத்தால் தொகுதல், ஒட்டன்றி ஒருபெயராய் நிற்கும் தொடர், ஒப்பில்போலி, ஒருசொல் வருவித்து வினையெச்சத்தை முடித்தல், ஒருமை பன்மை மயக்கம், ஒன்றோவென்னும் எண்ணிடைச்சொல், ஓ என்னும்சொல் வியப்புப் பொருளிலும் வினாப் பொருளிலும் வருதல், ஓர் என்னும் அசைநிலை கருவி கருத்தாவாய் நிற்றல், ஓரிடத்திலுள்ள சொல்லை எங்குந் தந்துரைத்தல், கடைக்குறை, கண் என்னும் அசைநிலை, கால மயக்கம், குடிமை ஆண்மை தொடக்கத்தன உயர்திணை பெறுதல், குறிப்பிற்றோன்றல், குறிப்புமொழி, குறிப்பு வினையெச்சம், எதிர்மறை வினையின் முதனிலையோடு முடித்தல், குறுகி நிற்றல், கொல்லென்பது அசைநிலையாகவும் ஐயப்பொருளிலும் வியப்புப் பொருளிலும் வருதல், சிறப்பும்மை, சின் என்னும் இடைச்சொல் முன்னிலை வினைச்சொல்லோடு அசைக்கப்பட்டு நிற்றல், சினைவினை முதல்வினை கொள்ளல், செய்தென் வாய்பாட்டு வினையெச்சம் செயவெனத் திரிதல், செய்தெனெச்சம் வினைக்குறிப்பொடு முடிதல், செய்யுள் நோக்கி விரித்தல், செய்யுள் விகாரம், செயவெனெச்சம், செயவெனெச்சம் பிறவினையொடு முடிதல், செயவெனெச்சம் வினைக்குறிப்பொடு முடிதல், சொற்றொடர் ஒருசொல் நடைத்தாதல், சொற்றொடர் பெயர் மாத்திரையாக நிற்றல், தகுதி பற்றிக் கூறல், தலையென்னும் அசைநிலை, தானென்னும் அசைநிலை, திசைச்சொல், தில்லென்பது அசைநிலையாகவும் விழைவுப் பொருளிலும் வருதல், தொகுதல், தொகுதி ஒருமை, நிரனிறை, படர்க்கைச்சொல் முன்னிலைக்கண் வருதல், பண்புத்தொகை புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, பண்பொட்டு, பன்மை ஒருமை வழுவமைதி, பெருமிதந் தோன்ற நிற்றல், பிறவென்னும் அசைநிலை, பிறவினை தன்வினையாய் நிற்றல், பெயர் மாத்திரையாய் நிற்றல், பெயரெச்சம் பெயரோடு முடிதல், பொதுவினை, பொருணோக்கால் முடிவுபெறுதல், மதியென்னும் அசைநிலை முன்னிலையில் வருதல், மற்று என்னும் அசைநிலை, மறைப்பொருள், மன் ஆக்கப் பொருளிலும் ஒழியிசைப் பொருளிலும் கழிவுப்பொருளிலும் வருதல், மன் என்னும் அசைநிலை, மா என்னும் அசைநிலை, மாதோ என்னும் அசைநிலை, மாறக் கூட்டுதல்,

மாறென்னும் ஏதுப்பொருள் தரும் இடைச்சொல், முதற்கேற்ற அடையடுத்த ஆகுபெயர், முற்று வினைக்குறிப்பு, முன்மொழி நிலையல், முன்னிலைப் பெயரோடு படர்க்கைப் பெயர்கள் விராய் வந்து முன்னிலை வினையால் முடிதல், முன்னிலையேவல், முன்னிலை வினைச்சொல் மெலிந்து நிற்றல், மோ என்னும் முன்னிலை அசைச்சொல், வகரவீற்றுச் செயவெனெச்சம் வகரம் கெட்டு முடிதல், வலித்து நிற்றல், வழக்கு வாய்பாடு, வாழியென்னும் அசைநிலை, விகாரம், வியப்பின்கட் குறிப்பு, வினைக்குறிப்பு ஆக்கம் பெறுதல், வினைக்குறிப்பு முற்று, வினைத்தொகை, வினைமுடிவு, வினையெச்சக் குறிப்பு, வினையெச்சம் குறிப்பு வினையோடு முடிதல், வினையெச்சம் பெயரெச்ச வினையொடு முடிதல், வினையெச்சம் வருவித்துரைக்கும் சொல்லொடு முடிதல், வினையெச்ச முற்று, வினையெச்ச வினைக்குறிப்பு முற்று, வெளிப்படை, வேண்டாவென்பது வினைமேனின்றதொருசொல் எனப் பழையவுரையாசிரியரின் இலக்கணம் சுட்டும் முறை அமைந்துள்ளது. இதிலிருந்து புறநானூற்றுப் பழையவுரையில் அனைத்து வகையான இலக்கணக் கூறுகளும் இடம்பெற்றுள்ளமை புலப்படும்.

> ''மறம் பாடிய பாடினி யும்மே
> ஏருடைய விழுக்கழஞ்சிற்
> சீருடைய இழைபெற் றிசினே''
> இழை பெற்ற பாடினிக்குக்
> குரல் புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்மே'' (புறநா.11:11-15)

என்ற அடிகளுக்கான பழையவுரையாசிரியரின் இலக்கணம், '''பாடினிக்கு... பாண்மகன்' என்பது, அதுவெனுருபுகெடக் குகரம் வந்தது; உயர்திணையாகலின். பாடினி பாடலுக்கேற்பக் கொளைவல் பாண்மகனெனினும் அமையும். எனவும், ஆங்கும்: அசைநிலை; பெற்றிசின் மூன்றும் படர்க்கைக்கண் வந்தன'' (புறநா.பழைய.ப.32) என்று அமைகின்றது. மேலே குறிப்பிட்டுள்ள முதல் மூன்று அடிகளுக்கான இலக்கணமாக, ''அரசனது வீரத்தைப் பாடிய பாடினியும் தோற்றப் பொலிவினையுடைய சிறந்த பல கழஞ்சாற் செய்யப்பட்ட நன்மையையுடைய அணிகலன்களைப் பெற்றாள் என்பது பொருள். இச்செய்யுளுள் 'யான் அது பெறுகிற்றிலேன்' என்ற குறிப்பு எஞ்சி நின்று உணர்த்தப் படுதலால் குறிப்பெச்சம். இக்குறிப்பெச்சம் வடமொழியில் 'அருத்தாபத்தி'''[30] என்பர், மா.சின்னு.

“யாழொடும் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினும் தந்தையர்க்கு
அருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை” (புறநா.92:1-3)

என்ற அடிகளுக்கான இலக்கணம் கூறும் பழையவுரை, “பொருளுமென்னும் உம்மை விகாரத்தால் தொக்கது”(புறநா.பழைய.ப.199) என்று அமைகின்றது. பழைய உரையாசிரியரின் இலக்கணப் புலமையை, “இஃது ஔவையார் பாடியது. ‘யாழோசை போல இன்பமும் செய்யா; காலத்தொடும் கூடியிரா; பொருளும் அறியவாரா ஆயினும் தந்தையர்க்கு அருளுதல் வந்தன. பிள்ளைகளுடைய இளஞ்சொல் என்பது பொருள். ‘யாழொடும் பொழுதொடும்’ என்று பாடிய ஔவையார் அடுத்த அடியைப் பொருளொடும் என்றோ ‘பொருளும்’ என்றோ தொடங்கிப் பாடியிருக்க வேண்டும். ஆனால் அவ்வாறு பாடவில்லை. ‘பொருளறி’ என்னும் இரண்டாமடியைப் பாடித் தொடங்குகிறார். அதனால் பிழையாய்த் தோன்றுகிறது. உரைக்குக் கீழே பார்க்கும்பொழுது பழைய உரையாசிரியர், ‘பொருளும்’ என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது என்றெழுதி நம் ஐயத்தைப் போக்குகிறார். ஔவையாரை எவரும் தாக்காமல் பாதுகாக்கிறார்”[31] என எடுத்துரைப்பர், மா.சின்னு. இவற்றால் இலக்கணக் குறிப்புக் கூறி, உரை கூறும் பழைய உரையாசிரியரின் உரை மூலபாடத்தை அறிந்துகொள்வதற்குத் துணைசெய்வதும் புலனாகும்.

### துறைப்பொருத்தம் கூறுதல்

சங்க இலக்கியங்களுக்கான பழையவுரைகளில் திணை, துறை போன்றவைகளைப் பொருத்திக் காட்டும் முறை காணப்படுகின்றது. அவற்றுள் புறநானூற்றுப் பழையவுரையும் அடங்கும். புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் புறப்பொருள் துறைகளைச் செய்யுட் பொருளோடு பொருத்திக் காட்டுகிறார். இவர், சில இடங்களில் சில துறைகளுக்கும் புறப்பொருள் வெண்பாமாலையிலிருந்து மேற்கோள் காட்டுவர். அவ்வாறு, பழையவுரையாசிரியர் கொற்றவள்ளை, செவியறிவுறூஉ,270 பொருண்மொழிக்காஞ்சி, மலபுழவஞ்சி, பரிசில்கடாநிலை, வாழ்த்தியல், இயன்மொழி, முதுமொழிக்காஞ்சி, துணைவஞ்சி, அரசவாகை, புலவராற்றுப்படை, உடனிலை, பூவைநிலை, குடைமங்கலம், குறுங்கலி, தாபதநிலை, பரிசில்விடை, ஆனந்தப்பையுள், கையறுநிலை ஆகிய பத்தொன்பது

துறைகளை மட்டுமே பாடலுடன் பொருத்திக் காட்டுகின்றார். அவ்வகையில் 4, 5, 6, 7, 11, 13, 14, 15, 16, 18, 24, 35, 36, 43, 45, 46, 49, 57, 58, 59, 66, 74, 143, 162, 228, 243 ஆகிய இருபத்தாறு பாடல்களுக்குத் துறைப்பொருத்தம் கூறப்பட்டுள்ளது.

புறநானூற்றின் 4வது பாடல் கொற்றவள்ளை என்னும் துறையைக் கொண்டுள்ளது. மன்னனது புகழைக்கூறி, பகைவர் நாட்டின் அழிவைக் கண்டு இரங்குதல் கொற்றவள்ளை ஆகும். இதற்குப் பழையவுரையாசிரியர் தம் உரையில், ‘‘செஞ்ஞாயிற்றுக் கவினை(16) யென்றதுணையும் மன்னவன் புகழும், ஓவாது கூஉ நின் உடற்றியோர் நாடென(19) ஒன்னார் நாடழிபிறங்கலு மோதலான், இது கொற்றவள்ளை (பு.வெ.43) யாயிற்று’’ (புறநா.பழைய.ப.13) என்று பொருத்தம் காட்டுகிறார். செஞ்ஞாயிறு பெரியகடல் நடுவே எழும்பொழுது வெப்பம் குறைவாகக் காணப்படும். அதுவே உச்சிக்குச் செல்லச்செல்ல வெப்பம் அதிகமாகும். அதுபோல போர்க்களத்தை நெருங்க நெருங்க இளஞ்சேட்சென்னியின் சீற்றம் அதிகரித்துக்கொண்டே செல்லும். இதனால் நின்னைப் பகைத்தவர் நாடுகள் தாயில்லாததால் உணவுண்ணாமல் அழும் குழந்தையைப்போல விளித்து அழுவனவாயின. இதனையே, பழையவுரையாசிரியர் துறைப் பொருத்தமாகச் சுட்டுகிறார்.

‘‘அருளும் அன்பும் நீக்கி, நீங்கா
நிரயம் கொள்பவரொடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி!
அளிதோ தானே; அதுபெறல் அருங்குரைத்தே’’ (புறநா.5:5-8)

என்னும் அடிகளைக் கொண்ட இப்பாடல் செவியறிவுறூஉ, பொருண்மொழிக்காஞ்சி என்னும் இரண்டு துறைகளைக் கொண்டுள்ளது. இது சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையை அடைந்து நரிவெரூஉத்தலையார் பாடியது. இப்பாடலின் இறுதி இரண்டு அடிகள், கோப்பெருஞ்சேரல் பாதுகாக்கக்கூடிய நாடானது ஒரு குழந்தையைப் பேணுபவர்போல் பாதுகாக்க வேண்டுமென்று அறிவுறுத்துவதாக அமைந்துள்ளது. எனவே, இது செவியறிவுறூஉ என்னும் துறையாகும். முதல் இரண்டடிகள், அருளையும் அன்பையும் ஒழித்துத் தீவினை புரிதலான் நரகத்திலிருந்து நீங்காத தன்மையை அடைபவர்களைப் பற்றிய

நிலையாமைக் கருத்தைக் குறிப்பிடுவதால் பொருண்மொழிக்காஞ்சித் துறைக்குப் பொருந்தும். இதனையே பழையவுரையாசிரியர், ‘‘காவல் குழவி கொள்பவரினோம்பென்றமையாற் செவியறிவுறூஉவும், அருளும் அன்பும் நீக்கி நீங்கா நிரயங் கொள்பவரொடொன்றா தென்றாமையாற் பொருண்மொழிக் காஞ்சியுமாயிற்று’’ (புறநா.பழைய.ப.16) என்று பொருத்திக் காட்டுகிறார்.

புறநானூற்றின் 6ஆம் பாடலில், ‘‘தெரிகோல் ஞமன்ன் போல ஒருதிறம்(8) பற்றல் இலியரோ(9) பணியியர் அத்தை, நின்குடையே’’(17) என்னும் அடிகள், பரந்த பொருட்களை ஆராயக்கூடிய துலாக்கோல் போலவும் நின்னை வாழ்த்த உயர்த்திய கைகளின் முன்னர் நின் தலை பணிந்தே இருக்க வேண்டுமென்று கூறுவதும் செவியறிவுறூஉ என்னும் துறையைச் சுட்டும். இப்பாடலிலேயே, ‘‘தண்கதிர் மதியம் போலவும் தெறுசுடர் (27) ஒண்கதிர் ஞாயிறு போலவும்(28) மன்னிய பெரும!(29) என்னும் அடிகள் மன்னனை வாழ்த்துவதாக அமைந்துள்ளது. இத்துறைகளை, ‘‘இ∴து, இவ்வாறு செய்கவென அரசியல் கூறலிற் செவியறிவுறூஉவும், மதியமும் ஞாயிறும்போல மன்னுகவென்றமையான் வாழ்த்தியலுமாயிற்று’’ (புறநா.பழைய.ப.19) என்று பழையவுரையாசிரியர் பொருத்திக் காட்டுகிறார்.

சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியதாக அமைந்த, இப்பாடலில் கொற்றவள்ளை, மழபுலவஞ்சி ஆகிய இரண்டு துறைகள் இடம்பெற்றுள்ளன. இதனை,

> ‘‘ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்
> கொள்ளை மேவலை ஆகலின், நல்ல
> இல்ல ஆகுபவால் - இயல்தேர் வளவ!
> தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து
> மீனின் செறுக்கும் யாணர்ப்
> பயன்திகழ் வைப்பின் பிறர்அகன் றலைநாடே!’’ (புறநா.7:8-13)

என்னும் அடிகள் உணர்த்தும். இதனை விளக்கும் பழைவுரை, ‘‘இது, பிறரகன்றலைநாடு நல்ல இல்லவாகுப வென்றமையிற் கொற்றவள்ளையும், ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலையென்றமையின் மழபுல வஞ்சியுமாயிற்று’’

(புறநா.பழைய.ப.22) என்று சுட்டுகிறது. பகைவர்களின் அகன்ற இடம் அமைந்த நாடுகள், நீ கொள்ளையை விரும்பினையாகையால் இனி நல்ல பொருட்கள் இல்லாதனவாயப் போய்விடும் என்பது கொற்றவள்ளை துறை ஆகும். பகைவர் நாட்டைக் கொள்ளை கொண்டு அவர்தம் மனைகளைப் பாழாக்குதலைக் கூறுதலால், மழபுலவஞ்சியும் ஆயிற்று. இந்நிகழ்வுகளையே, பழையவுரை துறைக்குறிப்போடு பொருத்திக் கூறுகின்றது.

''இழை பெற்ற பாடினிக்குக்
குரல்புணர் சீர்க் கொளைவல் பாண் மகனும்மே
என ஆங்கு,
ஒள் அழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே'' (புறநா.11:13-18)

என்னும் அடிகள், சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பேய்மகள் இளவெயினி பாடியதாகும். இப்பாடலில் பரிசில் வேண்டி நிற்றலை மன்னர்க்கு அறிவுறுத்த வேண்டி, 'யாவரும் பரிசில் பெற்றனர் நான் பெறவில்லை' என்று குறிப்பால் கூறுதல். இந்நிகழ்வை, ''பாடினி இழைபெற்றாள், பாணண் பூப் பெற்றான், யான் அதுபெறுகின்றிலேனெனப் பரிசில்கடாநிலையாயிற்று'' (புறநா.பழைய.ப.32) என்று பழையவுரை பொருந்தச் சுட்டுகிறது.

புறநானூற்றின் 13ஆம் பாடல் ஏணிச்சேரி முடமோசியார் பாடியதாகும். சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையுடன் கொண்ட பகையால் சோழன் கோப்பெருற்கிள்ளி கருவூரிடத்திற்கு யானைமீது ஏறித் தன்படையுடன் போரிட வருகின்றான். இவனது வருகையை அரசன் இருக்கும் மாடத்தில் இருந்து புலவரும் காண்கிறார். அவ்வாறு வரும் மன்னனுக்குத் தீங்கு வருமென்று கருதி அப்பகை மன்னனை வாழ்த்துகிறார். புலவரின் இத்தகைய பெருமிதத்தை, ''பெருநற்கிள்ளி களிறு கையிகந்து பகையகத்துப் புகுந்தமையான் அவற்குத் தீங்குறுமென்று அஞ்சி வாழ்த்தினமையால், இது வாழ்த்தியலாயிற்று'' (புறநா.பழைய.ப.35) என்ற பழையவுரை உணர்த்தும்.

புறநானூற்றின் 14ஆம் பாடலைக் கபிலர் பாடியுள்ளார். இது இயன்மொழி என்னும் துறையைச் சார்ந்தது. இப்பாடலில் செல்வக்கடுங்கோ வாழியாதன்

கபிலரின் கை பற்றி, நும் கை மெல்லியவாக உள்ளது என்று சுட்டுகிறார். அதற்கு கபிலர் பதில் உரைப்பதாக, இப்பாடல் அமைகிறது. நின்னைப் புகழக்கூடிய என் போன்ற புலவர்களுடைய கைகள் புலால் மணமுடைய பசிய இறைச்சியை பூமணம் வீசும் புகையால் எழுப்பிச் செய்த ஊனையும் துவையலையும் கறியையும் சோற்றையும் உண்ணும் தொழிலையே செய்கிறது. மற்ற உயிர்களை வருத்தக்கூடிய எச்செயலையும் செய்வதில்லை. ஆகவே, தமது கை மென்மையாக உள்ளது என்று கூறுகிறார். நாட்டைப் பாதுகாக்கும் தலைவனாகிய நின்னுடைய கைகள் யானைகளைப் போர் செய்யத் தூண்டுவன. அம்பறாத்தூணியை உடைய முதுகினராய்த் தேர்மேல் நின்று வில்லின் வலிய நாணின் விசையால் வடு உண்டாகும்படி அம்பு செலுத்தக்கூடியவை ஆகும். மேலும் பரிசில் வேண்டுவோர்க்கு பெறுதற்கரிய பொருட்களை நல்கக் கூடியன. ஆகவே முழந்தாளைத் தொடக்கூடிய அளவிற்கு நின் கைகள் காணப்படுகின்றன. இச்செய்தியினையே, “தம் கையின் மென்மையது இயல்பு கூறுவார், அரசன்கையின் வலிய இயல்புங் கூறினமையான், இ∴து இயன்மொழியாயிற்று” (புறநா.பழைய.ப.38) என்று பழையவுரை துறைப்பொருத்தம் கூறுகின்றது.

புறநானூற்றின் 15ஆம் பாடல் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது ஆகும். இப்பாடல் இயன்மொழி என்னும் துறையைச் சார்ந்தது. போரில் வெற்றி பெறுதலும் வேள்வி செய்தலும் முதுகுடுமிப் பெருவழுதியின் செயல் ஆகும். இது மன்னனுக்கு இயல்பாகவே அமைந்திருந்தது. இதன் காரணமாகவே பழையவுரையாசிரியர், “இவை எப்பொழுதும் செய்தல் இயல்பெனக் கூறினமையின், இ∴து இயன்மொழியாயிற்று” (புறநா.பழைய.ப.40) என்று விளக்கம் அளிக்கின்றார்.

“பெருந்தண் பணைபாழ் ஆக
ஏமநல் நாடு ஒள்ளரி ஊட்டினை” (புறநா.16:16)

என்னும் அடிகள் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாண்டரங்கண்ணனார் பாடியதாகும். பகைவர்மேல் படையெடுத்துச் செல்லும் திறத்தைப் பற்றிக் கூறுவது வஞ்சித் திணை ஆகும். துறை மழபுல வஞ்சி. இது பகைவர் நாட்டைப் பாழாக்குதலைக் குறிக்கும். பெரிய குளிர்ந்த மருதநிலம் பாழாகுமாறு காவலுடைய நல்ல நாட்டை தீயிட்டு எரித்த செய்தியை, “ஏம

நன்னாடு ஒள்ளெரியூட்டி யென்றதனால், இது மழபுலவஞ்சியாயிற்று'' (புறநா.பழைய.ப.43) என்று துறைப்பொருத்தம் கூறுகிறார், பழையவுரையாசிரியர்.

புறநானூற்றின் 18ஆம் பாடல் பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் பாடியதாகும். துறை முதுமொழிக்காஞ்சி. அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றின் தன்மையையும் அறிவிற் பெரியோர் எடுத்துக் கூறுவது முதுமொழிக்காஞ்சி என்னும் துறை ஆகும். இம்மூன்றும் நீர் வளத்திற்கு ஏற்பவே நிலைக்கும் என்பதை, ''நீர்நிலைபெருகத்தட்கவே அறன் முதன் மூன்றும் பயக்கு மென்பதும் கூறினமையான், இது முதுமொழிக்காஞ்சியாயிற்று''(புறநா.பழைய.ப.49) என்று பழையவுரையாசிரியர் துறைப்பொருத்தம் கூறுவர்.

புறத்திணைக்குப் பொதுவான திணை பொதுவியல் திணை. துறை பொருண்மொழிக் காஞ்சி. இது உயிருடன் தொடர்புடைய இம்மை மறுமைகளைப் பற்றி குறிப்பிடுகின்றது. இதனைச் சுட்டும் பழையவுரை, ''இது, நிலையாமை கூறி, இனிது ஒழுகென்றமையாற் பொருண்மொழிக்காஞ்சி'' (புறநா.24.பழைய.ப.66) என்று விளக்குகிறது.

''நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே! நினவ கூறுவல்; எனவ கேண்மதி; குடை வருந்திய குடி மறைப்பதுவாகும்; கூர்வேல்வளவ! பதனெளியோர் உறைவேண்டுபொழுதிற் பெயல் பெற்றோராவர்; ஆகையால் நீயும் அவ்வாறு எளியையாய்க் கொற்றமும் ஈன்றதன் பயனென்று கருதிக் காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகன் ஞாலமென்று கொண்டு, நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது பாரமோம்பிப் புறந்தருவையாயின், நின்னடி புறந்தருகுவர், அடங்காதாரோரென்றமையால், செவியறிவுறூஉ வாயிற்று'' (புறநா.35.பழைய.ப.93) என்று பழையவுரை அமைகின்றது. தீமை அல்லாத நல்ல கருத்துக்களை மன்னன் உளங்கொள்ளுமாறு கூறுவது செவியறிவுறூஉ ஆகும். இதனைப் பழையவுரையாசிரியர் பாடலுடன் பொருத்திக் கூறி உரை வரைகின்றார்.

புறநானூற்றின் 36வது பாடல், சோழன் குலமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்கிழார் பாடியதாக அமைந்துள்ளது. இப்பாடலின் துறை துணைவஞ்சி ஆகும். போரிடக் கருதும் இருமன்னர்களுக்கிடையே சந்து செய்வித்தலே துணைவஞ்சி என்னும் துறை ஆகும். கிள்ளிவளவன் பகை மன்னனின் நாட்டை முற்றுகை இடுகின்றான். ஆனால் பகை மன்னனோ எதிர்த்துப்

போரிட எவ்விதத்திலும் உடன்படவில்லை. அவன் அடைத்த மதிற்கதவை திறக்காத நிலையை ஆலத்தூர்கிழார் கிள்ளிவளவனுக்குச் சுட்டிக்காட்டி சந்து செய்விக்கிறார். இதனை ‘‘மேற்சென்றோனைச் சந்து செய்து மீட்டலின், இது துணைவஞ்சியாயிற்று’’ (புறநா.36.பழைய.ப.97) என்னும் பழையவுரையாசிரியர் பொருந்தச் சுட்டுகிறார்.

புறநானூற்றின் 43ஆம் பாடலுக்கான பழையவுரையில், தாமப்பல் கண்ணனார் மாவளத்தானை இகழ்தற்கு இரங்கிப்பாடிய செய்யுள் அரசவாகையாதலை, ‘‘பொறுத்தற்கரிய பிழையைப் பொறுத்த குணவென்றியான் அரச வாகையாயிற்று’’ (புறநா.பழைய.ப.112) என்று பொருத்திக் காட்டித் தெளிவுறுத்துகிறார். தம்மைப் பிழைத்தோரைப் பொறுத்து அருளும் செம்மலாக மாவளத்தான் விளங்கியதைச் சுட்டுவதாக, இப்பாடலின் துறை அமைகின்றது.

புறநானூற்றின் 45ஆம் பாடல் சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றி இருந்தானையும், அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் கோவூர்க்கிழார் பாடியதாகும். இது துணைவஞ்சித் துறையைச் சார்ந்தது. பகைத்துப் போர் விரும்பிச் செல்லுதலைக் குறிப்பது வஞ்சித் திணை ஆகும். இது துணைவஞ்சித் துறையைச் சார்ந்தது. சோழன் நலங்கிள்ளி போர்செய்யக் கருதி உறையூரை முற்றி இருக்கின்றான். நெடுங்கிள்ளியோ அடைத்த மதிற்கதவைத் திறக்கவில்லை. நலங்கிள்ளியின் போர் செய்யும் எண்ணத்தைக் கோவூர்க்கிழார் மாற்றி சந்து செய்விக்கிறார். இந்நிகழ்வையே, ‘‘இது சந்து செய்தலால் துணைவஞ்சியாயிற்று’’ (புறநா.பழைய.ப.116) என்று பொருத்திக் காட்டுகிறார்.

துணைவஞ்சித் துறையைச் சார்ந்த புறநானூற்றின் 46ஆம் பாடலைக் கோவூர்க்கிழார் பாடியுள்ளார். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்காலில் இடறி வீழ்த்தக் கருதினான். இதை அறிந்த கோவூர்க்கிழார் கிள்ளிவளவனிடம், புறாவிற்காகத் தன்னைத் தந்த மரபினனாய் இருந்தும் மலையமானின் சிறுபிள்ளைகளைக் கொல்லக் கருதுவது நம் குடிப் பெருமை அன்று என சமாதானம் செய்கிறார். இச்செய்தியைக் குறிப்பிடும் பழையவுரை, ‘‘இதுவும், இவரைக் கொல்லாமற் சந்து செய்வித்தலின் துணைவஞ்சியாயிற்று’’ (புறநா.பழைய.ப.117) என்று துறையுடன் பொருந்துவதாக அமைந்துள்ளது.

புறநானூற்றின் 49ஆம் பாடல் சேரமான் கோக்கோதை மார்பனைப் பொய்கையார் பாடியதாகும். இது இயன்மொழி துறை ஆகும். வள்ளல் பெயரும் இருப்பிடமும் கூறி, புலவன் ஒருவனை ஆற்றுப்படுத்தும் துறை புலவராற்றுப்படை ஆகும். நானிலத்தையும் உடையவன் கோக்கோதை மன்னன் என்பதால் அவனைப் பழையவுரையாசிரியர், ‘‘இது, நானிலமுமுடையனாதலிற் பெருஞ்செல்வமுடையன்; நீ அவன்பாற் செல்லென ஆற்றுப்படுத்தவாறு; அவனது இயல்பைப் புகழ்ந்தமையான் இயன்மொழியுமாயிற்று’’ (புறநா.பழைய.ப.121) என்று சுட்டுகிறார்.

புறநானூற்றின் 57ஆம் பாடல், பாண்டியன் இலவந்திகைத் துஞ்சிய மாறனிடம் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் போரினைத் தவிர்க்கும் பொருட்டுக் கூறியதாகும். ‘‘நின் யானைக்குக் கந்து ஆற்றாவாதலாற் கடிமரந்தடிதலோம்பெனக் கூறுவான்போற் சந்து செய்விக்கும் நினைவாற், கூறினமையின், இது துணைவஞ்சி ஆயிற்று’’ (புறநா.பழைய.ப.140) என்பது பழையவுரையாசிரியரின் துறைப்பொருத்தமாக அமைகின்றது.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியதாக, அமைந்துள்ள இப்பாடல் உடனிலை என்னும் துறையைச் சார்ந்தது. இப்புறத்துறை சேர்ந்திருக்கும் இருவரைப் பாடக்கூடியதாகும். இப்பாடலில் திருமாவளவனும் பெருவழுதியும் ஒருங்கிருந்தமையை,

‘‘இருபெருந் தெய்வமும் உடன் நின்றாங்கு’’ (புறநா.58:16)

என்னும் அடி உணர்த்தும். இந்நிகழ்வினையே பழையவுரையாசிரியர், ‘‘இருவரரசர் ஒருங்கிருந்தாரைப் பாடினமையின், இஃது உடனிலையாயிற்று’’ (புறநா.பழைய.ப.143) என்று குறிப்பிடுகிறார்.

மனிதரைத் திருமால் முதலான கடவுளருடனும் பிற தேவருடனும் உவமை கூறுதல் பூவைநிலை ஆகும். பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனை மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார் பாடிய,

"ஞாயிறு அனையை, நின்பகை வர்க்கு
திங்கள் அனையை, எம்ம னோர்க்கே" (புறநா.59:6-7)

என்ற அடிகள், பூவைநிலை என்னும் துறையைச் சார்ந்தது. இவ்அடிகளில் நன்மாறன் ஞாயிற்றோடும் திங்களோடும் உவமிக்கப்படுகின்றான். இதனையே பழையவுரை, "ஞாயிற்றோடும் திங்களோடும் உவமித்தமையால், இது பூவைநிலை ஆயிற்று" (புறநா.பழைய.ப.145) என்று சுட்டிச் செல்கின்றது.

புறநானூற்றின் 66ஆம் பாடல் சோழன் கரிகாற்பெருவளத்தானை வெண்ணிக்குயத்தியார் பாடியதாக அமைந்துள்ளது. இப்பாடல் மன்னனின் வெற்றிச் சிறப்பினைப் பாடுவதால் அரசவாகை என்னும் துறையாய் அமைந்தது. இதனையே பழையவுரையாசிரியரும், "இது கரிகால் வளவன் வென்றி கூறியதாகலின் அரசவாகையாயிற்று" (புறநா.பழைய.ப.158) என்று பொருத்தம் கூறுகிறார்.

புறநானூற்றின் 74ஆம் பாடல், குடவாயில் கோச்செங்கணானால் சிறைப்பட்ட கணைக்கால் இரும்பொறை தன்னிலைக்குத் தானே இரங்கிப் பாடியதாகும். இப்பாடல், முதுமொழிக் காஞ்சி என்னும் துறையைச் சார்ந்தது. இரும்பொறை நீர் வேட்கையால் சிறைக்காவலரை நீர் வேண்டினான். அவன் காலம் தாழ்த்தித் தந்த நீரைப் பருகாது உயிர் நீத்தான். இந்நிகழ்வைப் பொதுவியல் இலக்கணத்தின்படி, "அரசர்க்கு மானத்தின்மிக்க அறனும் பொருளும் இன்பமுமில்லை யென்று கூறினமையின், இது முதுமொழிக் காஞ்சியாயிற்று" (புறநா.பழைய.ப.177) என்று பழையவுரை நன்குணர்த்தும்.

புறநானூற்றின் 143ஆம் பாடல் பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக வையாவிக் கோப்பெரும்பேகனைக் கபிலர் பாடியது. இதன் துறை குறுங்கலி. வேறு மகளிரை விரும்பிய ஒருவனுடைய காதல் கெடும்படி சொல்லுதல் குறுங்கலி ஆகும். ஒருவனால் துறக்கப்பட்ட அவன் மனைவியை அவனோடு சேர்க்கும் பொருட்டு, நீ இவள்பால் அருள்செய்தல் வேண்டுமென வேண்டுதல். இதுவே பாடலின் துறைப்பொருத்தமாக, "பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியை அவனோடு கூட்டலுறுவார், அருள்பண்ணவேண்டுமென்று இரந்துகொண்டு கூறினமையின், குறுங்கலியாயிற்று" (புறநா.பழைய.ப.267) என்று பழையவுரையாசிரியரால் சுட்டப்படுகிறது.

புறநானூற்றின் 162ஆம் பாடல் பெருஞ்சித்திரனார் பாடியதாகும். துறை பரிசில் விடை ஆகும். இளவெளிமான் நாணும்படி குமணன் பரிசிலாகத் தந்த யானையை இளவெளிமானின் காவல் மரத்தில் கட்டி வைத்துப் பாடிய பாடலாகும். இளவெளிமான் சிறிது பரிசில் கொடுக்க, அதனைக் கொள்ளாது குமணனிடம் சென்று பரிசில் பெற்று வந்தார் பெருஞ்சித்திரனார். உலகில் புரப்போர் நீ ஒருவன் மட்டும் அல்ல. புரப்போர் பலர் இருக்கின்றனர் என்று கூறினார். இப்பாடலில் இடம்பெற்றுள்ள துறையை,

"நடைவயின் தோன்றும் இருவகை விடையும்"[32]

எனத் தொல்காப்பியம் குறிப்பிடும் இருவகைப் பரிசில் விடைகளைப் பழையவுரையாசிரியர், "நடைவயிற் றோன்று மிருவகை விடையும் என்பதனால், இது பெறாது பெயர்ந்த பரிசில்விடை" (புறநா.பழைய.ப.302) என்று பொருத்திச் சுட்டியிருக்கின்றார். அவை பரிசில் பெறவிரும்ப வாயில் சென்ற நிலையும், பரிசில் பெற்ற அரசன் புகழைப்பேசி விடை பெறுதலும் என இரு பரிசில் விடைகளாகும்.

புறநானூற்றின் 228ஆம் பாடல் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஐயூர் முடவனார் பாடியதாகும். துறை ஆனந்தப் பையுள். இப்பாடலில் கிள்ளி வளவன் புகழுடம்பு எய்தியமையையும், அவனுக்கு இனிப் பெரிய தாழி ஒன்று செய்வதால் சிறப்பில்லை என்பதனையும் கூறிச் சுற்றத்தார் இரங்கிப் பாடினர். இந்நிகழ்வைப் பழையவுரையாசிரியர், "இது சுற்றத்தார் இரங்கிக் கூறுதலின், ஆனந்தப்பையுளாயிற்று" (புறநா.228.பழைய.ப.399) என்று துறைப்பொருத்தம் சுட்டுகிறார்.

புறநானூற்றின் 243ஆம் பாடலை தொடித்தலை விழுத்தண்டினார் பாடியுள்ளார். துறை கையறுநிலை ஆகும். இப்பாடல் இளமைக் காலத்தில் செய்த நிகழ்வுகளை, முதுமைக் காலத்தில் நினைந்து வருந்துவதாக அமைகின்றது. இதனைப் பழையவுரையாசிரியர், "இளமை கழிந்து இரங்கிக் கூறுதலான் இதுவும் கையறுநிலையாயிற்று" (புறநா.பழைய.ப.419) என்று துறையுடன் பொருத்திக் கூறுகிறார். நீரில் மூழ்கி அடியில் இருக்கும் மணலை ஆராயாது எடுத்த இளமைப் பருவம் இரங்கத்தக்கது. முதுமைப் பருவமோ பூண் செறிந்த தடியினை ஊன்றியும், நடுக்கமுற்றும், இருமல்களுக்கு இடையே தோன்றும் சில சொற்களைப் பேசுகின்ற நம்முடைய நிலைமை இரங்கத்தக்கது என முதுமைப் பருவத்தை இரங்கிக்

கூறுகின்றனர். இவ்வாறு பழையவுரையாசிரியர் புறநானூற்றில் அமைந்துள்ள துறைகளுக்குப் பொருத்தம் கூறுவர்.

**அணிநயம் கூறுதல்**

அணி என்பதற்கு அழகு என்று பொருள். செய்யுளில் அமைந்து கிடக்கும் சொல்லழகு, பொருளழகு முதலியவற்றை வரையறுத்துக் கூறுவது அணி இலக்கணம். அணி இலக்கணம் பற்றிக் கூறும் தொன்மையான நூல் தண்டியலங்காரம் ஆகும். இந்நூல் முப்பத்தைந்து வகையான அணிகளைக் குறிப்பிடுகின்றது. இத்தகைய சிறப்புமிக்க அணிகளைப் புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் தம் உரைவழி எடுத்துரைக்கின்றார். புறநானூற்றின் 19, 167, 185, 230, 241 ஆகிய பாடல்களுக்கான உரைகளில், இஃது இன்ன அணி என்பதைப் புலப்படுத்திச் செல்கின்றார். இங்ஙனம், இவர் கூறியிருக்கும் அணிகள்: உவமை, ஒட்டு, தலைப்பெயலுவமை, தற்குறிப்பேற்றம், நுவலாநுவற்சி, வஞ்சப் புகழ்ச்சி என்பனவாகும்.

புறநானூற்றின் 19ஆம் பாடல் பாண்டியன் நெடுஞ்செழியனின் போர்ச்சிறப்பைப் புலப்படுத்துகின்றது. போர்க்களத்தில் யானைகள் வெட்டுண்டு கிடக்கின்றன. வீரர்களுடன் இளைய புதல்வர்களும் விழுப்புண்பட்டு தரையில் வீழ்ந்து கிடக்கின்றனர். அவர்களைக் கண்ட தொன்மையான வீரம் பொருந்திய குடியில் பிறந்த மகளிர், நமக்கு இத்தகைய வெற்றியும் உண்டோ என்று நெகிழ்ந்து அழுதனர். அவர்களின் நெகிழ்ச்சியைக் கண்டு கூற்றுவன் நாணப்படுகின்ற வகையிலும், அழுகையைக் கண்டு இரக்கம் கொள்கின்ற வகையிலும் அச்சம் விளைவிப்பதாகப் போர்க்களம் காட்சி அளித்தது.

> ‘‘மூதிற் பெண்டிர் கசிந்து அழ நாணி,
> கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை’’ (புறநா.19:15-16)

என்னும் அடிகளில், இயல்பாக நடைபெற்ற ஒரு நிகழ்வினைத் தம் குறிப்பை ஏற்றிக் கூறிப் பாடியுள்ளார் புலவர். இதனையே, ‘‘போர்முடிதலாற் போயின கூற்றை நாணியும் கண்ணோடியும் போயிற்றுபோலக் கூறியது, ஓரணி (தற்குறிப்பேற்றம்)

கருதி நின்றது'' (புறநா.பழைய.ப.51) என்று பழையவுரையாசிரியர் எடுத்துரைக்கின்றார்.

''கேள்விக்கு இனியை; கட்கு இன்னாயே'' (புறநா.167:4)

என்ற அடி, ஏனாதித் திருக்கிள்ளியின் போர்ச்சிறப்பைக் கூறுகின்றது. பகைவரின் படையை எதிர்த்து நின்று வாளால் தைத்த உடம்புடன் காணப்படுவதால், போர்ப்புகழைக் கேட்பவரின் செவிக்கு இனியனாகக் இருக்கின்றான். புண்ணுடைய உடம்புடன் காணப்படுவதால் கண்ணுக்கு இன்னாதவனாகவும் இருக்கின்றான். இதனைக் குறிப்பிடும் பழையவுரையாசிரியர், ''நீ கட்கின்னாயெனப் பழித்ததுபோலப் புகழ்தலும் (தண்டி.சூ.64) அவர் கட்கினியரெனப் புகழ்ந்ததுபோலப் பழித்தலும் சில அணி தோன்ற நின்றன'' (புறநா.பழைய.ப.313) என்று புலவரின் எண்ணப்போக்காக அமைந்த பாடல் அடியை விளக்கிச் செல்கின்றார்.

''கால்பார் கோத்து, ஞாலத் தியக்கும்
காவற் சாகா டுகைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினிது படுமே
உய்த்த றேற்றா னாயின் வைகலும்
பகைக்கூ ழள்ளற் பட்டு,
மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே'' (புறநா.185)

என்ற பாடல், ஒரு நாட்டை ஆட்சி செய்யக்கூடிய மன்னனைச் சகடமாக உவமித்து, தொண்டைமான் இளந்திரையன் பாடியதாகும். வண்டியைச் செலுத்துபவன் திறம் பெற்றவனாகக் காணப்படுவானாயின், வண்டி எவ்விதமான இடையூறும் இன்றி இனிதாகச் செல்லும். அதுபோல, அரசாட்சி மேற்கொள்ளும் வேந்தன் அரசியல் முறைமைகளைத் திறம்படத் தெரிந்து ஆட்சி செய்வானாயின் நாடு நலம்பெறும். நாட்டு மக்களால் அவனும் சிறப்பாகப் போற்றப்படுவான். வண்டியைத் திறம்படச் செலுத்த அறியாதவனின் சக்கரம் சேற்றில் அழுந்தித் துன்பத்திற்கு உள்ளாவான். அதுபோல நாட்டை ஆளும் மன்னன் அரசியல் முறைமைகளைத் திறம்பட அறிந்து ஆட்சி செய்யானாயின் உட்பகை, புறப்பகை என இரு பகைகளால் துன்பத்திற்கு உள்ளாவான். நாடும் சீர்கேடு அடையும். இதற்கு உரை கூறும் பழையவுரையாசிரியர், ''இஃது உலகாளுமுறைமை கூறுதலையுட்கொண்டு சகடம்

செல்லுறுமாற்றைக் கூறினமையின் நுவலாநுவற்சியென்னும் அலங்கரமாயிற்று; ஒட்டென்று கூறுவாரும் உளர்'' (புறநா.பழைய.ப.341) என்று பாடலில் இடம்பெற்றுள்ள அணியை விளக்கி உரைக்கிறார். புலவர்தாம் சொல்லக் கருதிய கருத்தினை நேரடியாகக் கூறாமல், அதனை வேறொரு பொருள் கொண்டு விளக்குதல் நுவலாநுவற்சி அணி ஆகும். இது ஒட்டணி என்றும் அழைக்கப்படுகிறது. இதனைப் பழையவுரையாசியரின் உரை நன்கு புலப்படுத்தும்.

''ஒருவன் ஆருயிர் உண்ணாய் ஆயின்
நேரார் பல்லுயிர் பருகி
ஆர்குவை மன்னோ, அவன்அமர் அடுகளத்தே'' (புறநா.230:14-16)

என்னும் அடிகள் பாடலில் இடம்பெற்றுள்ள அணியைச் சுட்டும். இப்பாடல் எழினி போர்க்களத்தில் பொருது வீழ்ந்தமையைச் குறிப்பிடுகிறது. வாழ்வதற்கு அடிப்படையாக அமையும் வருவாயைப் பற்றி அறியாமல், தளர்ந்த குடியினையுடைய உழவன் விதை நெல்லை உண்டதைப்போல, எழினியின் பெற முடியாத உயிரை நீ உண்ணவில்லையாயின் பகைவருடைய பல உயிரையும் அவன் போர் செய்யும் களத்தில் நீ பருகி நிறைவடைந்திருக்கலாம். இவ்வாறு எழினியின் புகழைப் புலவர் எடுத்துரைக்கின்றார். இதிலுள்ள அணியினைச் சுட்டும் பழையவுரையாசிரியர், ''உயிர் உண்ணவும் பருகவும் படுவதன்றாயினும் அவ்வாறு கூறுதல் 'அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப் பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி'(பெரும்பாண்.1-2) என்றாற்போல ஓரணி குறித்து நின்றது'' (புறநா.பழைய.ப.403) என்கிறார். இவர் புறநானூற்றுப் பாடல்களில் இடம்பெற்றுள்ள அணியினை விளக்கப் பிற நூல்களில் உள்ள அணியுடன் ஒப்பிட்டுக் கூறுகின்றார். எழினியின் பெறுதற்கு அரிய உயிரைக் கூற்றுவன் உண்டதாகவும், அதனால் போர்க்களத்தில் பிற உயிர்களைப் பருக இயலவில்லை என்றும் தன்குறிப்பை ஏற்றிக் கூறி இருப்பதால், இது தற்குறிப்பேற்ற அணியாய் நின்றது. இதில் இடம்பெற்றுள்ள அணியினை விளக்குவதற்கு 'ஞாயிறு விண்ணில் உள்ள இருளைக் குடித்து ஒளியைக் கக்கி எழுகின்றதாம்' என்று பெரும்பாணாற்றுப் படையிலுள்ள அணியைச் சுட்டுகிறார், பழையவுரையாசிரியர். இது அவரின் பிறநூற்புலமையை நன்குணர்த்தும்.

''திண்டே ரிரவலர்க் கீத்த தண்டார்
அண்டிரன் வரூஉ மென்ன வொண்டொடி

வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்

போர்ப்புறு முரசங் கறங்க

ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே'' (புறநா.241)

என்னும் பாடலுக்கு உரை எழுதும் பழையவுரையாசிரியர், ''இது தற்குறிப்பேற்றம் என்பதோர் அணி பற்றி நின்றது'' (புறநா.பழைய.ப.417) என்கிறார். இப்பாடல் ஆயை ஏணிச்சேரி முடமோசியார் பாடியதாகும். குளிர்ந்த மாலையை அணிந்த ஆய் அண்டிரன் திண்மையான தேரை இரவலர்க்கு வழங்கும் இயல்பினை உடையவன். அத்தகையவன் துறக்கம் புகுகின்றான். இதனை அறிந்த துறக்கத்தின் தலைவனாகிய இந்திரன் தன் கோயிலுள் அமைந்த போர் முரசத்தை முழக்கி வரவேற்கிறான். இதனால் அகன்ற வானத்தில் ஆரவாரம் எழுந்தது. இந்திரன் கோயிலுள் இயல்பாக முரசு முழங்குவதை, ஆய் அண்டிரன் துறக்கம் புகுந்ததால் எழுந்த முழக்கம் என்று புலவர் தம்குறிப்பை ஏற்றிக் கூறி இருக்கின்றார். இதனையே பழையவுரையாசிரியர் தம் உரையின் வாயிலாகத் தெளிவுபடுத்துகிறார்.

**நயம்பட எடுத்துரைத்தல்**

புறநானூற்றுப் பழையவுரையில் கற்போர் படித்து இன்புறுவதற்கு ஏற்ற வகையில் பல்வேறு உரை நயங்கள் காணப்படுகின்றன. பழையவுரையிலுள்ள உரை நயங்கள் மிகவும் படித்து இன்புறுவதற்கு உரியன. இவ்வுரை பழையவுரையாசிரியரின் உலகியல் அறிவையும், கல்விச் சிறப்பையும், பொருளியல் அறிவையும் புலப்படுத்துவனவாக உள்ளன.

''எருத்து வவ்விய புலி'' (புறநா.4:9)

என்ற அடிக்கு, ''கழுத்தைக் கவ்வி உவற்றியுண்ட புலி''(புறநா.பழைய.ப.13) என்று விரித்துக் கூறுகின்றார். இது பழையவுரையாசிரியர் ஒவ்வொரு பொருளின் இயல்பையும் அறிந்து உரையெழுதும் திறன் பெற்றவர் என்பதை அறிவுறுத்துகின்றது.

''வழிபடு வோரை வல்லறி தீயே'' (புறநா.10:1)

என்ற அடிக்கான கருத்தை, ‘‘அறிந்து அவர்களுக்கு அருள் செய்வை யென்பதாம்’’ (புறநா.பழைய.ப.30) என்று புலப்படுத்துகின்றார். இது பல நூல்களில் வந்துள்ள அத்தகைய பிரயோகங்களுக்கு நல்லுரை காணப் பயன்படுகின்றது.

‘‘இளைய னிவனென வுளையக் கூறி’’ (புறநா.72:2)

என்றவிடத்து இவன் என்ற அண்மைச் சுட்டு நெடுந்தூரத்திலுள்ள பகைவர் கூற்றாக அமையுமோ என்ற ஐயத்தை, ‘‘இவனென்றார் தம் கருத்துக்கண் அணுமையான்’’(புறநா.பழைய.ப.172) என்று விசேடவுரையில் சுட்டுகின்றார். இதிலிருந்து இவர் இன்னவற்றை விளக்க வேண்டுமென்பதை அறிந்து உரையெழுதுபவர் என்பது தெளிவாகின்றது.

‘‘பொய் கூறாமையிற் செந்நாவென்றார்; தற்புகழ்ந்தாராகமற் சிறு செந்நா வென்றார்’’ (புறநா.148.பழைய.ப.274) என்ற உரையினால் இவர், நல்லிசைப்புலவரின் சால்பை நன்கு அறிந்து உரையெழுதியுள்ளமை புலப்படுகின்றது.

‘‘ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்’’ (புறநா.164:1)

என்ற அடிக்கு, ‘‘அடுதலை மிகவும் மறத்தலால் தேய்பின்றி உயர்ந்த அடுப்பென்றாராம்’’ (புறநா.பழைய.ப.305) என்று பழையவுரை சுட்டுகின்றது. அடுதல் என்பது சமைத்தல் என்னும் பொருளில் வருகின்றது. வறுமையின் மிகுதியால் சமைத்தலை மறத்தலால் அடுப்பு தேய்ந்து போகாமலும் பயன்பாடின்றிக் கிடத்தலால் காளான்கள் பூத்தும் காணப்படுகின்றன. இதனையே, பழையவுரையும் நயம்பட எடுத்துரைக்கின்றது.

‘‘நெடுமொழி மறந்த சிறுபே ராளர்’’(புறநா.178:9)

என்றவிடத்து, ‘‘நெடுமொழி மொழிதலாற் பேராண்மையும், பின் அதனை மறத்தலாற் சிறுமையுமுடைமையின் சிறுபேராளர்’’ (புறநா.பழைய.ப.332) என்றார். கள்ளுண்ட செருக்கால் ஊர்க்குள்ளே சொல்லிய வீரம் மேம்பட்ட வார்த்தைகளை மறந்தவர்களைக் குறிக்கவே பழையவுரையாசிரியர் சிறுபேராளர் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார்.

உலக வாழ்வில் ஒரு மனிதனுக்குத் தேவையான அனைத்தும் கிடைத்த பின்னும், தானாக உயிரை நீக்கிக் கொள்வதை யாரேனும் விரும்பமாட்டார்கள்.

ஆனால், பிசிராந்தையார் தனக்குக் கிடைக்கப்பெற்ற அனைத்து சுகங்களையும் விடுத்து, அரசு துறந்து உயிர் நீக்குதலை அஞ்சாமல் செய்கின்றார். இவரின் வீரத்தை,

“முழூஉ வள்ளூர முணக்கு மள்ள” (புறநா.219:2)

என்றதன் வாயிலாக அறிய இயலும். இதனைப் பழையவுரையாசிரியர், “அரசு துறந்து வடக்கிருந்து உயிர் நீத்த உள்ள மிகுதியால் மள்ளவென்றார்” (புறநா.பழைய.ப.389) என்று நயம்படக் கூறுகின்றார்.

“நட்டோரை யுயர்பு கூறினன்” (புறநா.239:5)

நாம் விரும்பியவரை முதலில் நாம் உயர்த்திக் கூற வேண்டும். அப்பொழுதுதான் யாவரும் உயர்த்திக் கூறுவார்கள். இத்தகைய உலகியலறிவை “நட்டோரை யுயர்பு கூறினனென்றது, தான் உயர்த்துக் கூறவே யாவரும் உயர்த்துக் கூறுவரென்பதாம்” (புறநா.பழைய.ப.415) என்ற உரையின் வாயிலாக அறிய இயலும்.

**கருத்துரைத்தல்**

புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையின் உரை அமைப்பில் பல இடங்களில் ‘கருத்தாகக் கொள்க’ என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. இது ஒரு பாடலில் இடம்பெற்ற கருத்தைக்கூறி, அக்கருத்திற்குப் பொருத்தமாகப் பல அரிய செய்திகளைக் கூறுவதாக அமைகின்றது. இவை இடம்பெற்றுள்ள செய்யுட்களின் எண்கள் 18, 36, 58, 83, 91, 97, 103, 109, 110, 111, 123, 127, 130, 138, 139, 155, 162, 186, 198, 201, 204, 206, 266 என்பனவாகும்.

நீர்வளம் மிகுந்து காணப்படுவதே நாட்டிற்குத் தேவையான ஒன்றாகும். அது எல்லா நலங்களையும் தரும் என்பதை,

நிலன்நெளி மருங்கில் நீர்நிலை பெருக” (புறநா.18:28)

என்னும் அடி சுட்டும். இதனையே, “இதனால் நீயும் நீர்நிலைபெருகத்தட்க வேண்டுமென்பது கருத்தாகக் கொள்க” (புறநா.பழைய.ப.49) என்கிறார், பழையவுரையாசிரியர்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பகைவர்மேல் போரிடக் கருதி அவனுடைய நாட்டில் காவல் மரங்களை வெட்டுகின்றான். பகைவனுடைய நாட்டில் செறிந்த பரல்கள் உடைய சிலம்பும் நீண்ட கோல்தொழில் அமைந்த சிறிய வளையல்களும் அணிந்த மகளிர் குளிர்ந்த ஆன்பொருநை ஆற்றின் மணல் மேட்டில் பொன்னாலாகிய கழற்சிக் காய்களைக் கொண்டு வீசி விளையாடுவர். அத்தகைய சிறந்த நாட்டையுடைய பகை மன்னன் காவல் மரந்தடிதலைக் கேட்டு, போர்புரிய எண்ணமில்லாதவனாய் அடைத்த மதிற்கதவைத் திறக்காமல் இருக்கின்றான். இந்நிகழ்வினையே, ‘‘மகளிர் தெற்றியாடும் பொருநை யென்ற கருத்து: இங்ஙனம் இளமகளிர் கழங்காடும் அணுமையதாயினும் புறப்பட்டுப் போர் செய்யாத அவன் வலியின்மை தோற்றி நின்றது’’ (புறநா.36.பழைய.ப.97) என்று பாடலின் கருத்தாகப் பழையவுரையாசிரியர் சுட்டுகிறார்.

புறநானூற்றின் 58ஆம் பாடல் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்த செய்தியைக் குறிப்பிடுகின்றது. இரு மன்னர்களின் சிறப்புக்களைச் சுட்டும் இப்பாடலில்,

‘‘நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய ஆக, பிறகுன்று கெழு நாடே’’ (புறநா.58:32)

என்னும் அடிகள் இடம்பெற்றுள்ளன. இது பிற நாட்டாருடைய குன்றுகளில், சோழ மன்னர்களின் புலி இலச்சினையும், பாண்டிய மன்னர்களின் மீன் இலச்சினையும் பொறிக்கப்பட்ட சிகரங்களை உடையனவாகுக என்பதைச் சுட்டுவதாக அமைந்துள்ளது. குன்றுகள் பிற நாட்டாருடையது என்ற பாடலின் கருத்தைப் பழையவுரையாசிரியர், ‘‘குன்றுகெழு நாடென்றதாயினும், கருதியது பிறநாட்டுக் குன்றுகளென்றதாகக் கொள்க’’ (புறநா.பழைய.ப.143) என்று தெளிவுபடுத்துகின்றார்.

புறநானூற்றின் 83ஆம் பாடல், சோழன் கோப்பெருநற்கிள்ளியை நக்கண்ணையார் பாடியதாகும். திணை கைக்கிளை. இது ஒருதலைக் காமத்தைக் குறிக்கும். ஒருவர் மீது கொண்ட காதலை அவரால் விரும்பப்படாத நிலையிலும்

கூறி மகிழ்ச்சி அடைவதாகும். இப்பாடலில் நக்கண்ணையார், பெருநற்கிள்ளியைப் புகழ்ந்து தன்னுடைய காதலை வெளிப்படுத்துகிறார். இதனை,

‘‘தொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே

அடுதோண் முயங்க லவைநா ணுவலே’’ (புறநா.83:2-3)

என்ற அடிகளால் அறியலாம். என்னுடைய தாயை எண்ணி அஞ்சுவதினாலே கைவளையல்கள் கழன்று விழுகின்றன. அவனைத் தழுவுதற்கு அவைக்களத்தில் உள்ளவர்களை எண்ணியும் அஞ்சுகின்றேன். நக்கண்ணையாரின் இக்கூற்றினையே பழையவுரையாசிரியர், ‘‘யாயில்லையாயின், வளை கழறுதற்கு அஞ்சவேண்டா; அவை யில்லையாயின், மயங்குதற்கு அஞ்சவேண்டாவென்பது கருத்தாகக் கொள்க’’ (புறநா.பழைய.ப.189) என்று சுட்டுகிறார். அதியமான் நெடுமான் அஞ்சியின் போர்ச்சிறப்பினைக் குறிப்பிடும் இப்பாடலில்,

‘‘நீலமணி மிடற்றொருவன் போல’’ (புறநா.91:6)

என்ற அடி இடம்பெற்றுள்ளது. தேவர்களும் அசுரர்களும் அமுதம் வேண்டித் திருப்பாற்கடலைக் கடைந்த போது தோன்றிய ஆலகால விடத்தை உயிர்களைக் காக்கும் பொருட்டுப் பருகி அது அன்னையின் திருக்கரங்களால் தடுக்கப்பட்டு திருக்கழுத்தினில் நீலநிறம் ஏற்பட்டது. இதனைப் பழையவுரை, ‘‘நீலமணிமிடற் றொருவன்போல வென்ற கருத்து, சாதற்குக் காரணமாகிய நஞ்சுண்டும் நிலைபெற்றிருந்தாற் போல நீயும் சாவாதிருத்தல் வேண்டுமென்பதாம்’’ (புறநா.பழைய.ப.198) என அதன் கருத்தை எடுத்துரைக்கும்.

புறநானூற்றின் 97ஆம் பாடல் அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடியது. இப்பாடலின் இறுதி அடியில், ‘‘அறிந்து ஆடுமினே’’(25) என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இதனையே, பழையவுரையாசிரியர் ‘‘அறிந்தாடுமினென்ற கருத்து, அறியிற் போர்செய்தற்கு அரிதென்பதாம். (புறநா.பழைய.ப.206) என்று பாடலின் கருத்தாகச் சுட்டுகிறார். அதியமான் சிறந்த போர்த்திறம் மிக்கவன். அவனது படைக்கலன்கள் சிதைந்து கிடக்கின்றன. இத்தகைய வீரம் செறிந்த படையையுடையவனுடன் போரிட்டால் பிழைத்தல் என்பது அரிது. உம்முடைய ஊர் உமக்கே உரிமையாக வேண்டுமெனில் திறையைச் செலுத்திப் பணிய வேண்டும்.

அதியமானின் வீரத்தை அறிந்த பின்னரே போரிடச் செல்ல வேண்டும் என்பதே பாடலின் கருத்தாகப் பழையவுரையாசிரியர் குறிப்பிடுகிறார்.

''பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி'' (புறநா.103:8)

என்பதன் பழையவுரை, ''பகைப்புலத்தோனென்ற கருத்து: பகைவர்பால் திறைகொண்ட பொருளுடையனாதலின், நீ வேண்டியவெல்லாந் தருதல் அவனுக்கு எளிதென்பதாம்'' (புறநா.பழைய.ப.216) என்று கூறுகிறது. அதியமான் நெடுமான் அஞ்சி பகை மன்னர்கள் திறை செலுத்தக்கூடிய அளவிற்குப் போர்த்திறம் பெற்றவனாகக் காணப்படுகின்றான். ஆகையால், அவன் தன்னிடம் பரிசில் வேண்டி வருவோருக்கு வேண்டிய எல்லாவற்றையும் தருதல் எளிமையான செயலாகும்.

''குன்று முண்டுநீர் பாடினிர் செலினே'' (புறநா.110:6)

என்கிற அடியில், பறம்புநாடு முந்நூறு ஊர்களை உடையது. அம்முந்நூறு ஊர்களையும் பரிசிலர் பெற்றுவிட்டனர். உமக்குக் கொடுக்க எம்மிடம் பரிசில் கிடையாது என்பதை, ''நீர் பாடிவரினும் பரிசிலர் முன்னே பெற்றமையின், அது நுமக்குக் கிடையாதென்பது கருத்தாகக் கொள்க''(புறநா.பழைய.ப.224) என்று பழையவுரையாசிரியர் குறிப்பிடுகின்றார்.

புறநானூற்றின் 111ஆம் பாடல் கபிலர் பாரியின் தோளாண்மையை மூவேந்தரையும் நோக்கிப் பாடுவதாக அமைந்துள்ளது. பறம்பு மலையைக் கொள்வதற்குப் பாரியைப் போரினால் வெல்ல இயலாது என்றும் விறலியினால் வெல்ல முடியும் என்றும் கபிலர் கூறுவதையே,

''கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே'' (புறநா.111:4)

என்ற அடி உணர்த்தும். இதனையே பழையவுரையாசிரியர் ''பாடினளாய் வரினென்ற கருத்து: அவட்கும் அவ்வாறன்றித் தன் பெண்மையால் வென்றுகோடல் அறிவென்பதாம்'' (புறநா.பழைய.ப.225) என்று சுட்டுகின்றார்.

புறநானூற்றின் 123ஆம் பாடல் மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடியதாக அமைந்தது. இப்பாடல், மன்னர்கள் மதுவை உண்டு களித்திருக்கும் பொழுது தேரினைப் பரிசிலாக வழங்குவர். ஆனால் திருமுடிக்காரியோ மது அருந்தாமல் இருக்கும் வேளையிலும் மழைத்துளிகளின் எண்ணிக்கையைவிட

அதிகமான தேரினை வழங்கக் கூடியவன். இக்காரணத்தினால் பழையவுரையாசிரியர், ‘‘ஏனையோர் கொடை செயற்கையென்றும் இவன்கொடை இயற்கையென்றும் கூறியவாறு’’ (புறநா.பழைய.ப.238) என்று திருமுடிக்காரியின் கொடைப்பண்பை நயம்படச் சுட்டுகின்றார்.

ஏணிச்சேரி முடமோசியார் ஆய் என்னும் மன்னனின் அரண்மனைச் சிறப்பைப் பிற மன்னர்களின் அரண்மனைச் சிறப்போடு ஒப்பிட்டுப் பேசுகின்றார். இதனை,

‘‘ஈகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப, வாஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை அடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசா லோங்குபுக ழொஓரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே’’ (புறநா.127:5-10)

என்னும் அடிகளால் அறியலாம். சுவைப்பதற்கு இனிமையாக இருக்கக் கூடிய உணவை மன்னர் பிறர்க்கு வழங்காமல் தாமே உண்டு தம் வயிற்றை நிரப்பிக் கொள்வர். அத்தகைய மேம்பட்ட புகழை நீங்கிய முரசு பொருந்திய செல்வத்தினையுடைய பிற அரசனுடைய அரண்மனை ஆய் அண்டிரனின் அரண்மனைக்கு ஒப்பாகாது. இனிமையாகப் பாடக்கூடிய பாணர் சிறிய யாழினைக் கொண்டு பாடல் பாடி ஆய் அண்டிரனிடம் யானைகளைப் பரிசிலாகப் பெற்றுச் சென்றனர். இதனால் யானைகள் இல்லாமல் போக, யானைகட்டும் தறி காட்டு மயில்கள் தங்கக் கூடிய இடமாக மாறியது. அவனின் அரண்மனையில் உள்ள மகளிர் கொடுத்தற்கரிய மங்கலநாணை மட்டும் அணிந்திருக்கின்றனர். இவ்வாறு காணப்படினும் ஆய் அண்டிரனின் அரண்மனை, பிற மன்னர்களின் அரண்மனையைவிடச் சிறப்பாகக் கூறப்பட்டது. இத்தகைய நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு, ‘‘என்றதன் கருத்து: செல்வர் நகர் பெருந்திருவுடைமையிற் சிறந்தது போன்றிருப்பினும், ஆய்கோயில் வறிதெனினும் இஃது அதனினுஞ் சிறந்ததென்பதாம்’’ (புறநா.பழைய.ப.245) என்று பழையவுரையாசிரியர் கருத்துரைக்கிறார்.

‘‘தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே’’ (புறநா.130:7)

என்ற அடிக்கு, ‘‘தலைப்பெயர்த்திட்டவேலென்ற கருத்து: படைக்கலமில்லாதாரை ஏதஞ்செய்வாரில்லையாதலின், தம்முயிர்க்கு அரணாகப் பெயர்த்திடப்பட்ட வேலென்பதாம்’’ (புறநா.பழைய.ப.245) என உரை கூறுவர் பழையவுரையாசிரியர். போர்க்கருவி ஒன்றும் இல்லாமல் வெறுங்கையினராக இருக்கும் வீரரைத் தாக்குவது மரபு இல்லை என்னும் பண்பு இவ்வுரையால் விளங்கும்.

மருதன் இளநாகனார் பாடிய இப்பாடல் வறுமை நிலையில் உள்ள மூத்த பாணனை நாஞ்சில் வள்ளுவனிடம் பரிசில் பெற்று வர வழிப்படுத்துவதாக அமைந்துள்ளது. நீ பரிசில் பெறப் போகின்றாய் ஆதலின் பெரிய எண்ணத்தை உடையவன். இப்பொழுது போய் பின் ஒருநாள் பரிசிலுக்கு வா என்று சொல்லாதவன். இத்தகைய மன்னனின் நிலை கூறும் பாடலின் கருத்தாக, ‘‘‘நின்னை வருதலறிந்தனர் யார்’ என்றதன் கருத்து, நின்னை அறிவாரும் அறியாத தன்மையையாவை யென்பதாம்’’ (புறநா.138.பழைய.ப.259) என்று பழையவுரையாசிரியர் சுட்டுகிறார். இப்பாடலும் போர் வருமுன்னரே பரிசில் தந்து விடுவாயாக என்னும் கருத்துத் தோன்ற நாஞ்சில் வள்ளுவனை, மருதன் இளநாகனார் பாடியது. சேர மன்னனுக்குக்கீழ் குறுநில மன்னனாக நாஞ்சில் வள்ளுவன் ஆட்சி செய்து வருகின்றான். பாணன் மன்னனை நோக்கி, நின் அரசன் நினக்கு வேண்டிய அனைத்தையும் அளித்தனன். அவனுக்காகப் போரில் நீ சாதலுக்கும் அஞ்சாய். அவ்விடத்துப் பெரிய நிலம் பிறழ்ந்தாற்போல ஒருநாள் பொருதற்கு அரிய போர் வருமாயின், போர் செய்யப் புறப்பட்டு விடுவாய்; அதனால் பசித்துன்பத்தையுடைய என் சுற்றம் வருந்த நேரிடும் என்பதை,

‘‘வருந்தலு முண்டென, பைதலங் கடும்பே’’ (புறநா.139:15)

என்னும் அடி உணர்த்தும். இதனையே, ‘‘அதனாற் போர்வருவன்முன்னே பரிசில் தந்து விடுவாயாகவென்பது கருத்து’’ (புறநா.பழைய.ப.261) என்று பழையவுரையாசிரியர் உரை பகர்கிறார்.

புறநானூற்றின் 145ஆம் பாடலில், ‘‘மடத்தகைமாமயில் பனிக்குமென்றருளிப் படாமீத்த…..பேக’ என்ற கருத்து: இவ்வாறு ஒரு காரணமின்றியும் அருள் பண்ணுகின்ற நீ நின்னால் வருந்துகின்ற இவட்கு அருளா தொழிதல்

தகாதென்பதாம்'' (புறநா.பழைய.ப.270) மெல்லிய தன்மையினையுடைய கரிய மயில் குளிரால் நடுங்குவது கண்டு அதன் இடர் களைய வேண்டி போர்வை நல்கினாய். அத்தகைய அருளுடைய நீ, உன் நினைவால் வாடுகின்ற நின் மனைவியின் நோயைத் தீர்ப்பாயாக. இதுவே, யாம் நின்னிடத்து இரந்து வேண்டக்கூடிய பரிசில் ஆகும் என வையாவிக் கோப்பெரும்பேகனிடம் பரணர் வேண்டுகிறார்.

மன்னன் கொடை அளிக்கும் பொருள் அவன் மார்பின் முயற்சியால் பெற்றதாகும். இதனையே, ''மண்டை அகலம் நோக்கி மலர்ந்தவென்ற கருத்து: கொடுக்கும் பொருள் மார்பின் வழியான் உளதாமாகலின், அகலம் நோக்கினவென்றதாகக் கொள்க'' (புறநா.155.பழைய.ப.287) என்னும் கருத்தும் அமைகின்றது.

இளவெளிமான் என்னும் மன்னன் பெருஞ்சித்திரனாருக்குச் சிறிது பரிசுப்பொருள் கொடுப்ப அதனைக் கொள்ளாது குமண வள்ளலிடம் சென்று பெரும்பரிசிலாக யானையைப் பெறுகின்றான். அதனைக் கொண்டு வந்து இளவெளிமான் நாணும்படி அவனது கடிமரத்தில் கட்டுகின்றான். இந்நிகழ்வை,

''நெடுநல் யானை எம்பரிசில்
கடுமான் தோன்றல்; செல்வல் யானே'' (புறநா.162:6-7)

என்னும் அடிகள் சுட்டும். இப்பாடலில் கூறப்பட்ட கருத்தாகப் பழையவுரையாசிரியர், ''யான் போவலென்ற கருத்து: முன் சிறிதுகொடுப்பக் கொள்ளாத மிகுதி தோன்ற நின்றது''(புறநா.பழைய.ப.302) என்று குறிப்பிடுகின்றார்.

''நெல்லு முயிரன்றே நீருமு யிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்'' (புறநா.186)

என்னும் பாடலின் அடிகள் மோசிகீரனார் பாடியது. இவ்வுலகிற்கு அரசனது முறையான ஆட்சியே உயிர் என்பதும் எவ்வாறு ஒரு ஆட்சி நடத்தப்பட வேண்டும் என்பதும் உணர்த்தப்படுகிறது. உடலையும், உயிரையும் ஆக்கும் நெல்லும் நீரும் செழிப்படைவது ஒரு மன்னனின் ஆட்சித் திறத்தால் ஆகும். இதனையே, ''மன்னனுயிர்த்தென்ற கருத்து: உயிரைக் காக்கும் நெல்லும் நீரும் உளவாவது

மன்னன் முறைசெய்து காப்பினென்றதாம்'' (புறநா.பழைய.ப.342) என்று பழையவுரையாசிரியர் சுட்டுகிறார்.

புறநானூற்றின் 198ஆம் பாடல், பாண்டியன் இளவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனை வடம வண்ணக்கண் பேரிசாத்தனார் பாடியதாகும். இப்பாடலில், ''யாண்டுநாளும் பெருகி'' (18) என்னும் அடி இடம்பெற்றுள்ளது. இதன் பழையவுரை, '''யாண்டுநாளும் பெருகி' என்பதற்கு நின்னாளே திங்களனையவாக அத்திங்கள் யாண்டோரனையவாக, யாண்டே ஊழியனைய வரம்பினவாக வென்பது கருத்தாகக் கொள்க'' (புறநா.பழைய.ப.358) என்று அமைந்துள்ளது. பாண்டிய மன்னன் தனக்குப் பரிசில் கொடுக்க நீட்டித்ததால், அவனுக்கு ஏதேனும் தீங்கு வராதிருக்க வேண்டுமென பேரிச்சாத்தனார் வாழ்த்திப் பாடுகிறார். இந்த ஊழிக்காலம் முடிவடையும் வரை நீண்டகாலம் வாழ வேண்டும் என வாழ்த்துவதையே 'யாண்டுநாளும் பெருகி' என வாழ்த்துவதாகப் பழையவுரையாசிரியர் உரை வரைகின்றார். பாரி மகளிரை இருங்கோவேளிடம் கொண்டு சென்ற கபிலர்,

''ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர் யானே
தந்தை தோழ னிவரென் மகளிர்
அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே'' (புறநா.201:2-6)

என்று அறிமுகம் செய்கிறார். பாரி மன்னனுக்குத் தோழனாதலானும் அந்தணனாதலானும் யான் தரப் பாரி மகளிரைத் திருமணம் செய்து கொள்க என்கிறார் கபிலர். இதனையே பாடலின் கருத்தாகக் குறிப்பிடும் பழையவுரையாசிரியர், ''யான் இவருடைய தந்தை தோழனாதலானும் அந்தணனாதலானும் யான்தர நீ இவரைக் கோடற்குக் குறையில்லையென்பது கருத்து'' (புறநா.பழைய.ப.363) என்று உரை பகர்கின்றார்.

புறநானூற்றின் 204ஆம் பாடலில் வல்வில் ஓரியைக் கழைதின் யானையார் பாடியுள்ளார். இப்பாடலில்,

''ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்

ஈயேனென்றல் லதனினும் மிழிந்தன்று

கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்

கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று'' (புறநா.204:1-4)

என்னும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'ஈ' என்றால் கொடு, தா என்று பொருள். எனக்குத் தா என்று கேட்டு இரப்பது இழிவு. தன்னிடம் உள்ளதை ஈயமாட்டேன் என்பது அதைவிட இழிவு. தன்னிடம் உள்ளதைப் பெற்றுக்கொள் என்று கொடுப்பது உயர்வு. பிறர் கொடுப்பதைப் பெற்றுக்கொள்ள மாட்டேன் என்பது அதைவிட உயர்ந்தது. இக்கருத்தினைப் பழையவுரையாசிரியர், ''மேற்கூறிய இரத்தல் முதல் நான்கிற்கும் ஈயெனவிரத்தலால் இழிபு பெற்றுக் கொள்ளேனெனும் உயர்பு யான் பெற்றிலேனென்பதூஉம், அவ்வாறிரப்பவும் ஈயேனென்றாற்போலப் பரிசில் நீட்டித்தலால் உள்ள இழிபு பெற்றுக் கொள்ளெனக் கொடுக்கும் உயர்ச்சி நீ பெற்றிலையென்பதூஉம் கருத்தாகக் கொள்க'' (புறநா.பழைய.ப.368) என்று விளக்குகிறார்.

பழையவுரையாசிரியர் உரையின் சில இடங்களில் செய்யுட்களில் சொற் கிடந்தவாறே பதவுரையில் பொருள் கூறுகிறார். பின்னர் தான் கருதிய பொருளைத் தெளிவுறுத்துகின்றார்.

''எம்மு முள்ளுமோ முதுவா யிரவல

அமர்மேம் படூஉங் காலைநின்

புகழ்மேம் படுநனைக் கண்டன மெனவே'' (புறநா.48:7-9)

என்ற அடிகள் புலவரை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது. இப்பாடல் கோக்கோதை மார்பனைப் பொய்கையார் பாடியதாகும். கடற்கரைச் சோலையையுடைய நகரமான தொண்டி தேன்மணம் வீசும். அத்தகைய சிறப்புடைய எம் ஊரினைக் கோக்கோதை ஆட்சி செய்கிறான். அவனிடம் செல்வாயானால், நீ போரில் மேம்பட்டு விளங்கும் போது, நின் புகழை உயர்த்திக் கூறுபவனைக் கண்டோம் என்று எம்மையும் நினைத்துக் கூற வேண்டும் என்று புலவர் சுட்டுகிறார். இதனையே இப்பாடலின் கருத்தாக, ''கண்டனமென எம்முள்ளென்றாரேனும் உள்ளிக் கண்டனமெனச் சொல்லென்பது கருத்தாகக் கொள்க''(புறநா.பழைய.ப.121) என எடுத்துரைக்கிறார், பழையவுரையாசிரியர்.

“உழவ ருழாதன நான்கு பயனுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே
இரண்டே தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே
மூன்றே கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே
நான்கே அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து” (புறநா.109:3-7)

என்னும் அடிகள், வேள்பாரியைக் கபிலர் பாடியதாகும். பாரியின் பறம்பு மலை உழுது விளைவிக்காத நான்கு விளைச்சல்களை உடையது. அவற்றுள் ஒன்று, சிறிய இலையையுடைய மூங்கிலினது நெல் விளையும். இரண்டு, இனிய சுவையுடைய பலாவினது பழம் ஊழ்க்கும். மூன்று, கொழுங்கொடியையுடைய வள்ளிக்கிழங்கு வீழ்க்கும். நான்கு, அழகிய நிறத்தையுடைய ஓரி பாய்தலான் அதன்மேற்கொடி அழிந்து, நெடிய மலைத்தேன் சொரியும். இவ்வாறு பறம்பு மலையின் சிறப்பை, “நான்கு பயனுடைத்தென்று வைத்து, நெல்விளையும் பழம் ஊழ்க்கும் கிழங்கு வீழ்க்கும் தேன்சொரியுமென்று அவற்றின் செய்கை தோன்றக் கூறினாரெனினும், கருதியது நெல்லும் பழனும் கிழங்கும் தேனுமாகக் கொள்க” (புறநா.பழைய.ப.223) என்று கருத்துரைக்கின்றார்.

“மழுவுடைக் காட்டகத் தற்றே” (புறநா.206:12)

என்றவிடத்து “காட்டகமென்றாரேனும் கருதியது அதன்கண் மரமாகக் கொள்க” (புறநா.பழைய.ப.372) என்ற உரையில் காடு என்றாலே மரங்களைக் கொண்டிருக்கும் என்ற கருத்தினைத் தெரிவிக்கின்றார். காடு என்றாலே மரங்களுக்குக் குறைவில்லை என்பதுபோல வையகத்தில் புரவலர் பலர் இருக்கின்றனர்; அவர்களுக்கும் குறைவில்லை என்பது பாடலின் கருத்தாகும்.

“கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக ஏற்றை
நாகுஇள வளையொடு பகன்மணம் புகூஉம்” (புறநா.266:4-5)

என்ற அடிகளுக்கான பழையவுரை, “நந்து வளையொடு பகன்மணம் புகூஉமென்ற கருத்து: அவை தம் செருக்கினால் சாதியறியாது மயங்கிப் புணருமென்று நாட்டின்மிகுதி கூறியதனால் அவன் செல்வமிகுதி கூறியவாறு” (புறநா.பழைய.ப.444) என அமைகிறது. கதிர் போன்ற கோட்டினையுடைய நத்தையின் ஏற்றைத் தனது இனம் இல்லை என்பதை அறியாது, பகற்காலத்தே பெண்ணாகிய இளைய சங்கு

கூடி மகிழும். அதுபோல இரவலன் தனக்குற்ற வறுமையால் அறிவுமிக்க சான்றோர் இருந்த அவை என்றும் பாராது, தனது துன்பத்தைப் புரவலனிடம் கூறிப் பரிசில் வேண்டி நின்றான். இக்கருத்தினைப் பழையவுரையாசிரியரின் உரை நன்குணர்த்தும். இவ்வாறு புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் உரையிடையே தாம் கருதிய பொருளைச் சுட்டிக் காட்டி உரை வரைகின்றார். இது அவரின் உரைப் புலமைக்குச் சான்றாக அமைகின்றது.

## தொகுப்புரை

புறநானூற்றின் முதல் 266 பாடல்களுக்கு மட்டுமே பழையவுரை கிடைக்கப்பெற்றுள்ளது. இந்நூலை ஏறத்தாழ 16 ஓலைச்சுவடிகளை ஒப்பீடு செய்து உ.வே.சாமிநாதையர் பதிப்பித்துள்ளார். புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் 62, 72, 173, 258 ஆகிய பாடல்களின் துறைகளை விளக்கிக் கூறியுள்ளார். உழிஞைப் பூவிற்கு 'கொற்றான்' என்ற பெயரும் உண்டு. 'கொண்டைமேற் காற்றடிக்க' 'கிளியீடு' 'கறி' ஆகிய வழக்குச் சொற்களை விளக்கி உரைத்துள்ளார். ஒரு பொருளை உயர்ந்தோர் எப்படிச் செப்பினரோ அப்படிச் செப்புதல் மரபு என்ற வகையில் சிவபிரான் திருவுருவம் 'திரு' என்னும் அடை கொடுத்து 'திருச்சடை' 'திருமுடி' 'திருநுதல்' என்று வழங்கப்பட்டுள்ளது.

பழையவுரையாசிரியர் திருக்குறள், நாலடியார் ஆகிய நூல்களில் உள்ள பழஞ்செய்யுட் பகுதிகளைத் தம் உரையிடையே உரைநடையாக அமைத்துச் செல்கின்றார். புறநானூற்றுப் பழையவுரையில், பாடலில் கூறப்பட்ட செய்திகளைக் கொண்டு இவற்றால் இன்னவை பெறப்பட்டன என்று வேறு சிலவற்றைக் கூறுவர். ஒரு சொல்லுக்கு மூலத்திலுள்ள முறையிலேயே உரை கூறும் பொழுது சில இடங்களில் கருத்தை விளக்குவதற்குரிய சொற்கள் புதிதாகப் பெய்துரைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். பழையவுரையாசிரியர் இன்றியமையாத சில இடங்களில் மாறிக் கூட்டியுரைக்கும் பொழுது அதனைத் தனியே எடுத்துக் கூறுவர். தேவையான இடங்களில் அதன் காரணங்களும் சுட்டிக் கூறப்பட்டுள்ளன.

புறநானூற்றின் செய்யுட்களில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு, வேறு உரையாசிரியரின் உரையைச் சுட்டிக்காட்டி உரை வரைந்துள்ளார்.

பாடல்களில் பொருள் மாறுபாடாகத் தோன்றினால், இன்ன காரணத்தினால் இது கூறப்பட்டது என்ற உரைமரபு சுட்டப்பெற்றுள்ளது. புறநானூற்றுப் பாடல்களில் இன்ன பொருள் இன்னவற்றைச் சார்ந்தது என்னும் வகுத்துக் கூறும் முறைமை இடம்பெற்றுள்ளது. இந்நூலின் பாடல்களில் இடம்பெற்றுள்ள வரலாற்று உண்மைகளைப் பழையவுரையாசிரியரின் உரை புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. இன்னாமைக் குறிப்பு என்பது நடக்கக்கூடாத செயலைக் குறிப்பிடுவதாகும். புறநானூற்றின் போர்ச்சிறப்பை விளக்கும் உவமைகளைப் பழையவுரையாசிரியர் நன்கு விளக்கி உரைக்கின்றார்.

இவர்தம் உரையிடையே 'நோயிலராகுக நின்புதல்வர்' என்பது போன்ற குறிப்பு மொழிகளும் விளக்கப்பெற்றுள்ளன. சங்க அகத்திணைப் பாடல்களில் உள்ளுறை, இறைச்சி ஆகிய குறிப்புப் பொருட்களைப் போன்று, புறநானூற்றுப் பாடல்களிலும் குறிப்புப்பொருட்கள் காணப்படுகின்றன. இவை 'இன்ன சொற்களின் குறிப்பினால் இன்னபொருள் தோன்றுகிறதென்றும், இன்ன நயம் புலப்படுகின்றதென்றும் தெளிவுபடுத்துகின்றன. 'பாடுவல் விறலியோர் வண்ணமென்றது நீயும் ஒன்று பாடுவாயாக வென்னும் நினைவிற்று' என்பது போன்ற பயன் நினைவுரைத்தல் உரைகள் பாடலின் பொருளை நுட்பமாக விளக்குகின்றன.

புறநானூற்றுப் பாடல்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு சிறப்புக்களை உடையன. அதனைப் பழையவுரையாசிரியர் எடுத்துக் கூறி விளக்கியுள்ளார். இவர் உரையில் அனைத்து வகையான இலக்கணக் குறிப்புகளும் காணப்படுகின்றன. துறைப்பொருத்தம் சிறப்பாக உரைக்கப்பட்டுள்ளது. பாடல்களின் அணிநயம் கூறுதலும், கற்றோர் படித்து இன்புறுவதற்கேற்ற உரை நயங்களும் பழையவுரையில் காணப்படுகின்றன. கருத்துரைத்தல் என்னும் உரைப்போக்கு, பாடல்களில் இடம்பெற்றுள்ள அரிய கருத்துக்களை விளக்குவனவாக உள்ளன. இவை அனைத்தும் புறநானூற்றுப் பழையவுரையாசிரியரின் உரைப்புலமைக்குச் சான்றாக விளங்குகின்றன.

## சான்றெண் விளக்கம்


1. அ.பாண்டுரங்கன், சான்றோர் கவி, ப.46
2. மு.அருணாச்சலம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.69
3. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியக் கொள்கை, ப.174
4. எஸ்.கௌமாரீஸ்வரி (ப.ஆ), கௌரா தமிழ் அகராதி, ப.145
5. மேலது, ப.354
6. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், ப.119
7. சிங்காரவேலு முதலியார், சிவப்பிரகாச முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1397
8. பதிப்பாசிரியர் குழு, க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.907
9. எஸ்.கௌமாரீஸ்வரி (ப.ஆ), கௌரா தமிழ் அகராதி, ப.608
10. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, பொருளதிகாரம் மரபியல், நூ.93
11. கழகப் புலவர்குழு, நன்னூல் சொல்லதிகாரம், பொதுவியல், ப.302
12. மேலது, ப.302
13. தொல்காப்பியம் சிறப்புப் பாயிரம்
14. எஸ்.கௌமாரீஸ்வரி (ப.ஆ), கௌரா தமிழ் அகராதி, ப.143
15. மேலது, ப.266
16. மு.அருணாச்சலம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.73
17. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.129
18. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, பொருளதிகாரம் செய்.நூ.79
19. கழகப் புலவர்குழு, நன்னூல் சொல்லதிகாரம், பொதுவியல், நூ.388
20. குறள்.381
21. குறள்.212
22. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், ப.37

23. மேலது, ப.133

24. மேலது, ப.54

25. வீ.அரசு, சங்க இலக்கியம்:பன்முக வாசிப்பு, பக்.63-64

26. பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், பக்.432-433

27. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், ப.54

28. வி.நாகராசன் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப.691

29. தமிழண்ணல், தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள், பாகம்-2, ப.138

30. மா.சின்னு, பரிமேலழகரின் இலக்கண உரைத்திறன், ப.66

31. மேலது, பக்.19, 20

32. தொல்.பொருள்.புறத்.36

# இயல் - மூன்று

## பதிற்றுப்பத்துப் பழையவுரைப் போக்கும் திறனும்

எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இரண்டு நூல்களுக்கும் பழையவுரைகள் கிடைக்கின்றன. இவற்றில் பதிற்றுப்பத்தின் பாடல்கள் கிடைக்கப்பெறாத முதற்பத்தும் இறுதிப் பத்தும் தவிர்த்து மற்ற எட்டுப் பத்துக்களுக்கும் புறநானூற்றின் 266 பாடல்களுக்கும் பழையவுரைகள் உள்ளன. பதிற்றுப்பத்துப் பழையவுரைகளின் தனித்தன்மைகளையும் உரையாசிரியர்கள் பயன்படுத்தி உள்ள சிந்தனை மரபுகளையும் கண்டறியும் முயற்சி இவ்வாய்வில் மேற்கொள்ளப்படுகிறது. பழையவுரைகள் பதிப்பிக்கப்பட்ட காலம் தொடங்கி இவ்வுரைகள் மீது உரை ஆய்வாளர்களால் நிகழ்த்தப்பெற்ற விவாதங்களும் கருத்துக்களும் கவனத்தில் கொள்ளப்படுகின்றன. பதிற்றுப்பத்துக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரை, பிற்கால உரை வளர்ச்சியில் பெறும் பங்கு குறித்து விளக்கப்படுகின்றது. அவ்வகையில், பதிற்றுப்பத்துப் பழையவுரைப் போக்கும் திறனும் குறித்து ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### பதிற்றுப்பத்தின் உரை

பதிற்றுப்பத்தின் மூலத்தைப் பழையவுரையுடன் சேர்த்து 1904 ஆம் ஆண்டு உ.வே.சாமிநாதையர் பதிப்பித்தார். இவர் தனக்குக் கிடைத்த ஆறு கையெழுத்துப் பிரதிகளையும் இப்பதிப்புக்குப் பயன்படுத்தியுள்ளார். இரண்டாம் பதிப்பு 1920 ஆம் ஆண்டு பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இதன் மூன்றாம் பதிப்பு 1941 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. பதிற்றுப்பத்தின் பழைய உரைச்சிறப்பை, ‘‘பதிற்றுப்பத்தின் பழைய உரையாசிரியர் மூலத்தோடு ஒப்பப் பதிகத்திற்கும் உரைநடைப்பகுதிக்கும் குறிப்புரை எழுதியிருப்பதிலிருந்து, இவற்றின் பழமையும் கருத்துத் தகுதியும் பெறப்படும்’’[1] என்பர் வ.சுப.மாணிக்கனார். வினைமுடிபு பொருள்முடிபு காணுதல், பாடலின் தலைப்பினை விளக்குதல், மேற்கோள்கள், துறை வண்ணம் தூக்கு விளக்கம் தருதல், பாடலின் பயன் கூறுதல், இலக்கணம் கூறி விளக்குதல், சொற்பொருள் தருதல், தொடர் விளக்கம் தருதல், இசை அறிவு, வேறு பாடம் கூறி

வேறு உரை கூறுதல், சொல் வருவித்துப் பொருள் கூறுதல், மாறிக் கூட்டுதல், சொல் வழக்காறு ஆகிய உரை இயல்புகளைப் பதிற்றுப்பத்துப் பழையவுரை கொண்டிலங்குகிறது.

**வினைமுடிவு பொருள்முடிபு**

பதிற்றுப்பத்துப் பாடல்களின் இறுதியில் பழையவுரையாசிரியர், பாடல் முழுவதையும் ஒன்றோடொன்று தொடர்புபடுத்தி உரை கூறுகின்றார். ஒரு குறிப்பிட்ட அரசனின் புகழைப் பாடும் புறப்பாடலாகப் பதிற்றுப்பத்து அமைந்துள்ளது. இப்பாடல்களில் எழுவாய் ஓரிடத்தில் அமைந்துள்ளது. அதன் பயனிலைகள் பாடல் முழுவதும் வெவ்வேறு அளவுகளில் அமைந்து வந்துள்ளன. எனவே, இவற்றைக் கொண்டுகூட்டிப் பொருள் காண்பது அவசியமாக உள்ளது. ஒரு மன்னன் பல்வேறு புகழ் எய்தி இருப்பான். அப்புகழ்ச்சிகள் ஏற்பட்டதற்கான அனைத்துச் செயல்பாடுகளையும் விளக்கி மன்னனின் சிறப்புப் பெயரைத் தனித்து நிறுத்துவது சங்கப் புலவர்களின் பண்பாக இருந்திருக்கின்றது. சங்கப் இலக்கியப் பாடல்கள் யாப்பு நோக்கியும் செய்யுள் நயம் நோக்கியும் எழுதப்பட்டவையாதலால் சொற்கள் முன்பின்னாக மாற்றம் பெற்றுள்ளன. இவ்வாறு சொற்கள் முன்பின்னாக மாற்றி உரைக்கப்படுவதைத் தொல்காப்பியர்,

> ‘‘நிரல்நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று
> அவை நான்கு என்ப மொழிபுணர் இயல்பே’’[2]

என நான்கு வகையான பொருள்கோடல் முறைகளைக் கொண்டு விளக்குகின்றார். இந்த நான்கு முறைகளையும் தாம் உரை எழுதும்பொழுது உரையாசிரியர்களும் பயன்படுத்துகின்றனர். பதிற்றுப்பத்துப் பழைய உரையாசிரியரும் இம்முறையைப் பின்பற்றி உரை வரைகின்றார். இவர் சொற்களை மிக அதிக அளவில் இடம்மாற்றிப் பொருள் கூறுகின்றார். இதன் நோக்கம், பாடலின் முழுமையான பொருளை வெளிக் கொண்டு வருவதற்கு முயல்கின்ற ஒரு முயற்சியாகும். பழைய உரையாசிரியர் நீண்ட பாடல்களுக்கிடையில் சொல்முடிபு பொருள் முடிவு கூறுவதுடன், பாடலின் இறுதியிலும் சொல்முடிபு பொருள் முடிபு கூறுகின்றார். ஒரு குறிப்பிட்ட சில பாடல்களில் மட்டும் சொற்களை முன்பின்னாக மாற்றிக் கூட்டாமல் வினைமுடிவு கூறுகிறார். இதனை,

“நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி
னளப்பரி யையே
நாள்கோ டிங்கண் ஞாயிறு கனையழ
லைந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுத்த வீரைம் பதின்மரொடு
துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை
யக்குர னனைய கைவண் மையையே
யமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீ டழித்த செருப்புகன் முன்ப
கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே
யெழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை
வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பி
னொடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ
பல்களிற்றுத் தொழுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையே ருழவ பாடினி வேந்தே
யிலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்
கடலக வரைப்பிணிப் பொழின்முழு தாண்டநின்
முன்றிணை முதல்வர் போல நீன்றுநீ
கெடா நல்லிசை நிலைஇத்
தவா லியரோவிவ் வுலகமோ டுடனே” (பதிற்.14)

என்னும் பாடலில் வரும் அடிகளை, ஒன்றுடன் ஒன்று கூட்டி வினைமுடிபு கூறுவது குறிப்பிடத்தக்கதாகும். “(க) நிலமுதற் பூத நான்கும் போலப் பெருமை (உ)அளத்தலரியை (ங) நான்மீன் முதல் (ச) ஐந்தையும் விளக்கத்தால் ஒப்பை (எ) கைவண்மையால் அக்குரனென்பவனை யொப்பை அன்றி (கூ) முன்ப நின்வலியிறுக்கும்படி சொல்லிற் (க0) கூற்று வெகுண்டுவரினும் அதனையும் மாற்றும்வலி கணவ (கள) படையேருழவ, பாடினிவேந்தே, (உ0) நின்குடி முன்முதல்வர்

போல நின்று (உக) நல்லிசையை நிலைப்பித்து (உஉ) இவ்வுலகத்தோடுகூடக் கெடாதொழிவாயாகவென வினைமுடிவு செய்க'' (பதிற்.பழைய.ப.9) (அடைப்புக்குள் இருக்கும் தமிழ் எண்கள் பாடல் அடியைக் குறிப்பன) என எழுதுகிறார். இப்பாடலில் 1, 2, 3, 4, 7, 9, 10, 17, 20, 21, 22 ஆகிய அடிகளில் உள்ள சொற்களை மாற்றிக்கூட்டி வினைமுடிபு தருகின்றார். இதேபோன்று 46ஆம் பாடலில்,

''வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
பணியா மரபி னுழிஞை பாட
வினிதுபுறந் தந்தவர்க் கின்மகிழ் சுரத்தலிற்
சுரம்பல கடவுங் கரைவாய்ப் பருதி
யூர்பாட் டெண்ணில் பைந்தலை துமியப்
பல்செருக் கடந்த கொல்களிற் றியானைக்
கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்
டுடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய
வெல்புகழ் குட்டுவற் கண்டோர்
செல்குவ மென்னார் பாடுபு பெயர்ந்தே'' (பதிற்.46:4-14)

என்ற பாடலின் அடிகளை, (ச) மகளிர் (சு) உழிஞைபாட (எ)மகிழ்சுரத்தலிற் (கூ)குட்டுவற் (கச) பாடிக் (கூ) கண்டோர் (கச)பெயர்ந்து செல்குவ மென்னார் நிற்கவெனக் கருதுவரென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க'' (பதிற்.பழைய.ப.71) என மாற்றிப் பொருள் கொள்ளும் தன்மை காணப்படுகிறது.

''இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்
திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்'' (பதிற்.46:1-4)

என்னும் பாடலில் முதல் அடியில் வரும் சொல் இழையர், குழையர் என்பவை. இந்த முதல் அடியுடன் நான்காம் அடியில் வரும் மகளிர் எனும் சொல்லுடன் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும் என்பதை, ‘‘(க) இழையர் குழையர் மாலையராகிய (கச) மகளிரெனக் கூட்டுக’’ (பதிற்.பழைய.ப.70) என்பர்.

‘‘குவியிணர் ஞாழன் மாச்சினைச் சேக்கும்
வண்டிறை கொண்ட தண்கடற் பரப்பி
னடும்பம லடைகரை யலவ னாடிய
வடுவடு நுண்ணயி ரூதை யுஞற்றுந்
தூவிரும் போந்தைப் பொழிலணிப் பொழிதந்’’ (பதிற்.51:5-9)

எனும் பாடலில் ஒன்பதாம் அடியில், ‘பொழில்’ என்னும் சொல் வந்துள்ளது. இந்த அடியில் வரும் சொல்லை 5, 6, 7 ஆம் அடிகளோடு கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும் என்பதை, ‘‘(ரு)மாச்சினைச் சேக்கும் (கூ)பொழில் (சு)வண்டு இறை கொண்ட (கூ)பொழில், (எ)அடைகரைப் (கூ)பொழிலெனக் கூட்டுக’’ (பதிற்.பழைய.ப.81) என எழுதுகிறார். இதில் ‘பொழில்’ என்ற சொல் பல இடங்களில் சென்று பொருள் தருவதைச் சுட்டி விளக்குகிறார்.

‘‘வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்கக்
கடல்போ றானைக் கடுங்குரன் முரசங்
காலுறு கடலிற் கடிய வுரற
லெறிந்து சிதைந்த வா
ளிலைதெரிந்த வேல்
பாய்ந்தாய்ந்த மா
வாய்ந்துதெரிந்த புகன் மறவரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்’’ (பதிற்.69:2-9)

என்ற பாடலின் 2, 3 ஆகிய அடிகளில் உள்ள வினையெச்சங்களை 9ஆம் அடியிலுள்ள வினையொடு முடிக்க வேண்டுமென்பதை, ‘‘(உ)நுடங்கவெனவும் (ச)உரறவெனவுநின்ற வினையெச்சங்களை (கூ)நூறியென்னும் வினையொடு முடிக்க’’ (பதிற்.பழைய.ப.115) என்று இலக்கண நெறியில் நின்று பொருள்முடிவு தருகிறார்.

“பயங்கெழு வெள்ளி யாறிய நிற்ப” (பதிற்.69:14)

என்ற அடிக்கு, “வெள்ளியென்றது வறிது வடக்கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி (பதிற்றுப்பத்து, (உச) என்றவாறு” என உரைகூறிவிட்டுப் புறநானூற்றுப் பாடல் அடியினையும் மேற்கோளாகக் காட்டுகின்றார். இதனை, “(ச)அகலம் (ரு)மகளிர்க் கல்லது மலர்ப்பறியலையேயென்றது நின்னொடு பொருவாரின்மையின் நின் அகலத்தை நின்மகளிர் போகத்துக்கிடமாகவல்லது மலர்வித்தலை அறியாயென, ‘மகளிர் மலைத்த லல்லதுமள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப’ (புறநானூறு,கo) என்றதுபோலக் கொள்க” (பதிற்.பழைய.ப.115) என்ற உரைப்பகுதியின் வாயிலாக அறிய இயலும். இவ்வாறு பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் வினைக்கும் பொருளுக்கும் முடிபு காண்பதை ஓர் உரைமரபாகக் கொண்டிருப்பது தெளிவாகும்.

**பாடல் தலைப்பினை விளக்குதல்**

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் பதிற்றுப்பத்து தனிச் சிறப்புடையதாகக் காணப்படுகின்றது. அத்தகைய தனித்த அடையாளங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது பாடல் தலைப்பினை விளக்கும் தன்மை ஆகும். பதிற்றுப்பத்துப் பாடல்களில் இடம்பெற்றுள்ள பொருளால் சிறப்புடைய ஒரு தொடரே அப்பாடலுக்கான பெயராக அல்லது தலைப்பாக அமைந்திருக்கின்றது. இத்தகைய சிறப்பு பத்துப்பாட்டில் ‘மலைபடுகடாம்’ என்ற நூலுக்கு மட்டும்தான் காணப்படுகின்றது. இத்தகைய பெயர் அமைப்பு முறை சங்க இலக்கியங்களில் பிற நூல்களுக்குக் காணப்படவில்லை. பதிற்றுப்பத்தின் பழையவுரையாசிரியர் பாடலின் பொருளால் சிறப்புடைய அந்தத் தொடரைச் சிறப்பாக விளக்குகிறார். இவரின் உரை மிகச் சுருக்கமாக அமைந்துள்ளது எனினும் பொருளால் சிறப்புடைய அத்தொடருக்கு மட்டும் விரிவான விளக்கம் தருகின்றார்.

பதிற்றுப்பத்தின் முதல் பாடலின் பெயர் ‘புண்ணுமிழ்குருதி’ என்பதாகும். இத்தொடர் இடம்பெற்றுள்ள 8ஆம் அடிக்கு உரையெழுதும் போது, “‘அருநிறந்திறந்த’ முன்வந்த அடைச்சிறப்பானும், ‘மணிநிறவிருங்கழி நீர்நிறம் பெயர்ந்து, மனாலக் கலவைபோல’ எனப் பின்வந்த அடைச்சிறப்பானும் இதற்கு ‘புண்ணுமிழ்குருதி’ என்று பெயராயிற்று” (பதிற்.பழைய.ப.2) என்றும், ‘மறம்வீங்கு

பல்புகழ்’ என்ற பெயர் பெற்ற 2ஆம் பாடலில் அத்தொடருக்கு, ‘‘மறம்வீங்கு பல்புகழென்றது அரசர்க்குச் சிறந்த மறப்புகழ் மற்றைப் புகழினும் மிக்க பல்புகழென்றவாறு’’ (பதிற்.பழைய.ப.4) என்றும் அமைந்துள்ளது. இத்தொடரில் வரும் மறம்வீங்கு பல்புகழ் என்றது அரசன் என்பவன் ஈகை, கொடை போன்றவற்றில் சிறந்து விளங்கினாலும் அவ்வரசன் வீரத்தில் சிறந்து விளங்க வேண்டும். அவ்வாறு விளங்கவில்லையேல் நாட்டு மக்கள் பெரிதும் துன்பத்திற்கு உள்ளாவர். இதனை அறிந்து செயல்பட வேண்டியது ஒரு மன்னனின் மிக முக்கியக் கடமை ஆகும் என்பது விளக்கமாக அமைந்துள்ளது.

‘‘வலம்படுவியன்பணையென்றது, போர்செய்து வருத்தாமற் பகைவர் வெருவியோட முழங்கி அரசனுக்கு வென்றி தன்பாலே படநின்ற முரசமென்றவாறு. இச்சிறப்பான் இதற்கு ‘வலம்படுவியன்பணை’ என்று பெயராயிற்று’’ (பதிற்.17.பழைய.ப.15) என அரசனின் வீரச் சிறப்பைப் பெரிதும் உவந்து கூறுவதற்கான காரணத்தைச் சுட்டுகிறார், பழையவுரையாசிரியர். இப்பாடலின் தலைப்பாக அமைந்துள்ள பொருளை, ‘‘பகைவரைப் பொருதழித்துப் பெற்ற வெற்றிக் குறியாகச் செய்த பெருமுரசாதலால், ‘வலம்படு வியன்பணை’ யென்பர்’’[3] என்கிறார், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. பழையவுரையாசிரியர் பதிற்றுப்பத்தின் அனைத்துப் பாடல்களின் தலைப்பிற்கும் விளக்கம் அளிக்கின்றார். இவ்வாறு விளக்குதல் பழையவுரையாசிரியர் உரை இயல்பில் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

**மேற்கோள்கள்**

பதிற்றுப்பத்துக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையின் இடையே சில மேற்கோள்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூலின் பழையவுரையாசிரியர் தாம் உரையெழுதும் பகுதிக்கு, அதே நூலிலிருந்தோ அல்லது பிற நூலிலிருந்தோ மேற்கோள் காட்டுவது வழக்கமாக இருந்திருக்கின்றது. இதனை,

‘‘கவிர்ததை சிலம்பிற் றுஞ்சும் கவரி’’ (பதிற்.11:21)

என்ற அடிக்கு, ‘‘கவிர்ததை சிலம்பிற் துஞ்சுமென்றது ஆண்டு உறையும் ஆரியராணையானே முருக்கென்னும் முள்ளுடை மரமும், ‘மயிர்நீப்பின் வாழாக் கவரிமா’ (திருக்.௯௬௯) என்று சிறப்பிக்கப்பட்ட தன் மயிர்க்கும் வருத்தஞ் செய்யாமையால், அக்கவிர் செறிந்த சிலம்பின்கண்ணே இனிதாக

உறங்குமென்றவாறு'' (பதிற்.பழைய.ப.2) என மேற்கோள் காட்டி உரை வரைந்திருக்கின்றார், பதிற்றுப்பத்தின் பழையவுரையாசிரியர். இவர் உரையெழுதும் போது, உரையெழுதும் பகுதிக்கு ஏற்புடைத்தாக இருக்கக் கூடிய அனைவராலும் அறியப்பட்ட நூலில் இடம்பெற்றுள்ள பாடலை எடுத்துக் காட்டுகிறார்.

''நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்'' (பதிற்.13:13)

என்ற அடிக்குப் பழையவுரையாசிரியர், 'நீரழிபாக்கமென்றது வெள்ளத்தான் அழிவுபடினல்லது பகைவரான் அழியாத பாக்க மென்றவாறு' என்று உரை கூறிவிட்டு, ''பாக்கமென்றது, நெய்தனிலத்து ஊர்க்கேயன்றி, 'கட்கொண்டிக் குடிப்பாக்கத்து நற்கொற்கை' (மதுரைக்.கருஎ-கருஅ ம் அடிகள்) என்று வந்தமையான் ஒரோவழி அரசனிருப்புக்குப் பெயராமாகலின் ஈண்டுப் பாக்கமுடைய பேரூர்களெனப்பட்டது'' (பதிற்.பழைய.ப.6) என உரை கூறிச் செல்கின்றார். எட்டுத்தொகை நூலான பதிற்றுப் பத்துக்கு உரையெழுதும் பழையவுரையாசிரியர் பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான மதுரைக்காஞ்சியின் அடிகளை மேற்கோளாக இட்டுச் செல்கின்றார்.

''புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பி'' (பதிற்.15:13)

என்ற அடிக்கான பழையவுரை, ''புல்லிலை வைப்பென்றது புல்லிய இலைகளாலே வேயப்பட்ட ஊரென்றவாறு; இதனை 'நூலாக்கலிங்கம்' (பதிற்றுப்பத்து, (கஉ) என்றதுபோலக் கொள்க'' (பதிற்.பழைய.ப.11) என அமைந்துள்ளது. பழைய உரையாசிரியர் தான் உரையெழுத எடுத்துக்கொண்ட அதே நூலிலிருந்து மேற்கோள் காட்டுவது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இதுபோன்று, பதிற்றுப்பத்தின் 21ஆம் பாடலின் பழையவுரை அமைந்துள்ளது.

''சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்'' (பதிற்.21:1.ப.24)

என்ற அடிக்கான பழையவுரை, ''சொல்-சொல்லிலக்கணஞ் சொல்லுநூல். பெயர்-பொருளிலக்கணஞ் சொல்லுநூல்; 'பெற்ற பெரும்பெயர் பலர்கை இரீஇய' (பதிற்றுப்பத்து,சூ) என இத்தொகையில்மேலே வந்தமையால், பெயரென்பது பொருளாம். நாட்டம் - சோதிடநூல். கேள்வி - வேதம். நெஞ்சமென்றது இந்திரியங்களின் வழியோடாது உடங்கிய தூய நெஞ்சினை'' (பதிற்.பழைய.ப.25)

என அமைந்துள்ளது. இதிலிருந்து பழையவுரையாசியர் தான் உரை எழுதும் நூலிலிருந்தே மேற்கோள் காட்டுவதால், அந்நூலில் மிகுந்த ஈடுபாடுமிக்கவர் என்பது புலப்படும். திருக்குறள், மதுரைக்காஞ்சி ஆகிய பிற நூல்களிலிருந்தும் மேற்கோள் காட்டுவதால் பழையவுரையாசிரியரின் பன்முகப்புலமை வெளிப்படும்.

**துறை, வண்ணம், தூக்கு விளக்கம் தருதல்**

பதிற்றுப்பத்து என்னும் நூலில் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர் ஆகியவற்றைப் புலப்படுத்தும் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. பிற நூல்களில் துறை, பெயர் போன்ற குறிப்புகள் காணப்பட்டாலும் வண்ணம், தூக்கு ஆகியன பதிற்றுப்பத்து தவிர வேறு எந்த நூலிலும் காணப்படவில்லை. இத்தகைய துறை, வண்ணம், தூக்கு ஆகியன பாடல்களில் பொருந்தி வருவதை எடுத்தியம்புகிறார், பழையவுரையாசிரியர். இவ்விளக்கங்களைப் பதிற்றுப்பத்தின் அனைத்துப் பாடல்களுக்கும் குறிப்பிடப்படவில்லை என்பது சுட்டத்தக்கது. இப்பழையவுரையின் மூலம் செந்தூக்கு, வஞ்சித்தூக்கு முதலிய பெயர்களின் விளக்கங்களும் அவை பாடல்களில் பொருந்தி வருவதும் நன்கு புலப்படுகின்றன.

“‘இரு முந்நீர்’(உ) எனவும், ‘முரணியோர்’(ரு) எனவும் ‘கடிமிளை’(கஎ) எனவும் ‘நெடுமதில்’(கஅ) எனவுமெழுந்த நான்கடியும் வஞ்சியடி யாகலான், வஞ்சித்தூக்கு மாயிற்று” (பதிற்.20.பழைய.ப.22) எனச் செந்தூக்கு வந்துள்ள பாடலில் வஞ்சித்தூக்கு வந்துள்ள அடிகளைச் சுட்டிக் காட்டுகின்றார்.

பதிற்றுப்பத்தின் 22ஆம் பாடலில், “(கஎ) ‘உளைப் பொலிந்த மா’ என்பது முதலாய நாலடியும் (உச) ‘கடிமிள’ என்பது முதலாய இரண்டடியும் வஞ்சியடியாய் வந்தமையால் வஞ்சித் தூக்குமாயிற்று” (பதிற்.பழைய.ப.29) என்றும், “(ச) ‘செவ்வுளைய’ என்பது முதலாக இரண்டு வஞ்சியடியாய் வந்தமையான் வஞ்சித் தூக்குமாயிற்று” (பதிற்.34.பழைய.ப.50) என்றும் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

பாடலில் இடம்பெற்றுள்ள சிந்தடி, குறளடி போன்றவற்றைத் தனித்தனியே சுட்டுகிறார். இதனை “(கரு)அரவழங்கும் முதலாக இரண்டு குறளடியும் (கசு) ‘பந்தரந்தரம் வேய்ந்து’ என ஒரு சிந்தடியும் (கசூ) ‘சுடர்நுதல்’ என்பது முதலாக

இரண்டு குறளடியும் மழைதவழும் என்பது முதலாக நாலு குறளடியும் வந்தமையான் வஞ்சித்தூக்குமாயிற்று'' (பதிற்.51.பழைய.ப.83) என்பது புலப்படுத்தும்.

''போரெதிர் வேந்தர் தாரழிந்து ஒராலின் நாடு காடாயினவென எடுத்துச் செலவினை மேலிட்டுக் கூறினமையால் வஞ்சித்துறைப் பாடாணாயிற்று'' (பதிற்.23.பழைய.ப.30) என்றும், ''நின் வயவர் சீறியநாடு இவ்வாறு அழிந்ததென எடுத்துச் செலவினை மேலிட்டுக் கூறினமையால் வஞ்சித்துறைப் பாடாணாயிற்று'' (பதிற்.26.பழைய.ப.35) என்றும், ''வரம்பிறானை பரவாவூங்கென எடுத்துச் செலவினை மேலிட்டுக் கூறினமையால் வஞ்சித்துறைப் பாடாணாயிற்று'' (பதிற்.29.பழைய.ப.39) என்றும், ''தார்புனலை ஒன்னார் உருப்பற நிரப்பினையென எடுத்துச் செலவினை மேலிட்டுக் கூறினமையால், துறை வஞ்சித் துறைப் பாடாணாயிற்று'' (பதிற்.50.பழைய.ப.78) என்றும் வஞ்சித்துறைப் பாடாண் ஆயினமையின் காரணத்தைச் சுட்டிக் காட்டுகின்றார்.

''உரை சான்றன நின் வென்றியெனக் கூறினமையான் வாகைத் துறைப் பாடாணாயிற்று'' (பதிற்.3.பழைய.ப.51) என்றும், ''மிகுதி வகையால் தன் போர்க்களச் சிறப்புக் கூறினமையான், துறை களவழியாயிற்று'' (பதிற்.36.பழைய.ப.52) என்றும், ''ஆடுக பாடுகவென்றதற்கு அவன்பாற்சென்று ஆடுக பாடுகவெனக் கூறாது இவ்வாறு கூறியதன் கருத்து, ஆற்றுப்படை யென்னாது செந்துறைப் பாடாணென்று கிடந்தமையானெனக் கொள்க'' (பதிற்.58.பழைய.ப.95) என்றும், ''படர்ந்தனை செல்லும்' என்று பாணன் தன்னில் நினைவன கூறினமையால் துறை பாணாற்றுப்படையன்றிச் செந்துறைப்பாடாணாயிற்று'' (பதிற்.67.பழைய.ப.110) என்றும் விளக்குவர்.

'''எறிந்து சிதைந்த' என்பது முதலாக 'மறவரொடு என்பதீறாக நான்கடி வஞ்சியடியாய் வந்தமையான், வஞ்சித் தூக்குமாயிற்று. அவற்றுள் முன்னின்ற மூன்றடிகளின் ஈற்றுச் சீர்கள் அசைச்சீர்களாகவும் மற்றை அடியின் ஈற்றுச்சீர் பொதுச்சீராகவும் இட்டுக் கொள்க'' (பதிற்.69.பழைய.ப.116) என்றும், ''இப்பாட்டிற் பொதுப்படப் படையெழுச்சி கூறியதனை உழிஞையரவமென்றது, ஆண்டு அப்படையெழுங்காலத்து நொச்சி மதிற் போர் குறித்தெழுந்ததை ஒரு காரணத்தான் அறிந்துபோலும்'' (பதிற்.77.பழைய.ப.132) என்றும் ''தெம்முனைப் புலவரைப் பகைவர்

கொடி தோன்றல் யாவதென எதிரூன்றுவாரின்மை தோன்றக் கூறிய அதனால், வஞ்சித்தூக்குப் பாடாணாயிற்று'' (பதிற்.80.பழைய.ப.134) என்றும் எடுத்துரைப்பர்.

''அவனரிவை கற்பு முல்லையைப் பற்றி வந்தமையால், துறை முல்லையாயிற்று'' (பதிற்.81.பழைய.ப.140) என்றும், ''அவ்வாறு நாடுகாவல் கூறினமையால், துறை காவன் முல்லையாயிற்று'' (பதிற்.89.பழைய.ப.153) என்றும் விளக்குவர். இவ்வாறு உழிஞையரவம், முல்லை, காவன் முல்லை, வஞ்சித்தூக்கு போன்றவை அமைந்ததன் காரணத்தைக் கூறி உரை கூறுவது பழையவுரையாசிரியரின் உரை இயல்புகளுள் தனித்தன்மை பெற்று விளங்குகிறது.

**பாடலின் சிறப்புக் (பயன்) கூறுதல்**

பதிற்றுப்பத்துப் பாடல்கள் அனைத்தும் சேர அரசர்களைப் புகழ்ந்து பாடக்கூடியவை ஆகும். அப்பாடல்களில் மன்னனின் கொடைச்சிறப்பு, வெற்றிச் சிறப்பு, நாடுகாத்தற் சிறப்பு எனப் பல்வகைச் சிறப்புகளையும் பெற்றுப் புகழெய்தியிருக்கும் செய்தி இடம்பெற்றிருக்கும். இத்தகைய செய்திகளை உரையின் இறுதியில் சுட்டிக் காட்டுவதாகப் பதிற்றுப்பத்துக்கான பழையவுரையாசிரியரின் உரை அமைகின்றது. சில பாடல்களில் ஏதேனும் ஒரு சிறப்பு மட்டும் காணப்படும். சில பாடல்களில் இரண்டு சிறப்புகளும் அதற்கு மேற்பட்ட சிறப்புக்களும் காணப்படும். பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ள இதுபோன்ற சிறப்புக்களை எடுத்துக்காட்டும் விதமாக, அதன் பழையவுரை அமைகின்றது என்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். பதிற்றுப்பத்தின் முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கப்பெறவில்லை. இரண்டாம் பத்தின் பத்துப் பாடல்களும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர் கண்ணனார் பாடியதாகும். இந்நூலிற்குக் கிடைக்கப்பெற்ற எட்டுப் பத்துக்களிலும் சேர மன்னர்களின் சிறப்புக்கள் இடம்பெற்றுள்ளன. இதன் சிறப்புக்களைப் பழையவுரையாசிரியர் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'இதனாற் சொல்லியது, அவன் வெற்றிச் செல்வச் சிறப்புக் கூறியவாராயிற்று' என்று சுட்டிக் கூறுகின்றார். அவ்வகையில் கிடைக்கப்பெற்ற எட்டுப்பத்துக்களின் சிறப்புக்களும் பாடலின் பயன் கூறுதல் என்னும் பகுதியாக அமைகின்றன.

இரண்டாம் பத்தாக அமைந்துள்ள 11ஆம் பாடல் நெடுஞ்சேரலாதனின் வெற்றிச் செல்வச்சிறப்பினைக் குறிப்பிடுகின்றது. 12, 13, 15, 16, 17, 19 என்னும்

ஆறு பாடல்களிலும் வெற்றிச் சிறப்பு சுட்டப்பெற்றுள்ளது. அதனுடன் சேர்த்து 12ஆம் பாடலில் ஓலக்கச் சிறப்பும் 13, 15ஆம் பாடல்களில் நாடுகாத்தற் சிறப்பும், 16, 19ஆம் பாடல்களில் குலமகளோடு நிகழ்ந்த இன்பச் சிறப்பும், 17ஆம் பாடலில் பொறையுடைமைச் சிறப்பும் சுட்டப்படுகிறது. 14ஆம் பாடல் பல குணங்கள், ஆற்றல் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது. 18ஆம் பாடல் கொடைச் சிறப்பையும், 20ஆம் பாடல் குணங்களைக் கூறி வாழ்த்துவதாக அமைகின்றது.

பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்து இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாலைக்கௌதமனார் பாடியதாகும். இப்பத்தில் அமைந்துள்ள 21, 28 ஆகிய இரண்டு பாடல்களும் நாடுகாத்தற் சிறப்பையும் 24ஆம் பாடல் மன்னனின் பெருமையையும் கொடைச் சிறப்பையும் சுட்டுகிறது. 22, 23, 25, 26, 27, 29, 30 ஆகிய ஏழு பாடல்களும் மன்னனின் வெற்றியைச் சிறப்பிக்கின்றன.

நான்காம் பத்து களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடியதாகும். இப்பத்தில் அமைந்துள்ள 31ஆம் பாடல் மன்னனின் மாட்சிமை பற்றிக் குறிப்பிடுகின்றது. 32ஆம் பாடல் பல குணங்கள், பொறையுடைமை ஆகியவற்றையும் 37ஆம் பாடல் குணங்கள், செல்வம் ஆகியவற்றையும் சிறப்பிக்கின்றது. 33, 34, 35, 36, 39 ஆகிய ஐந்து பாடல்களும் மன்னனின் வெற்றியைச் சிறப்பிக்கின்றன. 38, 39, 40 ஆகிய மூன்று பாடல்களும் கொடைப்பண்பைச் சிறப்பிக்கின்றன.

ஐந்தாம் பத்து கடற்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடியதாகும். இவ்வைந்தாம் பத்தில் அமைந்துள்ள 41, 42, 45, 46 ஆகிய நான்கு பாடல்களும் வெற்றிச் சிறப்பைக் குறிப்பிடுகின்றன. 42ஆம் பாடலில் கொடைச் சிறப்பு சுட்டப்பெறுகிறது. 43ஆம் பாடல் செல்வ மகிழ்ச்சியைச் சிறப்பிக்கின்றது. 44, 48 ஆகிய இரண்டு பாடல்களும் மன்னனை நெடுங்காலம் வாழ்கவென வாழ்த்துவதாக அமைந்துள்ளது. 47ஆம் பாடலில் கொடைச் சிறப்பும் பகைவற்கோறலும் சுட்டப்பெறுகிறது. 49ஆம் பாடல் வரையாவீகையையும் 50ஆம் பாடல் காமவேட்கையோடு போர்வேட்கையையும் சிறப்பிக்கின்றது.

ஆறாம் பத்து ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடியதாகும். இப்பத்தில் அமைந்துள்ள 51ஆம் பாடல் வினோதத்து மென்மையும், செருவகத்துக் கடுமையும் சுட்டுகின்றது. 52ஆம் பாடல்

கைவண்மையோடு காமவின்பத்தையும் சிறப்பிக்கின்றது. 53, 56, 59, 57, 60 ஆகிய ஐந்து பாடல்களும் வெற்றியைச் சிறப்பிக்கின்றன. 57, 60 ஆகிய இரண்டு பாடல்களிலும் கொடையும் சிறப்பிக்கப்படுகிறது. 54ஆம் பாடல் கொடைச்சிறப்பும் தன்குறையுங்கூறி வாழ்த்துதலாக அமைந்துள்ளது. 55ஆம் பாடல் உலகு புரத்தலும் தன்குறையுங்கூறி வாழ்த்துகிறது. 58ஆம் பாடல் செல்வச் சிறப்பையும் கொடையையும் சிறப்பிக்கின்றது.

ஏழாம் பத்து செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியதாகும். இப்பத்தில் அமைந்துள்ள 61, 64, 66 ஆகிய மூன்று பாடல்களிலும் வெற்றிச் சிறப்புடன் கொடைச்சிறப்பும் சுட்டப்படுகின்றன. 67ஆம் பாடல் கொடைச்சிறப்பினை மட்டும் சுட்டுகிறது. 62, 68 ஆகிய இரண்டு பாடல்களும் மன்னனின் வெற்றியை மட்டும் சிறப்பிக்கின்றன. 63ஆம் பாடல் பல குணங்களை வாழ்த்துகிறது. 65ஆம் பாடல் ஓலக்க வினோதத்தொடு செல்வச் சிறப்பையும் கூறுகிறது. 69ஆம் பாடல் ஆள்வினைச் சிறப்பையும் குடி வரலாற்றையும் சுட்டுகிறது. 70ஆம் பாடல் வென்றி கூறிய திறத்தானே அம்மன்னன் சிறப்பைக் கூறுகின்றது.

எட்டாம் பத்து தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை அரிசில்கிழார் பாடியதாகும். இப்பத்தின் 71ஆம் பாடல் வெற்றிச் சிறப்பு, பகைவர்மேல் அருள் பிறப்பித்தல் ஆகியவற்றைக் கூறுகிறது. 72ஆம் பாடல் சூழ்ச்சியுடைமையும் வெற்றிச் சிறப்பும் ஆகிய இரண்டு சிறப்புக்களையும் 73ஆம் பாடல் செல்வம், ஆண்மை, கைவண்மை, வெற்றிச் சிறப்பு ஆகிய மூன்று சிறப்புகளைச் சுட்டுகிறது. 74ஆம் பாடல் நல்லொழுக்கமும் நல்லறிவுடைமையும் கூறுகிறது. 75, 78 ஆகிய இரண்டு பாடல்களும் வெற்றியைச் சிறப்பித்துப் பாடுகின்றன. 76, 80 ஆகிய இரண்டு பாடல்களும் வெற்றிச் சிறப்பு, கொடைச் சிறப்புப் பற்றிக் குறிப்பிடுகின்றன. 77ஆம் பாடல் படைப்பெருமையைச் சிறப்பிக்கின்றது. 79ஆம் பாடல் மன்னனின் பல குணங்களையும் வாழ்த்துகிறது.

ஒன்பதாம் பத்து குடக்கோ இளஞ்சேரலிரும் பொறையைப் பெருங்குன்றூர்க் கிழார் பாடியதாகும். இப்பத்தில் அமைந்துள்ள 81ஆம் பாடல் காமவேட்கையிற் செல்லாத வெற்றி வேட்கையைச் சிறப்பிக்கின்றது. 82, 84 ஆகிய இரண்டு பாடல்களும் மன்னனின் வெற்றியைச் சிறப்பித்துப் பாடுகின்றன. 83ஆம் பாடல் படைச்சிறப்பையும், 85ஆம் பாடல் முன்னோருடைய கொடைச் சிறப்போடு வெற்றிச் சிறப்பையும் கூறுகிறது. 86ஆம் பாடல் மன்னனின் வன்மை மென்மையைச்

சிறப்பிக்கின்றது. 87ஆம் பாடல் கொடைச் சிறப்பையும் காமவின்பச் சிறப்பையும் சுட்டுகிறது. 89ஆம் பாடல் நாடுகாத்தற் சிறப்பைக் கூறுகின்றது. 90ஆம் பாடல் தண்ணளியும் பெருமையும் கொடையும் சுற்றந்தழாலும் உடன்கூறி வாழ்த்துவதாக அமைந்துள்ளது. இவ்வாறு பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பயனைச் சுட்டுவதாக உள்ளன. இது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இதனைப் பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் தெளிவாக விளக்கிச் செல்கின்றார். இந்தப் பயன் கூறுதலுக்கான அட்டவணை பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ளது.

**இலக்கணம் கூறி விளக்குதல்**

ஒரு மொழிக்குச் சிறப்பையும் அழகையும் கொடுப்பது இலக்கணம் ஆகும். அம்மொழி மண்ணில் என்றென்றும் நிலைத்து நிற்க வேண்டுமெனில் அதன் இலக்கண வளம் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். ஒரு மொழி அழகு குன்றி சீர்கெடாமல் காப்பது இலக்கணம் ஆகும். எனவே இலக்கியங்களுக்கு உரை எழுதிய உரையாசிரியர்களும் உரையின் இடையிடையே இலக்கணக் குறிப்பை எழுதிச் செல்ல மறக்கவில்லை. பண்டைய உரையாசிரியர்கள் இலக்கணம் கூறி உரையெழுதுவதையே ஒரு மரபாகக் கொண்டிருந்தனர். இலக்கியத்திற்கு உரையெழுதிய உரையாசிரியர்களுள் மிக அதிக அளவு இலக்கண மேற்கோள் காட்டியவர் பரிமேலழகர். சங்க இலக்கியங்களுக்குக் கிடைக்கக்கூடிய தொடக்ககால உரைகளில் இலக்கண குறிப்புகள் குறைவாகவே காணப்படுகின்றன. ஆனால் பதிற்றுப்பத்துப் பழையவுரையில் மட்டும் அதிக அளவிலான இலக்கணக் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் சில இடங்களில் பழையவுரையாசிரியர் குறிப்பிடும் இலக்கணக் குறிப்புகள், பிற உரையாசிரியர்கள் வேறெங்கும் எடுத்துக்காட்டாதனவாக உள்ளன. இதனைச் சங்க இலக்கியங்களில் அதிக எண்ணிக்கையிலான நூல்களைப் பதிப்பித்த உ.வே.சாவின் கூற்று வாயிலாக அறிய இயலும். பழைய உரையாசிரியர் இலக்கணக் குறிப்புகளைச் சுட்டுவதோடு, அவற்றை மாற்றிக் கூட்டி வினைமுடிபு கூறுகிறார். இவர் இலக்கணம் கூறி விளக்குவதில் பல்வேறு தன்மைகளைக் கொண்டு விளங்குகின்றார். அவை, ஒரு தொடருக்குச் சரியான வினைமுடிபு தருதல், உவமையாக வருவனவற்றைச் சரியாகப் பொருத்திக் காட்டுதல், சொற்களை முன்பின்னாக மாற்றிக் கூட்டுதல் போன்றவைகளாகும். பழையவுரையிடையே தொழிற்பெயர், வினையெச்சம், கூன்

ஆகிய இலக்கண முறைமைகளைப் பயன்படுத்தியுள்ளார். இவை பாடல்களில் எத்தகைய பொருள் தருகின்றன என்பதையும் விளக்கி உரைக்கின்றார்.

> ‘‘முரைசா னன்கலம் வரைவல வீசி
>
> யனையை யாகன் மாறே யெனையதூஉ’’ (பதிற்.54:8-9)

என்ற அடிகளுக்கான உரையில், ‘‘(அ)வீசியென்னும் வினையெச்சத்தினை (கூ)ஆகலென்னும் தொழிற்பெயரொடு முடிக்க’’ (பதிற்.54:1-9.பழைய.ப.89) என்கிறார். இப்பாடலில் ‘வீசி’ என்ற சொல் தரும் இலக்கணத்தையும் ‘ஆகன்’ என்ற சொல் தரும் இலக்கணத்தையும் கூறி, இவ்விரண்டு சொற்களுக்கிடையிலான பொருளை முடித்துக் காட்டுகிறார். இதனைப்போன்று,

> ‘‘பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ
>
> நட்டோர்க் கல்லது கண்ணஞ்சலையே’’ (பதிற்.63:2-4)

என்னும் அடிகளுக்கான உரையும் அமைகின்றது. இதன் பழையவுரை, ‘‘(உ)கெழீஇயென்னும் எச்சத்தினை (ங) நட்டலென்னும் தொழிலொடு முடிக்க’’ (பதிற்.63.பழைய.ப.104) என ‘கெழீஇ’ என்னும் எச்சச்சொல்லை ‘நட்டல்’ என்னும் தொழிற்பெயரொடு பொருத்தி முடித்துக் காட்டுகிறார்.

‘‘(கக)தோன்றலீயாதென்றது தோன்றாதென்னும் வினையெச்சத் திரிசொல். தோன்றலீயாமலெனத் திரிக்க’’ (பதிற்.71.பழைய.ப.120) என்றும், ‘‘(கூ)சாடியென்னும் வினையெச்சத்தினைச் (கக)செலவென்னும் தொழிற்பெயரொடு முடிக்க’’ (பதிற்.77.பழைய.ப.131) என்றும் இலக்கணம் கூறுகிறார்.

**வினையெச்சம்**

பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் பாடலில் இடம்பெற்றுள்ள வினையெச்சங்களை முடித்துக் காட்டுகின்றார். இத்தகைய உரை அமைப்பு இந்நூலின் அனைத்துப் பாடல்களின் பழையவுரையிலும் அமைந்துள்ளது.

“வதிந்தென்னுமெச்சத்தினைப் பொழுதுகளென்னும் வினையொடு முடிக்க” (பதிற்.50.பழைய.பக்.76-77) என்றும், “(கஉ) கொன்றென்னும் வினையெச்சத்தினை (கஎ)மெய்சிதைந்தென்னும் வினையொடு முடிக்க” (பதிற்.6.பழைய.ப.112) என்றும் சொற்களை முடித்துக் காட்டுகின்றார்.

“(கஉ)வேட்டனையென்றதனை வினையெச்ச முற்றாக்கி அவ்வினை யெச்சத்தினை (உஉ) அருங்கடனிறுத்தவென்னும் வினையொடு கூட்டுக” (பதிற்.74.பழைய.ப.116) என்று கூட்டியுரைத்து இலக்கணம் கூறுகிறார், பழையவுரையாசிரியர்.

**கூன்**

செய்யுள் உறுப்புக்களுள் கூன் என்பதும் ஒன்று. இது செய்யுளின் வடிவத்தோடு தொடர்புடையது கிடையாது; செய்யுளின் பொருளோடு தொடர்புடையது. யாப்பிலக்கண மரபு பொருந்தி நிற்கும் செய்யுளின் தொடக்க அடிகளில் யாப்பிலக்கணத்துக்குப் பொருந்தாமல் தனித்து நிற்கும் சொல் கூன் எனப்படும். ஒரு செய்யுளில் அசையோ சீரோ கூனாக வரும். ஓர் அடி முழுவதும் கூனாக வரலாம். இதன் வரையறையை, “வெண்பா முதலிய செய்யுட்களின் முதலடியின் ஒரோவிடத்துப் பொருள்படத் தனித்து நிற்பது”[4] என்கிறது தமிழ்ப் பேரகராதி.

“அசைகூ னாகு மவ்வயி னான”[5]

என்றும்,

“சீர்கூ னாத னேரடிக் குரித்தே”[6]

என்றும் தொல்காப்பியம் ‘கூன்’ என்பதற்கு விளக்கம் கூறுகின்றது.

‘கனவினும்’ என்பது கூன் (பதிற்.20.பழைய.ப.22) என்றும்,

‘புகல்’ என அடியிடையும் ‘ஒடு’ அடியினிறுதியும் வந்தன கூன் (பதிற்.22.பழைய.ப.27) என்றும், பழையவுரையாசிரியர் சுட்டுகிறார்.

‘நின்போல்’ என்றது கூன் (பதிற்.69.பழைய.ப.114)

என்றும்,

‘நின்னாள்’ என்பது கூன் (பதிற்.90.பழைய.156)

என்றும், ‘கூன்’ இடம்பெற்றுள்ள பாடலையும் சொற்களையும் சுட்டிக் காட்டுகின்றார். இவை அனைத்தும் பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியரின் இலக்கணப் புலமையை நன்குணர்த்தும்.

### சொற்பொருள் தருதல்

உரையாசிரியர்களின் உரை மரபில் ஒன்றாகச் சொற்பொருள் விளக்கம் தருதல் என்ற முறை பின்பற்றப்பட்டு வருகின்றது. இம்முறையின் வாயிலாகவும் உரையாசிரியர்களின் தனித்தன்மை வெளிப்படும். இவை உரையாசிரியர்களின் நூற்புலமை, பல்துறை அறிவு, வாழ்க்கை அனுபவம் போன்றவற்றைச் சுட்டிக் காட்டுவதாக அமைகின்றது. ஒரு சொல்லுக்குப் பொருள் தருதல் என்பது உரையாசிரியர்களின் மிகச் சிறந்த உரை மரபாகும். இவ்வுரை மரபைப் பழைய உரையாசிரியரின் உரைகளிலும் காண இயலுகின்றது. பதிற்றுப்பத்துப் பழையவுரையில் காணப்படும் சொற்பொருள் தருதல் பின்வருமாறு அமைகின்றது.

ஒடுங்கீரோதி - சுருள் (பதிற்.14:பழைய.ப.9)

திற்றி -இறைச்சி (பதிற்.18.பழைய.ப.16)

வம்பு - கைச்சரடு (பதிற்.19.பழைய.ப.18)

எவ்வஞ் சூழாமை - உயிர்வருத்தஞ் சூழாமை (பதிற்.21.பழைய.ப.25)

வெறியுறுநுடக்கம் - இயல்பாக நுடங்கலன்றித் தெய்வமேறிய
விகாரத்தால் நுடங்குதல் (பதிற்.51.பழைய.ப.81)

கடாம் - மதில் கண்டுழிப் போர்வேட்கையாற் பிறக்கும் மதம்
(பதிற்.53.பழைய.ப.87)

குடைச்சூல் - சிலம்பு (பதிற்.57.பழைய.ப.93)

வெண்டோடு - பனந்தோடு (பதிற்.58.பழைய.ப.95)

பாண்டில் - தேர்பூணும் எருதுகள் (பதிற்.64.பழைய.ப.106)

வில்பயிலிறும்பு - படைநிலை (பதிற்.78.பழைய.ப.133)

அழைத்தல் - வருத்தத்தால் கதறுதல் (பதிற்.79.பழைய.ப.134)

பசும்பிடி - பச்சிலை (பதிற்.81.பழைய.ப.140)

சவட்டுதல் - உருவழித்தல் (பதிற்.84.பழைய.ப.144)

மட்டப்புகர்வு- மதுவாகிய உணவு (பதிற்.90.பழைய.ப.155)

மேலே இடம்பெற்றுள்ள சொற்களில் திற்றி என்பது அக்காலத்தில் இறைச்சியைக் குறிக்கப் பயன்பட்டிருக்கின்றது. ஆனால், இன்று நேர்ப்பொருளாக இறைச்சி என்றே அழைக்கப்படுகின்றது. வம்பு என்பதற்கு கைச்சரடு என்று பதிற்றுப்பத்து பொருள் கூறுகிறது. இச்சொல் இன்றைய மக்களிடத்தில் வீம்பு, வீண் பேச்சு என்னும் பொருளைக் குறிக்கின்றது. அழைத்தல் என்பதற்கு வருத்தத்தால் கதறுதல் என்று பதிற்றுப்பத்து சுட்டுகிறது. இன்று கூப்பிடல், ஒலித்தல் என்று பொருளில் பயன்பட்டு வருகின்றது. சவட்டுதல் என்ற சொல்லுக்கான பொருள் உருவழித்தல் என்பது இன்றளவும் அதே பொருளில் மக்களால் பயன்படுத்தப்படுகிறது. இவற்றை அறிந்துகொள்ளும் சான்றுகளாகப் பதிற்றுப்பத்துப் பழையவுரை அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

### பிறவுரையும் மறுப்புரையும்

பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் தாம் வாழ்ந்த காலத்திய பிற உரையாசிரியர்களின் உரையினைச் சுட்டி இருக்கின்றார். அவ்வுரைக்கு மறுப்பும் தெரிவிக்கின்றார். பொதுவாக, உரையாசிரியர் ஒருவர் ஒருநூலுக்கு உரையெழுத முற்படுகிறாரென்றால், அவர் தாம் வாழ்ந்த சமகால கட்டத்திலோ அல்லது அதற்கு முன்போ அந்நூலுக்கு எழுந்த கருத்துச் சொல்லாடல்களை அடிப்படையாக வைத்தே உரை வரைகின்றார். இவை எழுதப்பட்ட ஆவணங்களாகவோ அல்லது அக்காலகட்டத்தில் வாய்மொழியாகப் பேசப்பட்டு வந்தனவாகவோ இருக்கலாம். இவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் உரைகளில் தம் காலத்திய அரசியல், சமூகச் சார்புடைய உரைகளின் கருத்துக்களிலிருந்து ஒன்றுபட்டும் சில சமயங்களில் விலகியும் உரை வரைகின்றனர். இத்தகைய உரையாசிரியரின் ஒன்றுபடுதல் மற்றும் விலகும் தன்மை ஆகிய இரண்டும் பிரதியை மட்டும் மையமிட்டதாக அமையாமல், அவரின் கருத்தியல் நிலைப்பாட்டையும்

வெளிக்கொணர்வதாக அமைகின்றது. ஒரு நூலுக்கு உரையாசிரியர் ஓர் அர்த்தம் கூறுகிறார். ஆனால், அந்நூலுக்கு அந்த ஓர் அர்த்தம் மட்டுமே பொருத்தமுடையது என்று கொள்ள முடியாது. இதுபோல பல அர்த்தங்களும் அந்நூலுக்குச் சாத்தியமாக அமையும் என்பதில் ஐயமில்லை. ஒரு நூல் வாழும் காலத்தில் அந்நூலுக்காக உரை, ஒரு குறிப்பிட்ட காலக்கட்டம்தான் மக்களிடத்தில் பேசப்படும் என்பதை அறிந்தே இருந்தனர். இதன் காரணமாக, அந்நூலுக்கான வேறு உரையாசிரியர்களின் உரைகளை எடுத்துக்காட்டி 'என்று கூறுவாரும் உளர்', 'என்று உரைப்பாரும் உளர்' என்று கூறுகின்றனர். சங்க இலக்கியத்திற்குக் கிடைக்கக்கூடிய தொடக்ககால உரைகள் யாவும் ஏதோ ஒரு வகையில் தனக்கு முன்பு இருந்த உரைகளைச் சுட்டிக் காட்டுகின்றன. இவ்வாறு பிறருடைய உரைகளை மேற்கோள் காட்டும் உரையாசிரியர்கள் தன்னுடைய உரையை முதலில் கூறிவிட்டு, பிற உரையாசிரியர்களின் உரைகளைப் பின்னர் எடுத்துக் காட்டுகின்றனர். இதனைப் போன்றே பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியரும் தம் காலத்து வழக்கிலிருந்த பிற உரையாசிரியரின் உரையினை எடுத்துக்காட்டி விளக்கம் தருகின்றார்.

''நாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்'' (பதிற்.13:10-13)

என்னும் அடிகளுக்கான பழையவுரையில், ''கூற்றடூஉநின்ற யாக்கைபோல நாடுகவினழியவென மாறிக்கூட்டிக் கூற்றுவனாலே கொல்லப்படாநின்ற யாக்கை ஒருகாலைக் கொருகால் அழகழியுமாறுபோல நாடு அழகழியும்படியெனவுரைக்க'' (பதிற்.பழைய.ப.7) என விளக்கம் அளிக்கின்றார். அடுத்ததாக, ''இனி மாறாதே போலும்படியெனப் போலவென்பதனை வினையெச்ச நீர்மையாக்கிப் போல்கின்றது மேல் வருகின்ற பாக்கமாகவுரைப்பினு மமையும். இனிக் கூற்றுவனே அட்டு நின்ற யாக்கையை யுடையானொருவன் உளனாயினும் அவனைப் போல் நீ சிவந்தென்றுரைப்பாருமுளர்'' (பதிற்.13.பழைய.ப.6) என்னும் பிற உரையாசிரியரின் உரையும் இவ்அடிக்குப் பொருத்தமாக அமைவதைச் சுட்டிச் செல்கின்றார்.

''துஞ்சுமரக் குழாம் துவன்றி, புனிற்று மகள்'' (பதிற்.16:3)

என்ற அடி மதிற்கதவின் பின்புறத்தே பொருத்தப்பட்ட கணைய மரங்களைக் குறிக்கும். இதன் பழையவுரை, “துஞ்சு மரமென்றது மதிவாயிற்றூங்கும் கணைய மரங்களை; இனிக் கழுக் கோலாக நாட்டிய மரமென்பாருமுளர்” (பதிற்.பழைய.ப.14) என்று பிற உரையாசிரியரின் உரையினையும் சுட்டிச் செல்கின்றார்.

“செங்கள விருப்பொடு கூலம் முற்றிய” (பதிற்.19:5)

என்பதற்கான பழையவுரை, “கூலமுற்றியவென்பது பண்டகமாக முற்றியவென்றவாறு; இனி பலிக்குரிய மற்றைப் பண்டங்கள் குறைவறக் கூடின வென்பாருமுளர்” (பதிற்.19.பழைய.ப.18) என்கிறது. “கூலவகையினைச் சேர்ந்த சிவந்த நிறத்தினையுடைய தினையை”[7] என்று அ.ஆலிஸ் உரை கூறுகின்றார். “கூலம் முற்றிய - தானியமாக நிறைந்த; கூலம் - தானியம்”[8] என்று உ.வே.சா. தம் குறிப்புரையில் சுட்டுகின்றார். ஆனால் பழையவுரையாசிரியர் தானியங்கள் நிறைந்த என்ற பொருளில் பண்டக முற்றியவென்றவாறு என்கிறார். மேலும், பிற உரையாசிரியரின் உரையினையும் எடுத்துக்காட்டுகின்றார்.

பதிற்றுப்பத்தின் 32ஆம் பாடலில் வரும் “வசையுநர்” என்ற சொல்லுக்கு, “வசையுநர் - பகைவர்; வசையுநரென்றது பெயர்த்திரிசொல். இனிக் ககர வொற்றின்றி ‘வசையுநர் கறுத்த’ என்பது பாடமாயின், அதனை வினையெச்ச வினைக்குறிப்புமுற்றுத் திரிசொல்லாக்கி வசை சொல்லுதலையுடையவராய் வெகுண்ட பகைவரென்று உரைப்பாருமுளர்” (பதிற்.32.பழைய.பக்.47-48) என்கிறார், பழையவுரையாசிரியர்.

“விருந்தின் வீழ்பிடியென்றது எண்ணுகின்ற மகளிர்க்கு விருந்தாகி அம்மகளிர் விரும்பிய பிடி யென்றவாறு. இனிக் காட்டியானைக்கு விருந்தாகிய அவ்வியானைகள் விரும்பும் பார்வைப் பிடியென்பாருமுளர்” (பதிற்.43.பழைய.ப.65) என்றும், “(சூ)சிலம்பும் தழையும் (சூ)புரிசைக்கண் தங்கினவென்றது ஈண்டுப் பொருவீருளரேல் நும் காலிற் கழலினையும் அரையிற் போர்க்குரிய உடையினையுமொழித்து இச்சிலம்பினையும் தழையினையும் அவரைப் பெண்பாலாக இகழ்ந்தவாரென்க. இனி அவற்றை அம்மதிலில் வாழும் வெற்றிமடந்தைக்கு அணியென்பாருமுளர்” (பதிற்.53.பழைய.ப.87) என்றும் உரை கூறுகிறார்.

“(ரு)ஒள்ளழல் (அ)மடங்கல் வண்ணம் கொண்டவெனக்கூட்டி, ஒள்ளழலானது மடங்கலாகிய அழலின் வண்ணத்தைக் கொள்கைக்குக் காரணமாய் நின்றவெனவுரைக்க. இனி ஞாயிறு பலவாதலை அவன் பகைவர் நாட்டில் உற்பாதமாகத் தோன்றும் ஆதித்தர் பலராக்கி மடங்கலென்றதனைக் கூற்றமாக்கி, சுடர் திகழ்பு என்றதனைத் திகழவெனத் திரித்து, ஒள்ளழலானது, ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ மடங்கல் வண்ணங் கொண்ட வேந்தேயென உரைப்பாருமுளர்” (பதிற்.62.பழைய.ப.102) என்று பிற உரையாசிரியர் கூறிய விளக்கங்களையும் தருகின்றார்.

பழையவுரையாசிரியர் சில உரைகளில் பிறவாறும் உரைப்பாரும் உளர் என்று கூறிவிட்டு அந்த பிறவாறும் என்பது எது என்பதைக் கூறாது விடுத்துள்ளார். இதனை, “(கசு)தானென்பதனைச் (கசு) சேரல் தானென் கூட்டித் தரவுண்ட வென்பதனை வரையாது கொடுத்தற் பொருட்டு உண்டவென வுரைக்க. இனி இதற்குப் பிறவாறு உரைப்பாருமுளர்” (பதிற்.40.பழைய.ப.58) என்பதும் “சென்னியர் பெருமானைத் தமக்கென வேண்டுதலின் மாறாயிற்று. இனி பிறவாறு மாறி முடிப்பாருமுளர்” (பதிற்.85.பழைய.ப.147) என்பதும் நன்குணர்த்தும். இத்தகைய உரைப்போக்கால் பதிற்றுப்பத்துக்கு அமைந்த பழையவுரையாசிரியரின் உரைக்கு முன்பு உரை இருந்தமையை உய்த்துணர இயலும்.

### தொடர் விளக்கம் தருதல்

பழையவுரையாசிரியர் பதிற்றுப்பத்தின் சில அடிகளுக்கு உரையெழுதும் பொழுது தொடர்ச்சியான மிகத் தெளிவான விளக்கங்கள் தருகின்றார். இது இவரின் நுண்ணிய புலமைத் திறத்தினைக் காட்டுகின்றது.

“குடிபுறந்தருநரென்றது தம் கீழ்க்குடிகளாகிய வரிசையாளரைப் புறந்தரும் மேற்குடிகளாகிய காணியாளரை” (பதிற்.13.பழைய.ப.7) எனத் தம் காலத்திய சமூகப் பிரிவினையைப் பழையவுரையாசிரியர் உரையில் சுட்டிச் செல்கின்றார்.

“நிலநீர் விளிவிசும் பென்ற நான்கி
னளப்பரி யையே
நாள்கோ டிங்கண் ஞாயிறு கணையழ
லைந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை

போர்தலை மிகுத்த வீரைம் பதின்மரொடு'' (பதிற்.14:1-5)

என்ற அடிகளுக்கு, ''பூதங்கள் ஐந்தையு மெண்ணாது தீயை ஒழித்தது, மேல் விளக்கத்துக்கு உவமமாக எண்ணுகின்றவற்றோடு கூட்டவேண்டியென்பது. ஈண்டுக் கோளென்றது, விளக்கமில்லா இராகு கேதுவென்னும் இரண்டும் நீக்கி நின்ற ஏழினும் சிறப்புப் பற்றி வேறெண்ணப்பட்ட திங்கள் ஞாயிறென்னு மிரண்டும் நீக்கி நின்ற ஐந்தையுமென்பது. ஐந்தென்று தொகை கூறியது, நாள்கோளென்னு மவற்றைத் தொகைக் கூற்றின் ஒரோவொன்றாக்க வென்பது'' (பதிற்.பழைய.ப.8) என்று தொடர்ச்சியான விளக்கங்கள் கூறி உரை வரைகின்றார். இவ்வாறு உரை கூறுவது சில இடங்களில் மட்டுமே காணப்படுகின்றது. இதுவும் பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியரின் உரைமரபில் ஒன்றாக இடம்பெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

**இசை அறிவு**

பழைமையான சிறப்புமிக்க தமிழினத்தின் இசை மரபும் மிகவும் பழைமையுடையதாகும். உலத்தில் உள்ள அனைத்து உயிர்களையும் வயப்படுத்துவது என்ற பொருளில் 'இசை' என்று பெயரிட்ட தமிழர்களின் நுண்ணறிவு பெரிதும் வியக்கத்தக்கது. சங்கத் தமிழ் மக்கள் பலவிதமான பண்களைத் தங்களது இசை அறிவு நுட்பத்தால் உருவாக்கி, அவற்றை வாயால் பாடுவதுடன் இசைக்கருவிகளின் வாயிலாக இசைத்து மகிழ்ந்தனர். இதனைச் சங்கப் புலவர்கள் இயற்றிய பாடல்கள் நன்கு புலப்படுத்துகின்றன. இதற்குச் சங்க நூல்களுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளும் சான்றாக அமையும். பதிற்றுப்பத்தின் மூன்றாம்பத்தில்,

''மழியா விழவி னிழியாத் திவவின்'' (பதிற்.29:7)

என்னும் அடி இடம்பெற்றுள்ளது. இவ்அடிக்கான உரையில் பழையவுரையாசிரியர், ''திவவையுடைய யாழ் திவவெனப்பட்டது'' (பதிற்.பழைய.ப.38) என்று குறிப்பிடுவர். 'இழியாத் திவவின்' என்ற சொல்லுக்கான பொருளை, ''குற்றமற்ற திவவு யாழினையுடைய'' என்று கூறிவிட்டு, அதனை விளக்கியுரைக்கும் பகுதியில், ''திவவையுடைய யாழ் திவவெனப்பட்டது; ஆகுபெயர். பழையவுரைகாரரும் இவ்வாறே கூறுவர். யாழிற்குஇழிவு செயற்பாட்டிலும் இசை நயத்திலும் குற்றமுடைமையாதலின், குற்றமில்லாத யாழை, 'இழியாத் திவவு' என்றார்''[9] என விளக்கி உரைக்கின்றார்,

ஔவை சு.துரைசாமிப்பிள்ளை. ‘‘சுருதி இறங்காத நரம்புக் கட்டுக்களோடு கூடிய யாழினையுடைய’’[10] என்று அ.ஆலிஸ் உரை கூறுகின்றார். யாழ் என்னும் இசைக்கருவியின் சுருதி குறைவுபடாமல் இருக்க வேண்டுமானால், அதில் கட்டப்பட்டுள்ள நரம்புகள் குற்றமற்ற தன்மையுடையதாக இருக்க வேண்டும். திவவு என்னும் நரம்பு துவக்கும் வார்கட்டு யாழின் முக்கியமான பகுதி ஆகும். எனவே திவவு என்பது சிறந்த யாழுக்கு ஆகி வந்ததால் பழையவுரையாசிரியர், ‘திவவையுடைய யாழ் திவவெனப்பட்டது’ என்று கூறுகிறார்.

பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பத்தின் இருபத்தியொன்றாம் அடி, ‘‘ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரற்’’ (பதிற்.43) என்று இடம்பெற்றுள்ளது. இந்த அடிக்கான பழையவுரை, ‘‘ஆடு சிறையறுத்த நரம்பென்றது கின்னரமென்னும் புள்ளின் இசையெழுகின்ற சிறகினைத் தோற்பித்த யாழ்நரம்பென்றவாறு’ இனிச் சிறையென்பதை அந்நரம்பின் ஒலியெழாமற் சிறைப்படுத்தி நிற்கும் அதன் குற்றமென்பாருமுளர்’’ (பதிற்.பழைய.ப.65) என அமைகின்றது. இதன் பொருளை, ‘‘ஆடுகின்ற சிறையையுடைய கின்னரப் பறவையை இசையால் வென்ற யாழ் நரம்பின் இசையுடன் ஒன்றாய் இயைந்து செல்லும் இனிய குரல்’’[11] என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை சுட்டுகிறார். கின்னரம் என்பது ஒருவகையான பறவை. இது மிகச்சிறந்த இசையை எழுப்பக் கூடியது. அத்தகைய கின்னரப் பறவையினையே மயங்கச் செய்யும் வகையில் யாழ் நரம்பின் இசை எழுப்பப்பட்டது என்பதை இவ்வுரைகள் எடுத்துரைக்கும். அதே பாடலில்,

‘‘தாங்காது புகழ்ந்த தூங்குகொளை முழவின்’’ (பதிற்.43:30)

என்று இடம்பெற்றுள்ளது. இதன் பழையவுரை, ‘‘தூங்கு கொளை முழவென்றது மந்த கதியையுடைய ஆடற்கேற்ற முழவு’’ (பதிற்.பழைய.ப.65) என்பதாகும். இதற்கான ஔவை சு.துரைசாமிப்பிள்ளை தரும் விளக்கம், ‘‘தூங்கலோசைத்தாகிய பாட்டிற்கு ஏற்ப முழங்கும் முழவினையும்’’[12] என்று அமைகின்றது. இதிலிருந்து பழையவுரையாசிரியரின் உரை ஒரு செய்தியை இயல்பாகவும் நுட்பமாகவும் மற்றும் சுருக்கமாகவும் உரைப்பதில் தனித்தன்மை மிக்கதாகத் திகழ்வது விளங்கும்.

**வேறுபாடம் கூறி வேறு உரை கூறுதல்**

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பல்வேறு பாடல்களில் ஆங்காங்கே பாட வேறுபாடுகள் காணப்படுகின்றன. இத்தகைய பாடவேறுபாடுகளைப் புறக்கணிக்காமல் அதற்கும் முக்கியத்துவம் கொடுத்து உரை கூறுகின்றனர், பழையவுரையாசிரியர்கள். இவர்கள் பாடலுக்கான மூலபாடம் எது என முடிவு செய்ய இயலாத சூழலில் இரண்டிற்கும் உரை கூறுகின்றனர். இதனை ஒத்ததாகவே, பதிற்றுப்பத்தின் பழையவுரையாசிரியரும் மூலபாடத்தில் வேறுபாடுகள் காணப்படின், அதற்கும் சேர்த்து உரை கூறுகின்றார். இது பழையவுரையாசிரியரின் உரைமரபில் குறிப்பிடத்தக்கதாக அமைகின்றது. பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து இமயவரம்பன் தம்பி நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர் கண்ணனார் பாடியதாகும். இப்பத்தின் 6 ஆம் பாடலில் வரும்,

“கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி” (பதிற்.16:1)

என்ற அடிக்கு, “கோடுறழ்ந்து எடுத்த கொடுங்கணிஞ்சியென்றது மலையுள்ள விடங்களிலே அம்மலைதானே மதிலாகவும் மலையில்லாத இடங்களில் மதிலே அரணாகவும் இவ்வாறு மலையொடு மாறாடவெடுத்த வளைந்த இடத்தையுடைய புறமதிலென்றவாறு” என்று உரை கூறிவிட்டு, ‘கோடுறழ்ந் தெடுத்த’ என்ற பாடம் ‘கோடுபுரந்தெடுத்த’ என வேறுபாடமாக அமைந்தால் அப்பாடத்திற்குத் தகுந்தவாறு, “‘கோடுபுரந்தெடுத்த’ என்பது பாடமாயின் மதிலில்லாத இடங்களை மலை காவலாய்ப் புரக்கவெடுத்த வென்க” (பதிற்.பழைய.ப.13)என்று எழுதுகிறார்.

“குய்யிடு தோறு மானா தார்ப்பக்
கடலொலி கொண்டு செழுநகர் நடுவ
ணடுமை யெழுந்த வடுநெய் யாவுதி” (பதிற்.21:11-13)

என்று வரும் அடிகளுக்கு, “(கஉ)கடலொலி கொண்டு (கக)ஆர்ப்பவெனக் கூட்டி, ஆர்ப்ப (கங) எழுந்தவென முடிக்க; இனி, ‘கடலொலி கொண்ட’ என்பது பாடமாயின், கடலொலி கொண்ட நகரென்க”(பதிற்.பழைய.ப.25) என்று வேறுரை எழுதுகிறார்.

பதிற்றுப்பத்தின் 32ஆம் பாடலில் இடம்பெற்றுள்ள “வசையுநர் – பகைவர்; வசையுநரென்றது பெயர்த்திரிசொல். இனிக் ககர வொற்றின்றி ‘வசையுநர்கறுத்த’ என்பது பாடமாயின், அதனை வினையெச்ச வினைக் குறிப்புமுற்றுத் திரிசொல்லாக்கி வசை சொல்லுதலையுடையவராய் வெகுண்ட பகைவரென்று

உரைப்பாருமுளர்'' (பதிற்.பழைய.பக்.47-48) என இரண்டு வகையான சொல்லுக்கும் பாடம் கூறுகின்றார்.

''நின்போ, லசைவில் கொள்கைய ராகலி னசையா
தாண்டோர் மன்றவிம் மண்கெழு ஞால'' (பதிற்.69:10-11)

என்ற அடியின் வேறுபாடமாக, '''ஆண்டோரசையாது' என்பது பாடமாக்கி அதற்கேற்ப உரைப்பாருமுளர்'' (பதிற்.பழைய.ப.116) எனப் பாடலில் இடம்பெற்றுள்ள வேறுபாடத்திற்கும் சேர்த்தே உரை எழுதுகின்றார். இது பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியரின் உரைப்புலமைக்குச் சான்றாக அமையும்.

**சொல் வருவித்துப் பொருள் கூறுதல்**

பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் தம் உரையில் சொல் வருவித்துப் பொருள்கூறும் முறையினைச் சுட்டியிருக்கின்றார். இவர் பாடலில் உள்ள சொற்களை முன்பின்னாகக் கூட்டியும், அதற்கு இணையான சமகாலத்தில் உள்ள சொற்களைக் கொண்டும் பொருள் கூறிச் செல்கின்றார். சில பாடல்களுக்கு விரிவான உரையும் எழுதுகின்றார். பதிற்றுப்பத்தின் அரிதான சில பாடல்களுக்கு மட்டும் சொல் வருவித்துப் பொருள் கூறும் மரபினை உரையிடையே கையாண்டுள்ளார். பழையவுரையாசிரியர் சொல் வருவித்துப் பொருள் கூறும் பொழுது 'வருவிக்க' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார்.

''எவன்பல கழியுமோ பெரும பன்னாட்'' (பதிற்.50:22)

என்ற அடிக்கு, ''நாள்பல எவன் கழியுமோவென நாளென்பது வருவிக்க'' (பதிற்.பழைய.ப.77) என உரை வரைந்துள்ளார். இப்பாடல் அடியில் வரும் 'எவன் கழியுமோ' என்னும் பொருளையும், 'பல' என்னும் சொல் நாட்கள் பலவற்றையும் குறித்து வருகின்றது. எனவே, பழையவுரையாசிரியர் 'நாள்' என்பதை வருவித்துப் பொருள் கொள்ள வேண்டும் என்பதை அறிவுறுத்திச் செல்கின்றார்.

''கொல்படை தெரிய வெல்கொடி நுடங்க'' (பதிற்.67:5)

என்ற அடியின் பழையவுரை, ''சொட்டையாளர் படை தெரியவென ஒருசொல் வருவிக்க'' (பதிற்.பழைய.ப.111) என்று அமைந்துள்ளது. இங்கே படை என்பது

பொதுப்பெயராகச் சுட்டப்பெற்றுள்ளது. ஆகவே, ‘படை’ எனும் சொல் இவ்விடத்தில் எப்படை குறித்து வருகின்றது என்று சுட்டிக் காட்டவே, சொட்டையாளர் என்ற சொல்லைப் பயன்படுத்தி இருக்கின்றார். பழையவுரையாசிரியர் குறிப்பிடும் சொட்டையாளர் என்ற சொல்லுக்கு, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை ‘‘ஒருவகைப் படைக்கருவி’’[13] என்று அடிக்குறிப்புப் பகுதியில் பொருள் கூறுகின்றார்.

‘‘சான்றோ ருரைப்பவுந் தெளிகுவர் கொல்லென
ஆங்குமதி மருளக் காண்குவல்’’ (பதிற்.73:15-16)

என்ற முதல் அடியின் பொருள் ‘பிறராகிய சான்றோரைக் கொண்டு தெரிவிப்பின் அவர் தெளிவரென முயன்ற வழியும்’ என அமைகின்றது. இதற்கான பழையவுரை, ‘‘‘சான்றோர் ……….கொல்லென’ என்றதன்பின், கருதினென ஒருசொல் வருவித்து அதனைக் காண்குவலென்னும் வினையொடு முடிக்க’’ (பதிற்.பழைய.ப.125) என்று உரை வரையப்பெற்றுள்ளது. இதில் குறிப்பிட்டுள்ள முதல் அடியின் பொருளுக்குப் பின்பு கருதினென என்ற சொல்லை வருவித்து, அதனைக் காண்குவலென்னும் சொல்லொடு முடிக்க வேண்டும் என்கிறார், பழையவுரையாசிரியர். அவர் பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்குப் பொருள் முடிபு வினைமுடிபு காண்பதற்கு, ஒரு சொல்லை வருவித்துப் பொருள்கூறும் முறையினைப் பின்பற்றி இருக்கின்றார். இது பழையவுரையாசிரியரின் உரை மரபில் மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

**மாறிக் கூட்டுதல்**

மாறிக் கூட்டுதல் என்பது பழையவுரையாசிரியரின் உரை மரபில் இன்றியமையாததாக அமைகின்றது. இது தொல்காப்பியத்தில் ‘மாட்டு’ என்றும் அழைக்கப்படுகிறது. இதன்பொருளை, ‘‘மாட்டென்பது பல்வேறு பரப்பிற்றாயினும் அன்றாயினும் நின்றதனொடு வந்ததனை ஒரு தொடராகக் கூட்டி முடித்துக் கொள்ளச் செய்தல். மாட்டுதலாவது, தனித்து நிற்பதனைக் கொண்டுவந்து கூட்டி முடித்தல் என்று பொருள்படும்’’[14] என்பர் ந.சுப்புரெட்டியார்.

‘‘அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்

மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்’’[15]

என்று தொல்காப்பியர் ‘மாட்டு’ என்பதற்கு இலக்கணம் வகுத்துள்ளார். ஒரு செய்யுளில் கூறப்படும் பொருள் அண்மைக்கண் கிடப்பினும் அல்லது சேய்மைக்கண் கிடப்பினும் ஒரு தொடர்புபட அமைந்து பொருள் முடியும்படி கொண்டுவந்து இயைத்துணர்த்துவது ‘மாட்டு’ என்னும் உறுப்பு ஆகும். ‘‘வெய்துறவறியாது நந்தி வாழ்க்கையினையும் என்று மொழிந்து அடங்கிய கொள்கையினையும் நிரையமொரீஇய வேட்கையினையுமுடைய புரையோர் செய்தன மேவலர்ந்த சுற்றத்தொடு பதிபிழைப் பறியாது துய்த்தலெய்தி மேயினருறையும் நாடென மாறிக் கூட்டியுரைக்க’’ (பதிற்.15.பழைய.ப.12) என்றும், ‘‘வாய்பரந்து மிகீஇயர் உருத்துக் கரையிழி தரும் நனந்தலைப் பேர்யாற்று மலிர்நிரைச் செந்நீரென மாறிக் கூட்டுக’’ (பதிற்.28.பழைய.ப.37) என்றும், ‘‘கூந்தலினையும் கற்பினையும் நுதலினையும் உந்தியினையுமுடைய தொன்னகர்ச் செல்வி யெனமாறிக் கூட்டுக’’ (பதிற்.31.பழைய.ப.46) என்று சொற்களை மாறிக் கூட்டியுரைக்கின்றார். இது பழையவுரையாசிரியரின் அடிகளை மாற்றிக் கூட்டுதல் என்னும் உரை மரபினைப் புலப்படுத்தும்.

**தொன்மம்**

புராணம் என்பதற்கு இணையாக ‘மித்’(Myth) என்ற ஆங்கிலச்சொல் பயன்படுத்தப்பெறுகின்றது. இதனை ‘தொன்மம்’ என்ற சொல்லால் இக்கால அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். தொல்காப்பியர்,

‘‘தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே’’[16]

என்பர். ‘‘தொன்மம் அல்லது புராணம் என்பது நெடுநாளாக வழங்கி வரும், எல்லோருக்கும் தெரிந்த பழங்கதையைக் குறிக்கும். ஆங்கிலத்தில் மித் எனப்படுவது கதையமைப்பை (plot) முன்பு குறித்தது. இச்சொல் இலக்கியத்திற்கும் சமயத்திற்கும் பொதுவானதாகும். ‘வரன்முறைக்கு எதிரானது’ என்றும் ‘உள்ளுணர்வால் உருவாவது’ என்றும் இதனை விளக்குவர்’’[17] என்பர் தமிழண்ணல்.

‘‘சூருடை முழுமுத றடிந்த’’ (பதிற்.11:5)

என்ற அடிக்கு, “சூருடை முழுமுதலென்றது சூரவன்மாத் தனக்கு அரணாகவுடைய மாவின் முதலென்றவாறு. இனிச் சூரவன்மாத் தான் ஓர்மாவாய் நின்றானென்று புராணமுண்டாயிற் சூரனாதற் றன்மையுடைய மாவின் முதலென்றவாறாம்'' (பதிற்.பழைய.ப.114) என்று பழையவுரையாசிரியர் உரை கூறுகிறார்.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடைபெற்ற போரில் சூரபதுமன் கடல் நடுவே ஒரு மாமரமாய் நின்றான். அவனை முருகப்பெருமான் இரண்டாகப் பிளந்து ஒருபுறத்தை மயிலாகவும், ஒருபுறத்தை சேவலாகவும் மாற்றினான். மயிலைத் தன் வாகனமாகவும், சேவலைத் தன் கொடியின் சின்னமாகவும் ஆக்கிக் கொண்டான். இதுவே புராணச் செய்தி. இந்நிகழ்வைப் பற்றிக் குறிப்பிடும் பெ.மாதையன், ‘‘பதிற்றுப்பத்தில் முருகன் கடலுட் புகுந்து அங்கு அவுணர்களால் சூழப்பட்டிருந்த சூரனை வேருடன் வெட்டிச் சாய்த்தான் எனும் செய்தி கூறப்பட்டுள்ளது. இதேபோல் பெரும்பாணாற்றுப்படையிலும் சூரன் கடலுள் இருந்த செய்தி வருகின்றது. சூரன் மாமரமாய் நின்றான் என்பது வெளிப்படையாய்க் கூறப்படவில்லை. பதிற்றுப்பத்தில் ‘சூருடை முழுமுதற் தடிந்த’ எனும் குறிப்பு வருகின்றது. இதற்கு உரையாசிரியர்கள் ‘மாமரத்தை வேருடன் வெட்டிக் குறைத்த’ என உரை எழுதியுள்ளனர். முழுமுதல் என்பது மரத்தின் அடிப்பகுதி, அடிமரம் எனும் பொருளினது என்பதால் இப்பாடலில் வரும் முழுமுதல் என்பதற்கு வேருடன்கூடிய மாமரம் என்பது பொருளாய்க் கொள்ளப்பட்டது''[18] என்று ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

‘‘கடவு ளயிரையி னிலைஇக்'' (பதிற்.79:18)

என்ற அடிக்கான பழையவுரை, ‘‘கடவுளென்றது அவனால் இவ்வாறு வழிபடும் கொற்றவையை. அயிரை - அக்கொற்றவை உறைவதொரு மலை'' (பதிற்.பழைய.ப.134) என அமைகின்றது. ‘‘அயிரை, சிராப்பள்ளிக்கு மேற்கில் காவிரியின் தெற்கிலுள்ளதொரு குன்று; இதனை இக்காலத்தவர் ஐவர்மலையென்று வழங்குமென்பாருமுளர். பழையவுரைகாரர், ‘அது கொற்றவை யுறைவதொருமலை’ யென்பர். அயிரை மலை நின்று நிலைபெறுவதுபோல நின் புகழ்களும் நிலைபெற்று விளங்குக என்பார். ‘அயிரையின் நிலைஇக் கேடிலவாக நின்புகழே’ யென்றார்''[19] என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை விளக்கம் அளிக்கின்றார். கொற்றவை நின்று நிலைபெறக்கூடிய மலையைப்போல என்று கடவுளோடு மன்னனது புகழும்

நிலைபெற்றிருக்க வேண்டும் என ஒரு தொன்மக் கடவுளோடு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

"உருகெழு மரபின் அயிரை பரைஇ"(பதிற்.88:12)

என்ற அடிக்கு, "(உச)தெய்வத்துக் கூட்டமுன்னிய (உரு) யாறென்றது அத்தெய்வம் கூடியுறைதலையுடைய அயிரை மலையைத் தலையாகக் கொண்டு ஒழுகப்பட்ட யாறென்றவாறு. தெய்வம் கூடியுறைதலையுடைய அயிரை தெய்வத்துக் கூட்டமெனப்பட்டது" (பதிற்.பழைய.ப.151) என்று பழையவுரையாசிரியர் சுட்டுகிறார். தெய்வமாகிய கொற்றவை கூடியிருக்கும் இடம் அயிரை மலை ஆகும். சேர மன்னர்கள் போருக்குச் செல்லும்போது, வெற்றி உண்டாக வேண்டி அயிரை மலையிலுள்ள கொற்றவையை வணங்கிச் செல்வர். இத்தகைய நிகழ்வுகள் பழையவுரையில் தொன்மக் கருத்துக்களை எடுத்துரைப்பனவாக உள்ளன. இது பழையவுரையாசிரியரின் உரைப்புலமையை நன்குணர்த்தும்.

**சொல் வழக்காறு**

பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் உரையிடையே தம் காலத்திய வழக்காற்றுச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். இது பொதுவாக அனைத்து உரையாசிரியர்களிடமும் காணப்படக் கூடிய இயல்பு ஆகும். இருப்பினும் இவ்வுரை மரபினை இடைக்காலத்திலேயே பழையவுரையாசிரியர் சுட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

"கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅ" (பதிற்.31:8)

என்ற அடிக்கு, "கமழ்குரற்றுழாயென்றது நாறுகின்ற பூங்கொத்துக்களையுடைய துழாயென்றவாறு" (பதிற்.பழைய.ப.45) என்றும்,

"ஆண்கட னிறுத்தநின் பூண்கிளர் வியன்மார்பு" (பதிற்.31:14)

என்ற அடிக்கு, "ஆண்கடனிறுத்தவென்றது ஆண்மக்களாயுள்ளார் தங்கீழ் வாழ்வாரைக் காத்தற் பொருட்டு அவர்க்கு அவர் செய்யும் கடன்களெல்லாம் செய்து முடித்த வென்றவாறு" (பதிற்.பழைய.ப.46) என்றும் பழையவுரையாசிரியர் தம் உரையிடையே சொல் வழக்காற்றைப் பயன்படுத்தி இருக்கின்றார். இதுபோன்ற உரை மரபுகளால் பழையவுரையாசிரியரின் உரைப்புலமை நன்கு தெளிவாகும்.

## தொகுப்புரை

பதிற்றுப்பத்துப் பாடல்களில் எழுவாய் ஓரிடத்தில் அமைந்துள்ளது. அதன் பயனிலைகள் பாடல் முழுவதும் வெவ்வேறு அடிகளில் அமைந்துள்ளன. அவற்றைக் கொண்டுகூட்டி சொல்முடிவு பொருள் முடிபு கூறி முடித்துக் காட்டுகிறார், பழையவுரையாசிரியர். இந்நூலின் ஒவ்வொரு பாடல்களிலும் அப்பாடல்களுக்கான முக்கியக்கரு தலைப்பாகக் காணப்படுகின்றது. அத்தலைப்புக்களை விளக்குவதில் பழையவுரையாசிரியரின் பங்கு பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைகின்றது.

திருக்குறள், புறநானூறு, மதுரைக்காஞ்சி போன்ற நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுகின்றார் பழையவுரையாசிரியர். அவர் தாம் உரைகூறும் பாடலுடன் பொருந்தக்கூடிய செய்தி பிற பாடல்களில் காணப்பட்டால் அவற்றையும் அப்பகுதியில் எடுத்துக்கூறி விளக்குகின்றார். பதிற்றுப்பத்துப் பாடல்களில் அவற்றின் துறை, வண்ணம், தூக்கு போன்றவை காணப்படுகின்றன. இத்தகைய துறை, வண்ணம், தூக்கு ஆகியவை பாடல்களில் பொருந்தி வருவதைப் பழையவுரையாசிரியர் சுட்டிக் காட்டுகின்றார்.

பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பாடலிலும் அதன் பயன் சுட்டப்பெறுகின்றது. மன்னனின் போர்ச்சிறப்பு, நாடுகாத்தற் சிறப்பு, செல்வச் சிறப்பு, அவனது குணங்களின் சிறப்பு போன்றவை சுட்டப்பெறுகின்றன. உரையின் இடையிடையே இலக்கணம் கூறி விளக்குதலும், தனக்கு அரிய சொற்களாகத் தோன்றுபவைகளுக்குச் சொற்பொருள் விளக்கம் தந்து விளக்கியுள்ளமையும் குறிப்பிடத்தக்கதாகும்.

'என்று உரைப்பாரும் உளர்', 'என்று கூறுவாரும் உளர்' போன்ற பிற உரையாசிரியரின் உரைகளைச் சுட்டிக் காட்டுகின்றார், பழையவுரையாசிரியர். சில இடங்களில் பிற உரையாசிரியர்களின் உரையினை மறுத்தும் உரை கூறுவதையும் இயல்பாகக் கொண்டுள்ளார்.

பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் சில பாடல்களுக்குத் தொடர் விளக்கம் தருகின்றார். இசை தொடர்பாகப் பாடல்களில் இடம்பெறும் சொற்களுக்குத்

தரும் விளக்கங்கள் அவரின் இசைப்புலமையை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

பதிற்றுப்பத்தின் பாடல்களில் பாட வேறுபாடு காணப்படும் பகுதிக்கு ஏற்ப பழையவுரையாசிரியர் வேறுரை எழுதுகிறார். பிற உரைகளை மறுத்தும் உரை கூறுகிறார். பழையவுரையாசிரியர் உரை கூறிச் செல்லும்பொழுது தேவையான இடங்களில் பிற சொற்களை வருவித்துரைப்பது இயல்பாக அமைந்துள்ளது. தொன்மம் தொடர்பான பாடல்கள் இடம்பெறும் இடங்களில் அதனையும் விளக்கிச் செல்கின்றார். இவர் சில இடங்களில் வழக்காற்றியல் சொற்களைப் பயன்படுத்தி உரை கூறுவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**சான்றெண் விளக்கம்**

1. வ.சுப.மாணிக்கம், சங்கநெறி, ப.125
2. ச.வே.சுப்பிரமணியன் (உ.ஆ), தொல்காப்பியம் தெளிவுரை, சொல்லதிகாரம் எச்சவியல், நூ.8
3. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.43
4. உ.வே.சாமிநாதையர் (ப.ஆ), தமிழ்ப் பேரகராதி, ப.711
5. கோ.இளவழகன் (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், செய்.நூ.48
6. மேலது, நூ.49
7. அ.ஆலிஸ் (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், ப.40
8. உ.வே.சாமிநாதையர் (ப.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும், ப.31
9. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும், ப.119

10. அ.ஆலிஸ் (உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.84

11. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.198

12. மேலது, ப.201

13. மேலது, ப.317

14. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.426

15. தொல்.பொருள்.செய்.நூ.210

16. மேலது, நூ.235

17. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு - இலக்கியக்கொள்கைகள், ப.232

18. பெ.மாதையன், வரலாற்று நோக்கில் சங்க இலக்கியப் பழமரபுக்கதைகளும் தொன்மங்களும், ப.80

19. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.378

# இயல் - நான்கு

## ஐங்குறுநூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்

ஐங்குறுநூறு 1903-ஆம் ஆண்டு உ.வே.சாமிநாதையரால் முதன்முதலில் பதிப்பிக்கப்பெற்றது. இரண்டாவது பதிப்பை 1920-ல் பதிப்பித்தார். 1944ஆம் ஆண்டு உ.வே.சா.வின் குமாரர் கலியாணசுந்தரையர் தனது தந்தை பரிசோதித்துத் தந்த குறிப்புரைகளுடன் மூன்றாம் பதிப்பை வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து 1949ஆம் ஆண்டு ஐங்குறுநூற்றின் நான்காவது பதிப்பும் வெளிவந்தது. 1944, 1949 ஆகிய இவ்விரண்டு பதிப்புகளும் பழையவுரையுடன் உ.வே.சா.வின் குறிப்புரைகளையும் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஐங்குறுநூற்றின் 469-ஆம் பாடலுக்கு மேலுள்ளவற்றுக்குப் பழையவுரை காணப்பெறவில்லை. இந்நூலின் இடையிடையே 197 பாடல்களுக்கு மட்டுமே கிடைக்கப்பெறும் பழையவுரை பதந்தோறும் விளக்கம் அளிப்பதாக இல்லை. இருப்பினும் அகத்திணை நூல்களுக்கே உரிய உள்ளுறை உவமம், இறைச்சி, சொல்முடிபு, பொருள்முடிபு போன்றவற்றையும் விளக்கிச் செல்கின்றது. உரைகளின்

10. அ.ஆலிஸ் (உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.84

11. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.198

12. மேலது, ப.201

13. மேலது, ப.317

14. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.426

15. தொல்.பொருள்.செய்.நூ.210

16. மேலது, நூ.235

17. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு - இலக்கியக்கொள்கைகள், ப.232

18. பெ.மாதையன், வரலாற்று நோக்கில் சங்க இலக்கியப் பழமரபுக்கதைகளும் தொன்மங்களும், ப.80

19. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.378

# இயல் - நான்கு

## ஐங்குறுநூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்

ஐங்குறுநூறு 1903-ஆம் ஆண்டு உ.வே.சாமிநாதையரால் முதன்முதலில் பதிப்பிக்கப்பெற்றது. இரண்டாவது பதிப்பை 1920-ல் பதிப்பித்தார். 1944ஆம் ஆண்டு உ.வே.சா.வின் குமாரர் கலியாணசுந்தரையர் தனது தந்தை பரிசோதித்துத் தந்த குறிப்புரைகளுடன் மூன்றாம் பதிப்பை வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து 1949ஆம் ஆண்டு ஐங்குறுநூற்றின் நான்காவது பதிப்பும் வெளிவந்தது. 1944, 1949 ஆகிய இவ்விரண்டு பதிப்புகளும் பழையவுரையுடன் உ.வே.சா.வின் குறிப்புரைகளையும் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஐங்குறுநூற்றின் 469-ஆம் பாடலுக்கு மேலுள்ளவற்றுக்குப் பழையவுரை காணப்பெறவில்லை. இந்நூலின் இடையிடையே 197 பாடல்களுக்கு மட்டுமே கிடைக்கப்பெறும் பழையவுரை பதந்தோறும் விளக்கம் அளிப்பதாக இல்லை. இருப்பினும் அகத்திணை நூல்களுக்கே உரிய உள்ளுறை உவமம், இறைச்சி, சொல்முடிபு, பொருள்முடிபு போன்றவற்றையும் விளக்கிச் செல்கின்றது. உரைகளின்

இடையிடையே இலக்கணக்குறிப்பை இட்டுச் செல்கின்றது. ஐங்குறுநூற்றின் பழையவுரை பாடலின் பொருளைத் தெரிந்து கொள்வதற்கு மிகச்சிறந்த கருவியாக உள்ளது. இந்நூலைப்போலவே, இதற்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையும் சிறந்த நடையையும் பொருள் நுணுக்கத்தையும் பெற்றுள்ளது. பழையவுரை இல்லையாயின் ஐங்குறுநூற்றுப் பாடல்களிலுள்ள உள்ளுறை உவமம் முதலியனவும் அதன் மற்ற அருமைபெருமைகளும் தெரியாமலே போயிருக்கும். ஐங்குறுநூற்றுப் பதிப்பால் சங்கப் பாக்களின் சிறப்பையும் அவற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையின் சிறப்பையும் அறிந்து கொள்ள இயலுகின்றது. அவ்வகையில் ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையின் போக்கையும் திறனையும் அறிந்து கொள்வதாக இவ்வியல் அமைகின்றது.

**ஐங்குறுநூற்றுப் பழையவுரை**

சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான ஐங்குறுநூற்றுக்கு இயற்றப்பட்டுள்ள பழையவுரை பற்றிப் பல்வேறு தமிழறிஞர்கள் கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர். ‘‘பழைய உரைகளுள் ஐங்குறுநூற்றுரை பதவுரை பொழிப்புரை கூறாமல், சில இடங்களில் திரிசொற்களின் பொருளைக்காட்டி, உள்ளுறை இறைச்சியை விளக்குவதைக் காணுகையில் பாடம் சொல்லும் அளவில் அமைந்ததிவ்வுரை என உணரலாம்’’[1] என்று கு.வெ.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார். தமிழ் இலக்கிய இலக்கணங்களின் திணை வைப்புமுறையானது ஒவ்வொரு நூல்களிலும் மாறிமாறி அமைகின்றது. அவ்வகையில் ஐங்குறுநூற்றின் திணை வைப்புமுறை மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என அமைந்துள்ளது. இந்நூலின் ஒவ்வொரு திணையிலும் பத்துப் பத்துக்கள் வீதம் நூறு பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றுள் முதற்பத்தான வேட்கைப் பத்து 8ஆம் பாடல் தவிர மற்ற அனைத்துப் பாடல்களுக்கும் பழைய உரை இடம்பெற்றுள்ளது. இரண்டாம் பத்தான வேழப்பத்தில் அனைத்துப் பாடல்களுக்கும் பழைய உரை உள்ளது. மூன்றாம் பத்தான கள்வன் பத்தில் 27, 28ஆம் பாடல்கள் தவிர மற்ற பாடல்களுக்குப் பழைய உரை காணப்படுகின்றது. நான்காவதாக அமைந்த தோழிக்குரைத்த பத்திற்குப் பழையவுரை இல்லை. ஐந்தாம் பத்தான புலவிப் பத்தில் 41, 43, 44, 45, 46, 47 ஆகிய ஆறு பாடல்களுக்கு மட்டும் பழையவுரை காணப்படுகின்றது. ஆறாவதாக அமைந்த தோழிக்குரைத்த பத்தில் 55, 56, 57, 58 ஆகிய நான்கு பாடல்களுக்கு மட்டும் பழையவுரை உள்ளது. ஏழாம் பத்தான கிழத்தி கூற்றுப்

பத்திற்கும் எட்டாம் பத்தான புனலாட்டுப் பத்திற்கும் பழையவுரை இல்லை. ஒன்பதாவதாக அமைந்த புலவி விராயப் பத்தில் 81, 82, 85, 86, 87, 88, 89 ஆகிய ஏழு பாடல்களுக்கும் பழையவுரை உள்ளது. பத்தாவதாக அமைந்த எருமைப் பத்தில் 93ஆம் பாடல் தவிர மற்ற அனைத்துப் பாடல்களுக்கும் பழையவுரை காணப்படுகின்றது.

நெய்தல் திணையின் முதற்பத்தான தாய்க்குரைத்த பத்தில் 101, 103, 104, 105, 106 ஆகிய ஐந்து பாடல்களுக்கு மட்டும் பழையவுரை காணப்படுகின்றது. இரண்டாவதாக அமைந்த தோழிக்குரைத்த பத்திற்கும் மூன்றாவதாக அமைந்த கிழவற்குரைத்த பத்திற்கும் பழையவுரை இல்லை. நான்காவது பத்தான பாணற்குரைத்த பத்தில் 137ஆம் பாடலுக்கு மட்டும் பழையவுரை காணப்படுகிறது. ஐந்தாவதாக அமைந்த ஞாழற் பத்தில் 141, 149ஆம் பாடல் தவிர மற்ற அனைத்துப் பாடல்களுக்கும் பழையவுரை காணப்படுகின்றது. ஆறாம் பத்தான வெள்ளைக் குருகுப் பத்திற்கும் ஏழாம் பத்தான சிறுவெண் காக்கைப் பத்திற்கும் அனைத்துப் பாடல்களுக்கும் பழையவுரை காணப்படுகின்றது. எட்டாவதாக அமைந்த தொண்டிப் பத்தில் 172, 174, 175 ஆகிய மூன்று பாடல்கள் தவிர மற்ற ஏழு பாடல்களுக்கும் பழையவுரை காணப்படுகின்றது. ஒன்பதாம் பத்தான நெய்தற் பத்தில் 182, 185 ஆகிய பாடல்கள் தவிர மற்ற எட்டுப் பாடல்களுக்கும் பழையவுரை உள்ளது. பத்தாவதாக அமைந்த வளைப் பத்தில் 192, 193, 195, 196, 198, 199 ஆகிய ஆறு பாடல்களுக்கும் பழையவுரை காணப்படுகின்றது.

குறிஞ்சித் திணையின் முதற்பத்தான அன்னாய்வாழிப் பத்தில் 208, 209, 210 ஆகிய மூன்று பாடல்களுக்கு மட்டுமே பழையவுரை உள்ளது. இரண்டாவதாக அமைந்த அன்னாய்வாழிப் பத்தில் 211ஆம் பாடல் தவிர மற்ற அனைத்துப் பாடல்களுக்கும் பழையவுரை காணப்படுகின்றது. மூன்றாவதாக அமைந்த அம்மவாழிப் பத்தில் 221, 228 ஆகிய இரண்டு பாடல்களுக்கு மட்டும் பழையவுரை உள்ளது. நான்காம் பத்தான தெய்யோப் பத்தில் 233, 238, 239 ஆகிய மூன்று பால்களுக்கான பழையவுரை மட்டும் காணப்படுகின்றது. ஐந்தாவதாக அமைந்த வெறிப்பத்தில் 242, 243, 245, 246, 248 ஆகிய ஐந்து பாடல்களுக்கு மட்டும் பழையவுரை உள்ளது. ஆறாம் பத்தான குன்றக்குறவன் பத்தில் 251, 252, 253, 260 ஆகிய பாடல்களுக்கு மட்டும் பழையவுரை இடம்பெற்றுள்ளது. ஏழாம் பத்தான கேழற் பத்திலும் எட்டாம் பத்தான குரக்குப் பத்திலும் அனைத்துப் பாடல்களுக்கும்

பழையவுரை காணப்படுகின்றது. ஒன்பதாம் பத்தான கிள்ளைப் பத்தில் 282, 283, 285, 286, 287, 290 ஆகிய ஆறு பாடல்களுக்கும் பழையவுரை உள்ளது. பத்தாவதாக அமைந்த மஞ்ஞைப் பத்தில் 291ஆம் பாடல் தவிர மற்ற அனைத்துப் பாடல்களுக்கும் பழையவுரை இடம்பெற்றுள்ளது.

பாலைத் திணையின் முதற்பத்தான செலவழுங்குவித்த பத்தில் 301, 304 ஆகிய பாடல்களுக்கு மட்டும் பழையவுரை உள்ளது. இரண்டாவதாக அமைந்த செலவுப் பத்தில் 313, 315 ஆகிய பாடல்களுக்கு மட்டும் பழையவுரை காணப்படுகிறது. மூன்றாம் பத்தான இடைச்சுரத்துப் பத்தில் 321, 327 ஆகிய பாடல்களுக்கு மட்டும் பழையவுரை உள்ளது. நான்காவதாக அமைந்த தலைவியிரங்கு பத்தில் 331, 334 ஆகிய பாடல்களுக்கு மட்டும் பழையவுரை இடம்பெற்றுள்ளது. ஐந்தாவதாக அமைந்த இளவேனிற் பத்திற்குப் பழையவுரை இல்லை. ஆறாம் பத்தான வரவுரைத்த பத்தில் 352, 355, 356, 357 ஆகிய நான்கு பாடல்களுக்கு மட்டும் பழையவுரை உள்ளது. ஏழாம் பத்தாக அமைந்த முன்னிலைப் பத்தில் 366, 367, 368, 369, 370 ஆகிய ஐந்து பாடல்களுக்கும் பழையவுரை காணப்படுகின்றது. எட்டாவதாக அமைந்த மகட்போக்கியவழித் தாயிரங்கிய பத்து 373ஆம் பாடலுக்கு மட்டும் பழையவுரையைப் பெற்றுள்ளது. ஒன்பதாம் பத்தான உடன்போக்கின்கண் இடைச்சுரத்துரைத்த பத்திற்கும் பத்தாம் பத்தான மறுதரவுப் பத்திற்கும் பழையவுரை இல்லை.

முல்லைத் திணையின் முதற்பத்தான செவிலி கூற்றுப் பத்திற்குப் பழையவுரை இல்லை. இரண்டாவதாக அமைந்த கிழவன் பருவம் பாராட்டும் பத்தில் 412 ஆம் பாடலுக்கு மட்டும் பழையவுரை இடம்பெற்றுள்ளது. மூன்றாம் பத்தான விரவுப் பத்து 421, 423 ஆகிய பாடல்களுக்கு மட்டும் பழையவுரையைப் பெற்றுள்ளது. நான்காவதாக அமைந்த புறவணிப் பத்திற்குப் பழையவுரை இல்லை. ஐந்தாம் பத்தான பாசறைப் பத்தில் 441ஆம் பாடலுக்கு மட்டும் பழையவுரை உள்ளது. ஆறாவதாக அமைந்த பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து 453, 455, 458 ஆகிய பாடல்களுக்கு மட்டும் பழையவுரையைக் கொண்டுள்ளது. ஏழாம் பத்தான தோழி வற்புறுத்த பத்தில் 461, 465, 467, 469 ஆகிய நான்கு பாடல்களுக்கும் பழையவுரை உள்ளது. எட்டாவதாக அமைந்த பாணன் பத்திற்குப் பழையவுரை இல்லை. ஒன்பதாவதாக அமைந்த தேர்வியங்கொண்ட பத்திற்கும் வரவுச் சிறப்புரைத்த பத்திற்கும் பழையவுரை இல்லை.

இவ்வாறு ஒவ்வொரு பத்திற்கும் பழையவுரைகள் அமைந்துள்ள பாடல்களின் எண்களும் பழையவுரை இல்லாத பாடல்களின் எண்களும், குறிப்பிடப்பட்டுள்ளன. ஐங்குறுநூற்றின் மொத்தப் பாடல்களின் தொகை, 500. இதில் 129, 130 ஆகிய எண்ணுடைய இரு பாடல்கள் வேறு எப்பிரதியிலும் கிடைக்கப்பெறவில்லை. ஆகையால் கிடைக்கப்பெற்ற பாடல்களின் எண்ணிக்கை, மொத்தம் 498 ஆகும். இவற்றிலும் 416, 490 ஆகிய பாடல்களின் சீர்கள் குறைந்துள்ளன. ஐங்குறுநூற்றின் 301 பாடல்களுக்கு உரையில்லை. மொத்தம் 197 பாடல்களுக்குக் கிடைக்கக்கூடிய உரையை கொண்டு இவ்வுரையின் தன்மை மதிப்பிடப்படுகிறது. ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெறும் பழைய உரையைப் பற்றி குறிப்பிடும் மு.அருணாச்சலம் “இவ்வுரை எழுதினோர் யார் என்பது தெரியவில்லை. கிடைக்கின்ற பகுதி இவ்வுரைகாரர் எழுதிவைத்திருந்த குறிப்புகள் மட்டும் போலும்; ஏனெனில் சில பாடல்களுக்கு உரை விரிவாய் எழுதியிருக்க, சில பாடல்களுக்கு ஒருசொல் உரை எழுதியிருக்கிறார்; பல பாடல்களுக்கு உரை எதுவும் எழுதவில்லை. இவர் உரையெழுதும் முறை ஒரு தனித்தன்மையுடையது. பெரும்பாலும் மூலத்துக்கு உரை எழுதுவதில்லை. தாம் உரை எழுதும் இடங்களிலெல்லாம் பாடலின் உள்ளுறை உவமத்தைத் தெளிவாக விளக்கி உரைக்கிறார்”[2] என்பர். இவற்றின் வாயிலாக ஐங்குறுநூற்றுப் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல்களின் எண்களும், பழையவுரையின் சிறப்பும் சுட்டப்பெறுகின்றது. பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல்களின் எண்களும் பழையவுரை இடம்பெறாத பாடல்களின் எண்களும் அட்டவணையில் பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

### உரைகளுக்கிடையேயான வேறுபட்ட தன்மை

ஐங்குறுநூற்றின் ஐந்நூறு பாடல்களில் பழையவுரையாசிரியரின் உரை 197 பாடல்களுக்கு மட்டுமே உள்ளது. இவற்றுள் சில பாடல்களுக்கான உரை விரிவாகவும், சில பாடல்களுக்கான உரை சுருக்கமாகவும், சில பாடல்களுக்கான உரை ஒரு வாக்கியத்தைக் கொண்டும் காணப்படுகின்றன. அவற்றை விரிவாக அமைந்த உரை, நடுநிலையான உரை, ஓரிரு வரிகளில் அமைந்த உரை,

வாக்கியத்தில் அமைந்த உரை, சிதைந்த உரை என ஐந்து வகையான நிலைகளில் பாகுபடுத்தி ஆராய இயலும்.

**விரிவான உரை**

இவ்வுரை ஏழு வரிகள் முதல் பத்து வரிகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. அவை முறையே 1, 6, 151, 275, 283 ஆகிய ஐந்து எண்களைக் கொண்ட பாடல்களின் உரை ஆகும்.

**நடுநிலையான உரை**

இவ்வுரை மூன்று முதல் ஆறு வரிகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. அவை, 2, 3, 4, 5, 9, 10, 12, 13, 14, 15, 17, 18, 19, 20, 22, 23, 24, 29, 30, 41, 43, 47, 56, 81, 85, 86, 87, 88, 91, 94, 96, 97, 98, 99, 100, 101, 105, 142, 143, 144, 147, 150, 150, 152, 154, 156, 157, 158, 159, 160, 162, 163, 164, 165, 166, 167, 169, 171, 177, 180, 183, 184, 187, 188, 189, 190, 192, 195, 198, 199, 208, 209, 210, 212, 214, 216, 217, 218, 219, 233, 238, 239, 245, 246, 251, 252, 253, 261, 262, 263, 265, 266, 267, 268, 269, 270, 271, 272, 273, 274, 276, 277, 278, 279, 280, 282, 285, 286, 287, 292, 293, 294, 295, 296, 297, 298, 300, 301, 315, 331, 355, 367, 368 ஆகிய எண்களைக் கொண்ட நூற்றிருபத்து மூன்று பாடல்களின் உரை ஆகும்.

**ஓரிரு வரியிலான உரை**

ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற உரைகளில் சில ஒன்று அல்லது இரண்டு வரிகளைக் கொண்டுள்ளது. அவை 11, 16, 21, 25, 26, 44, 45, 46, 55, 57, 57, 58, 82, 89, 92, 95, 103, 104, 106, 137, 145, 146, 148, 153, 155, 161, 168, 170, 173, 176, 178, 179, 181, 186, 193, 196, 220, 228, 242, 243, 248, 264, 299, 304, 313, 321, 327, 334, 352, 356, 357, 366, 369, 370, 373, 421, 423, 441, 453, 455, 461 ஆகிய எண்களைக் கொண்ட அறுபத்தியோரு பாடல்களின் உரை ஆகும்.

**வாக்கிய உரை**

ஐங்குறுநூற்றின் சில பாடல்களின் உரை வாக்கிய அமைப்பில் காணப்படுகின்றது. அவை 221, 260, 290, 412, 458 ஆகிய ஐந்து பாடல்களின் உரை ஆகும்.

**சிதைந்த உரை**

இந்நூலின் சில பாடல்களின் உரை சிதைந்து காணப்படுகின்றது. அவை 7, 465, 467, 469 ஆகிய நான்கு பாடல்களின் உரை ஆகும்.

**பாடலும் உரையும் கிடைக்கப்பெறாதவை**

ஐங்குறுநூற்றின் 129, 130 என்னும் இரண்டு எண்களின் பாடல்களும், அப்பாடல்களுக்கான உரைகளும் கிடைக்கப்பெறவில்லை.

**இரு உரைகளுக்கிடையேயான வேறுபாடு**

ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழைய உரைகளில் விரிவாக அமைந்த உரை முதற்பாடலின் உரை ஆகும். இந்நூலிலே மிகவும் சுருக்கமாக அமைந்த உரை 458ஆம் பாடலின் உரை ஆகும். இந்த இரண்டு உரைகளுக்கிடையேயான வேறுபாடு உரையாசிரியரின் உரை கூறும் தன்மையைக் காட்டும்.

“வாழி யாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
நனையக் காஞ்சிச் சினையச் சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க வெனவேட் டேமே” (ஐங்.1)

என்று ஐங்குறுநூற்றின் முதற்பாடல் அமைந்துள்ளது. இப்பாடலின் சூழல் விளக்கம், “என்பது புறத்தொழுக்கத்திலே நெடுநாளொழுகி, ‘இது தகாது’ எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடு கூடி ஒழுகாநின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடி, ‘யான் அவ்வாறொழுக நீயிர் நினைத்த திறம் யாது? என்றற்கு அவள் சொல்லியது” என்று அமைந்துள்ளது. இதன் பழையவுரை, “காவற்பொருட்டு அரசன்

வாழ்க விருந்தாற்றுதற் பொருட்டு நெற்பல பொலிக இரவலர்க்கு ஈதற்பொருட்டு பொன் மிக உண்டாகுக’ என யாய் இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது பிறிது நினைத்திலள் அவள் இத்தன்மையளாக, நீ ஒழுகிய ஒழுக்கத்தால் நினக்கும் நின்னொழுக்கத்திற்குத் துணையாகிய பாணனுக்கும் தீங்கு வருமென்றஞ்சி, ‘யாணரூரன் வாழ்க, பாணனும் வாழ்க’ என விரும்பினேம் யாங்களென்றவாறு. தலைவியை யாயென்றது புலத்தற்குக் காரணமாயின உளவாகவும் அவை மனங்கொள்ளாத சிறப்பை நோக்கி தோழி யாங்களென உளப்படுத்தது ஆயத்தாரை நோக்கி யெனக் கொள்க. பூவும் புலாலும் ஒக்க விளையும் ஊரனென்றது குலமகளிரைப் போலப் பொது மகளிரையும் ஒப்பக் கொண்டொழுகுவா னென்பதாம். ஆதனவினி யென்பான் சேரமான்களிற் பாட்டுடைத் தலைவன்’’ (ஐங்.பழைய.பக்.1-2) என்று பாட்டின் பொருளையும் அருந்தொடர்களின் விளக்கத்தையும் உள்ளுறைக் கருத்தையும் இவ்வுரை விளக்கி நிற்கின்றது. ஐங்குறுநூற்றின் முதற்பாடலின் விளக்கத்தைப் போன்று வேறுஎந்தப் பாடல்களின் விளக்கமும் விரிவாக எழுதப்படவில்லை. ஐங்குறுநூற்றின் 458 ஆம் பாடல்,

“துணர்க்காய்க் கொன்றை குழற்பல மூழ்த்தன
அதிர்பெயற் கெதிரிய சிதர்கொ டண்மலர்
பாணர் பொருமகன் பிரிந்தென
மாணல மிழந்தவென் கண்போன் றனவே’’ (ஐங்.458)

என்று அமைந்துள்ளது. இப்பாடலுக்கான சூழல் விளக்கம், “எ-து பருவங் குறித்துப் பிரிந்த தலைமகன் வரவு பார்த்திருந்த தலைமகள் பருவ முதிர்ச்சி கூறி ஆற்றாளாய் உரைத்தது’’ என்று அமைகின்றது. அதற்கான பழையவுரை, “சிதர்-சிந்துதல்’’ (ஐங்.பழைய.ப.192) என்று இடம்பெற்றுள்ளது. இதிலிருந்து ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளில் இரண்டு உரைகளுக்கு இடையேயான உரை வேறுபாட்டை அறிந்து கொள்ள இயலும்.

**உள்ளுறை**

ஐங்குறுநூற்றில் உள்ளுறை, இறைச்சி குறித்த பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவை பாடலின் உள்ளார்ந்த பொருளை விளக்குவன ஆகும். இவற்றின் பொருள் எளிதில் படித்துப் புரிந்துகொள்ளத்தக்கது அன்று. இத்தகைய

சூழலில் ஐங்குறுநூற்றுப் பழையவுரையும் தோன்றியிருக்கக் கூடும். சங்க அகப்பாடல்களில் உள்ளுறை என்பது பாடலினுள் உட்பொருளாகப் பொருந்தியுள்ளதாகும். இது தெய்வம் அல்லாத இயங்குதிணை, நிலைத்திணைக் கருப்பொருள்களை இடமாகக் கொண்டு பிறக்கும். இயற்கைக்கு மனிதப்பொருள் உள்நோக்கத்துடன் ஏற்றப்படுகின்றது. இதனைத் தொல்காப்பியர்,

"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம்எனக்

கொள்ளும் என்ப குறிஅறிந்தோரே"[3]

என்று வரையறை செய்கின்றார். "பொதுமக்கள் வழக்குப்போல இடித்துக் கூறாமல், அறவோர் உரைபோல் வலியுறுத்து நேராகக் கூறாமல் கனிவொடு கூறிக் காதலும் வாழ்வும் வளமும் சிறக்கக் கூறுவது உள்ளுறைக்கு அடிப்படையாம்"[4] என்று தொல்காப்பியப் பொருளதிகார உரையில் நச்சினார்க்கினியர் சுட்டுகின்றார். இதுபோன்று தமிழறிஞர்கள் பலரும் உள்ளுறைக்குப் பல்வேறு வரையறைகள் சுட்டியிருக்கின்றனர். இத்தகைய உள்ளுறையை விளக்கும் வகையில் ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியரின் உரையும் அமைந்துள்ளது. இவர் உள்ளுறையை விளக்குவதில் ஒரே முறையியலைப் பின்பற்றவில்லை. வெவ்வேறு முறைகளில் விளக்கிச் செல்கின்றார். இந்நூலின் முதற்பத்து வேட்கைப்பத்து ஆகும். இப்பத்தின் முதற்பாடல், 'வாழி யாதன் வாழி யவினி'(ஐங்.1) எனத் தொடங்குகின்றது. இப்பாடலுக்கான உரை, 'காவற்பொருட்டு அரசன் வாழ்க' என்று தொடங்கிப் பாடலுக்கான முழுமையான பொருளைத் தரும் விரிவான உரையாக அமைகின்றது. அடுத்து, ஐங்குறுநூற்றின் இரண்டு, மூன்றாம் பாடல்களுக்கான உரைகளின் தொடக்கம், 'தலைவி இல்லறமே நினைந்து ஒழுகினாள்' என்றும், 'இவள் இல்லறமே நினைந்து யொழுகினாள்' என்று கூறி, உள்ளுறையையும் விளக்குகிறார். ஐங்குறுநூற்றின் 4ஆம் பாடலில், தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையரிடம் சென்று நெடுநாள் கழித்துத் திரும்பி வருகின்றான். அவன் தோழியிடம், 'யான் இவ்வாறு ஒழுக நீயிர் நினைத்த திறம் யாது?' என்று ஒழுகுகின்றான். அதற்குத் தலைவி,

"வாழி யாதன் வாழி யவினி

பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக

எனவேட் டோளே யாயே யாமே

பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன் மார்பு
பழனமா கற்க வென வேட்டேமே'' (ஐங்.4)

என்று தோழிக்கு உரைப்பாளாய் அமைந்துள்ளது. பாடலின் இரண்டு அடிகள் அந்நாட்டு மன்னனை வாழ்த்துவதாக அமைகின்றது. இவ்விரண்டு அடிகளுக்கான பொருளைப் பழையவுரையாசிரியர் சுட்டவில்லை. இவர் பாடலின் மூன்றாம் அடியிலிருந்து உரை கூறத் தொடங்கி, உள்ளுறையை விளக்குகிறார். இதனை, ''இவள் இல்லறமே விரும்பியொழுகினாள். 'அவன் மார்பு ஊரவர்க்கெல்லாம் பொதுவாகிய பழனம் போலாது இவட்கேயுரித்தாக' என விரும்பினேம் யாங்கள் எ-று. பூத்துப் பயன்படாக் கரும்பினையும் காய்த்துப் பயன்படும் நெல்லினையுமுடைய ஊரனென்றது, ஈன்று பயன்படாப் பொதுமகளிரையும் மகப்பயந்து பயன்படுங் குலமகளிரையும் ஒப்ப நினைப்பான் எ-று'' (ஐங்.பழைய.ப.3) என்பதன்வழி அறிய இயலும்.

ஐங்குறுநூற்றின் 21ஆம் பாடலின் சூழல் விளக்கம், 'புறத்தொழுக்கம் எனக்கு இனியில்லை' என்று தலைமகன் தெளிப்பவும் 'அஃது உளது' என்று வேறுபடும் தலைமகட்குத் தோழி சொல்லியது' என்று இடம்பெற்றுள்ளது. இச்சூழல் விளக்கத்திற்கான உள்ளுறை அமைந்த பாடல்,

''முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப்
புள்ளிக் கள்வ னாம்ப லறுக்குந்
தண்டுறை யூரன் றெளிப்பவு
முண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்'' (ஐங்.21)

என்பதாகும். இதனைப் பழையவுரையாசிரியர், ''முள்ளி நீடிய……..லறுக்குமூரன்'' என்றது, தனக்கு உரித்தாகிய இல்லின்கண் ஒழுகிப் பரத்தையரோடு தொடர்ச்சி யறுப்பான் எ-று'' என்று விளக்குகின்றார். இதுபோன்று பாடலில் தொடர்ச்சியாக உள்ளுறை அமைந்திருந்தால், அப்பாடலின் தொடக்க இறுதிச் சொற்களை மட்டும் கொடுத்து உள்ளுறையை விவரித்துக் கூறுகின்றார். ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியர் ஐங்குறுநூற்றின் 151ஆம் பாடலான வெள்ளாங்குருகுப் பத்தின் முதற்பாடல்,

“வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போ னெய்தல்
கட்கமழ்ந் தானாத் துறைவற்கு
நெக்க நெஞ்ச நேர்கல் லேனே” (ஐங்.151)

என்ற பாடலின் சூழல் விளக்கம், ‘வாயில் வேண்டிய தோழிக்குத் தலைமகள் வாயின் மறுப்பாள் சொல்லியது’ என அமைந்துள்ளது. இப்பாடலுக்கான விளக்கம், “இதன் உள்ளுறை: பரத்தை யொருத்தியோடு ஒழுகுகின்ற ஒழுக்கம் இடையற்றதாகச் சென்ற வாயில்கள் நெருங்க அவள் நெஞ்சு நெகிழ்ந்து கூறிய காதல் மாற்றம் பரந்து செல்கின்ற துறைவனென்பதாம். வெள்ளாங் குருகென்றது பரத்தையாகவும், பிள்ளையென்றது பரத்தையோடு தலைமகனிடை உளதாகிய ஒழுக்கமாகவும், காணிய சென்ற மடநடை நாரையென்றது வாயில்களாகவும் கொள்க. இவை வருகின்ற பாட்டு ஒன்பதுக்கும் ஒக்கும். மிதித்தது அவளை நெருங்குதலாகவும், நக்க நெய்தல் அவள் நெஞ்சாகவும், கட்கமழ்ந்து ஆனாமை அவள் அவர்க்குக் கூறிய மாற்றம் எல்லார்க்கும் புலப்படுதலாகவும் இப்பாட்டிற்குக் கொள்க”(ஐங்.பழைய.ப.45) என்று அமைகின்றது. இவ்வுரையில், வெள்ளாங் குருகு என்பதைப் பரத்தைக்கும், பிள்ளை என்பதைப் பரத்தையோடு தலைமகனுக்கு உள்ள உறவுக்கும், காணிய சென்ற மடநடை நாரை என்பதைத் தலைவன் பொருட்டுப் பரத்தையரிடம் தூது சென்ற வாயில்களுக்கும் பழையவுரையாசிரியர் தொடர்புபடுத்தி விளக்குகின்றார். மேலும், இப்பாடலின் உரையே வருகின்ற பத்துப்பாடல்களுக்கும் பொருந்தும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றார். “வெள்ளாங்குருகு தன் பார்ப்பைப் போலத் தோன்றிற்றாக அதனைக் காண்டற்குச் சென்ற மடநடை நாரை மிதித்தலானே நெய்தல் மலர் சிதைந்து இடையறாது தேன்காலும் துறை எனப் பொருள் கொண்டு தலைவனுக்குப் பரத்தை குலமடந்தையாகிய என்னைப் போலச் சிறந்தவளாகத் தோன்றுதலாலே அவளைக் காமுற்றுச் செல்வானாக அவன் நடையாலே (ஒழுக்கத்தாலே) என் நெஞ்சம் புண்பட்டு அன்பாலே இடையறாது கசிந்துருகி வருந்தா நின்றது காண்! என்ற உள்ளுறையும் அதற்கேற்பப் பொருள் கோடலும் தகும்”[5] என்கிறார்,

பொ.வே.சோமசுந்தரனார். ‘‘தனக்கு உரித்தல்லாத வெள்ளாங்குருகின் பிள்ளையைத் தனக்கு உரித்தாகக் கருதி நாரை தன் பிள்ளையைக் கைவிட்டுக் காணச் சென்றாற்போலத் தலைமகன் தனக்குரிய என்னைக் கைவிட்டுப் பரத்தையை நாடிச் சென்று ஒழுகுகின்றான். குலமகளாகிய தன்னினும் பொதுமகளாகிய பரத்தை வேறாதலை நோக்காது, தலைமகன் பரத்தைபால் சென்றதனை வெள்ளாங்குருகின் பிள்ளையைத் தனது பார்ப்பெனக் கருதி நாரை காணிய சென்றது. நாரை மிதிப்ப நக்க நெய்தல் கட்கமழ்பு ஆனாவாறு போலத் தலைவன் விடுத்த வாயில்களால் நெருக்குண்டு யான் வாயில் நேரக் கருதினும் என் நெஞ்சு அன்புற்று வாயில் நேர்தலை உடன்படாதாயிற்று என்பது ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை தரும் மதிப்புக்குரிய விளக்கங்களாகும்’’[6] என்று அ.தெட்சிணாமூர்த்தி எடுத்துக்காட்டுகின்றார். இப்பாடலில் அமைந்துள்ள முதல் இரண்டு அடிகளை எடுத்துக் கொண்டு, ‘‘வெள்ளாங் குருகு என்னும் நெய்தல் நிலப் பறவையின் குஞ்சு (பிள்ளை) இறந்தது என அறிந்து அதைக் காண்பதற்காகச் சென்ற மெல்லிய நடையினையுடைய நாரை என்பது இந்த அடிக்கான நேர்பொருள். ஆனால், இந்த நேர்பொருளைக் கொண்டு, தலைவி வாயில் மறுத்ததன் காரணத்தைப் பெற முடியாது. எனவே இவ்விரண்டு அடிகள் இவை தரும் நேர்ப்பொருளில் மட்டும் அமையாமல் வேறு ஒரு உள்ளார்ந்த பொருளை அறிவிக்கின்றது என அறிய முடிகின்றது. இந்த உள்ளாந்த அர்த்தத்தைத்தான் இவ்வுரையாசிரியர் ‘இதன் உள்ளுறை’ என்பதன்கீழ் விளக்குகிறார்’’[7] என்று பழையவுரையாசிரியர் ‘இதன் உள்ளுறை’ என்று சுட்டுவதற்கான காரணத்தை அ.சதீஷ் தன் கருத்தாகப் பதிவு செய்கின்றார். இவர், இப்பாடலை ‘இறைச்சி’ என்னும் தலைப்பின்கீழ் விளக்கி உரைக்கின்றார். இதுவே, அவரின் கருத்தாகவும் அமைகின்றது.

‘‘சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல்
துறுக லடுக்கத்து வில்லோர் மாற்றி
ஐவனங் கவருங் குன்ற நாடன்
வண்டுபடு கூந்தலைப் பேணிப்
பண்பில சொல்லுந் தேறுதல் செத்தே’’ (ஐங்.267)

என்னும் பாடலின் உள்ளுறையை, ‘‘பண்பிலசொல்லுமென்றது, பொய்மொழிகளைச் சொல்லும் எ-று. பன்றியொருத்தல் காவலரையோட்டி ஐவனநெற் கவருமென்றது,

களவினிற் காவலரைவென்று பெறும் இன்பமே விரும்புவான் எ-று. தேறுதல் செத்தேயென்றது, தான் சொன்ன வார்த்தைகளை இவள் மெய்யாகக் கொள்ளுமென்பது கருதி எ-று'' (ஐங்.பழைய.ப.81) என விளக்குகிறார். முதலில் இறுதி அடிக்குரிய பொருளைக் கூறி, அடுத்ததாக இரண்டு மூன்றாம் அடிகளில் இடம்பெற்றுள்ள உள்ளுறையைக் குறிப்பிடுகின்றார். பின்னர் தலைவியின் பண்புநலன் சுட்டுகின்றார். இவ்வாறு ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரை அமைந்துள்ள பாடல்களின் உள்ளுறைகளை, அப்பாடல்களின் சூழல் சார்ந்து விளக்கிச் செல்கின்றது. இவற்றால் பழையவுரையாசிரியரின் 'உள்ளுறை' குறித்த உரைத்திறன், பிற்கால உரை ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டது என்பதை அறிய இயலுகின்றது.

**இறைச்சி**

சங்க அகத்திணைப் பாடல்களில் காதல் வாழ்க்கையைப் புனைந்து கூறுவது உரிப்பொருள். இது ஐங்குறுநூற்றுப் பாடல்களிலும் காணப்படுகின்றது. இதனை ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையின்வழி அறிய இயலும். ஒரு செயலைக் கூற வந்த பொருள் வெளிப்படாது மறைவாக இருக்க, அதனை உணர்த்த வந்த வேறொரு பொருள் வெளிப்படையாக நிற்குமாறு அமைக்கும் இலக்கண உத்தியே இறைச்சி ஆகும். இது தெய்வம் நீங்கலாக முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் போன்றவற்றை இடமாகக் கொண்டு பிறக்கும். இறைச்சி என்ற சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதி தசை, மாமிசம், கருப்பொருள் என்று பொருள் கூறுகின்றது. இறைச்சி என்ற சொல் தமிழ்ச்சொல் என்றும் அச்சொல் தமிழிலும் மலையாளத்திலும் வழங்கி வருகின்றது என்றும் தமிழ்ச்சொல் அகரமுதலி சுட்டிக் காட்டுகின்றது. இறைச்சியின் இலக்கணத்தை தொல்காப்பியரின்,

''இறைச்சி தானே உரிப் புறத்ததுவே''[8]

என்ற நூற்பா குறிப்பிடுகின்றது. இதற்கு விளக்கம் அளிக்கும் தமிழண்ணல், ''இறைச்சி உரிப்புறத்தது; அஃதாவது உரியோடு தொடர்புடையது. உரி என்பது மக்களுக்கு உரியதாய் வரும் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற இவை. உரியோடு தொடர்புடையதாய் வரும் பறிதென்பது, மக்கள் தவிர்த்தனவும் கருப்பொருள்களில் இடம்பெறுவனவுமான விலங்கு, பறவை முதலிய உயிரினங்களின் காதல் பற்றியது. அவற்றின் புணர்தல், பிரிதல், இருத்தல்,

இரங்கல், ஊடலைப் பற்றிய, குடும்ப உறவு வாழ்வைப் பற்றிய செய்திகள் உட்குறிப்போடு எடுத்தாளப்படும் போது இறைச்சி தோன்றும்''[9] என்று குறிப்பிடுகிறார். மேலும், இவர் குறிப்புப் பொருளே இறைச்சி என்கிறார். உள்ளுறை உவமை போல ஒன்றற்கு ஒன்று தொடர்புபடுத்திப் பார்க்கக் கூடாது என்றும், இவ்வாறு பார்க்கவும் இயலாது என்றும் சுட்டுகின்றார். ''உள்ளுறைக்கும் இறைச்சிக்கும் வேறுபாடு என்ன எனின், உள்ளுறை உவமையைக் கூறிப் பொருந்திய பிறிதொரு பொருளைப் பெற வைப்பது. அவ்வாறன்றிச் சொல்லிய பொருளிலேயே அதன் குறிப்பாகப் பிறிதொரு பொருளைக் கொள்ள வைப்பது இறைச்சி''[10] என்றும் தொல்காப்பியப் பொருளதிகார வாழ்வியல் விளக்கம் கூறுகின்றது. இறைச்சி குறித்துத் தெளிவான வரையறை இல்லையாதலால் தமிழறிஞர்களிடமும் உரையாசிரியர்களிடமும் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. ஐங்குறுநூற்றுப் பழையவுரையில் 177 ஆம் பாடலின் சூழல் விளக்கம், தலைமகளும் தோழியும் ஒருங்கு நின்றுழி, 'இவள் என்னை வருத்துதற்குச் செய்த தவறு என்' என்று வினாய தலைமகட்குத் தோழி நகையாடிச் சொல்லியது' என அமைகின்றது.

''தவறில ராயினும் பனிப்ப மன்ற
இவறுதிரை திளைக்கு மிடுமண னெடுங்கோட்டு
முண்டக நறுமலர் கமழும்
தொண்டி யன்னோ டோளுற் றோரே'' (ஐங்.177)

என்னும் அடிகளின் பழையவுரை, ''இதன் இறைச்சி: நீரறா நிலத்து முண்டக நறுமலர் கமழும் தொண்டி யன்னோ ளென்றது, இவள் நாமணுகி நுகர்தற்கரியள் எ-று. தோளுற்றோ ரென்றது, தோளை எதிர்ப்பட்டோர் எ-று'' (ஐங்.பழைய.ப.54) என இடம்பெற்றுள்ளது. இப்பாடலின் இறைச்சி, கருப்பொருளை நிலைக்களனாகக் கொண்டுள்ளது. இது நெய்தல் திணைப் பாடல் என்பதால் கடற்கரையும், அதனிடத்து உள்ள கழிமுள்ளிச் செடிகளின் நறிய மலர்களும் சுட்டப்பெற்றுள்ளன. இச்செடியில் முட்கள் நிறைந்திருக்கும் ஆதலால், இதன் நறுமணத்தை மட்டுமே உணர முடியும். அதனைக் கைக்கொள்ளல் இயலாது. அதுபோல, தலைவி சிறந்த பண்பு நலன்கள் உடையவள். அவளை எளிதில் யாரும் அணுகுதல் அரிது என்பதும் இறைச்சிப் பொருளாகும்.

‘‘இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே

திறத்தியன் மருங்கின் தெரியு மோர்க்கே’’[11]

என்னும் நூற்பா, ‘‘கருப்பொருள் பிறிதொரு பொருட்கு உபகாரப்படும் பொருட்டாதலே யன்றி அக்கருப்பொருடன்னுள்ளே தோன்றும் பொருளும் உள; அ∴து உள்ளுறை உவமத்தின் கூற்றிலே அடங்குமாறுபோல நடக்குமிடத்து, அவ்வுள்ளுறையுவமமன்று, இ∴து இறைச்சி யென்று ஆராய்ந்துணரும் நல்லறிவுடையோர்க்கு எ-று’’[12] என்று நச்சினார்க்கினியரின் உரை சுட்டுகிறது. இதனை ‘‘இறைச்சி என்பது முன்னமே தீர்மானிக்கப்பட்டு உள்ளீடாகப் பொதிந்து வைக்கப்பட்ட ஒருபொருள் அல்ல அது வாசகனின் வாசிப்பு அனுபவத்தின் இயைபுபட உருவாக்கப்படுகின்ற ஒரு புதிய பொருள் செயல்பாடே’’[13] என்று நச்சினார்க்கினியரின் கருத்தை, அ.சதீஷ் தெளிவுபடுத்துகின்றார். இதிலிருந்து பழையவுரையாசிரியர், தொல்காப்பியரின் இலக்கண நுட்பங்களை அறிந்தே பாடல்களுக்கு உரை எழுதியிருக்கின்றார் என்பதை அறிய இயலும்.

### பிறநூற் கருத்துக்களை எடுத்தாளுதல்

உரையாசிரியர்கள் ஒரு நூலுக்கு உரை எழுதும் பொழுது, பிறநூற் கருத்துக்களை இடையிடையே சொல்லிச் செல்வது வழக்கம். ஆனால் சங்க இலக்கியங்களுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளில் பிறநூல் மேற்கோள்கள் அதிகமாக இடம்பெறவில்லை. இதற்கான காரணம் யாதெனப் புலப்படவில்லை. பழையவுரையாசிரியர்களின் இத்தகைய உரை இயல்பு ஐங்குறுநூற்றுப் பழையவுரையிலும் காணப்படுகிறது. ஐங்குறுநூற்றின் பழையவுரைப் பகுதியில் தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலிலிருந்து இரண்டு மேற்கோள்கள் மட்டுமே இடம்பெற்றுள்ளன. வேறு எந்த இலக்கிய, இலக்கண நூலில் இருந்தும் மேற்கோள்கள் எடுத்தாளப்படவில்லை. ஐங்குறுநூற்றில் இடம்பெற்றுள்ள,

‘‘மாரி கடிகொளக் காவலர் கடுக

வித்திய வெண்முளை கள்வ னறுக்குங்

கழனி யூரன் மார்புற மரீஇத்

திதலை யல்கு னின்மகள்

பசலை கொள்வ தெவன்கொ லன்னாய்’’ (ஐங்.29)

என்னும் பாடலுக்கான சூழல் விளக்கம், ‘வரைவெதிர் கொள்ளார் தமர் அவன் மறுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது’ என்று அமைந்துள்ளது. இதன் பழையவுரை, “மாரி கடிகொள..........அறுக்கும்’ எ-று, மாரிநின்ற யாமத்துக் காவலரைத் தப்பி அவன் தலைவியை எதிர்ப்பட்டமை உணர்த்தியதெனக் கொள்க. இ∴து உண்மை செப்பலென்னும் அறத்தொடு நிலை”(ஐங்.பழைய.ப.12) என்று இடம்பெற்றுள்ளது.

“வெண்ணுதற் கம்பு ளரிக்குரற் பேடை
தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலு
மறிவில் யாணர் மலிகே ழூரநீ
சிறுவரி னினைய செய்தி
நகாரோ பெருமநிற் கண்டிசி னோரே” (ஐங்.85)

என்ற பாடலின் சூழல் விளக்கம், ‘தலைமகன் பரத்தையர்மேற் காதல்கூர்ந்து நெடிது செல்வுழி மனையகம் புகுந்தானாகத் தலைவி கூறியது’ என அமைந்துள்ளது. இதற்கான பழையவுரை, “கம்புட்பேடை சேவலொழியக் கிளையுடனே ஆலுமூர என்றது, ‘கிளையுடனே வாழ்கின்ற எமக்கு நின்னினீங்கிய மெலிவு உளதாகக் கூறுகின்றே மல்லேம்; நின் குலத்தொழுக்கத்துக்குத் தகாது’ எனக் கழறியதாம்; “தாய்போற் கழறித் தழீஇக் கோட, லாய்மனைக் கிழத்திக் குரித்தென மொழிப” என்றதூஉம் இத்திறனோக்கியெனக் கொள்க” (ஐங். பழைய.ப.27) என்று அமைகின்றது. இப்பழையவுரையில் கூறியுள்ள பாடல் அடிகள் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளவை ஆகும். இவ்விரண்டு பாடல்களுக்கும் பழையவுரையாசிரியர் மேற்கோள் காட்டியுள்ள முறைமை மற்ற உரையாசிரியர்களில் இருந்து வேறுபட்ட தன்மையுடையதாக அமைகின்றது. இதனை “பொதுவாக இலக்கிய உரையாசிரியர்கள் உரையெழுதும் பொழுது தொல்காப்பிய நூற்பாக்களைப் பயன்படுத்தினால் தொல்காப்பியத்தை முதன்மைப்படுத்தி ‘அந்த விதியின் கீழ்ப்படும்’, ‘அந்த விதியில் அமைத்துக்கொள்க’ என்பதாகவே கூறிச் செல்வர். ஆனால் இவ்வுரையாசிரியர் தொல்காப்பியர், தான் உருவாக்கிய விதிக்கு மூலமாக இப்பாடலைக் கொண்டார் என்ற பொருள்பட அல்லது இப்பாடலிலிருந்தே தொல்காப்பியர் மேற்கொண்ட விதியினை வகுத்தார் என்கிற பொருள்பட இவர் இயற்றிய உரை, தொல்காப்பிய உருவாக்கம் குறித்து நிகழும் சங்க

இலக்கியத்திற்கு முன்னா அல்லது பின்னா என்பது போன்ற எடுகோளாக விளங்குகின்றது''[14] என்று அ.சதீஷ் குறிப்பிடுவது சுட்டத்தக்கதாகும். இதிலிருந்து பழையவுரை எந்தக் காலக்கட்டத்தைச் சார்ந்தது என்பது மேலும் ஆராய்ச்சிக்குரியதாக அமைகின்றது.

**இலக்கணக் குறிப்புத் தருதல்**

சங்க இலக்கிய நூல்களுக்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் உரையிடையே இலக்கணக் குறிப்புத் தந்து விளக்குவதை மரபாகக் கொண்டிருந்தனர். இம்மரபு சங்க இலக்கியங்களுக்குக் கிடைக்கப்பெற்ற பழைய உரைகளிலும் இடம்பெற்றுள்ளது. இவற்றுள் ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையில் ஐந்து இடங்களில் இவ்வுரையாசிரியர் இலக்கணக் குறிப்புத் தருகிறார்.

''வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குரல்
நீவய னண்ணி யிமிழு மூர
எம்மிவ ணல்குத லரிது
நும்மனை மடந்தையொடு தலைப்பெய் தீமே'' (ஐங்.86)

என்ற பாடலுக்கான பழையவுரையில், ''பார்ப்பினம் மெல்லிதாகப் பறத்தல் பற்றி மென்பறையென்று ஆகுபெயராற் கூறியதெனக்கொள்க'' (ஐங்.பழைய.ப.42) என்று குருகினுடைய குஞ்சு மென்மையாகப் பறத்தலுக்கு ஆகி வந்ததால் பழையவுரையாசிரியர் ஆகுபெயர் என்கின்றார். இதனை, ''குருகு-நாரை. மென்பறை: அன்மொழித்தொகை. ஆகுபெயர் என்பர் பழைய உரையாசிரியர். மெல்லிதாகப் பறக்கும் பார்ப்புகள் (குஞ்சுகள்) என்க''[15] என்று பொ.வே.சோமசுந்தரனார் குறிப்பிடுகிறார்.

''அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பலர்மடி பொழுதி னலமிகச் சாஅய்
நள்ளென வந்த வியறேர்ச்
செல்வக் கொண்கண் செல்வன∴ தூரே'' (ஐங்.104)

என்னும் அடிகளில் வரும் இலக்கணக் குறிப்பை, ‘செல்வக் கொண்கன் செல்வனூரென்னும் எழுவாயின் முற்றுச்சொல் அஃதென்னும் பெயர்’ (ஐங்.பழைய.ப.50) என்று சுட்டுகிறார்.

“பொறிவரித் தடக்கை வேத லஞ்சிச்
சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா
வெயின்முளி சோலைய வேயுயர் சுரனே
அன்ன வாரிடை யானும்
தண்மை செய்தவித் தகையோள் பண்பே” (ஐங்.327)

என்னும் பாடல் பாலைத் திணையில் இடைச்சுரப் பத்து என்னும் பகுதியில் அமைந்துள்ளது. இப்பாடல் ‘பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச் சொல்லியது’ என்ற சூழலில் அமைந்துள்ளது. இப்பாடலின் இரண்டாம் அடிக்கு, “சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா என்பது முற்று”(ஐங்.பழைய.ப.101) என்று இலக்கணக் குறிப்புத் தருகின்றார், பழையவுரையாசிரியர். இதனை, “இங்கு செல்லா என்பதை எச்சமாகக் கொண்டு மூன்றாவது அடியில் பொருள்முடிபு கொண்டால் முதலடி பயனில்லாமல் போகும். எனவே, செல்லா என்பதை முற்றாகக் கொண்டால் அப்பாடலின் முதலிரண்டு அடி ஒரு தொடராகவும் மூன்றாவது அடி ஒரு தொடராகவும் இறுதி இரண்டடிகள் மற்றொரு தொடராகவும் ஆக மூன்று சிறு அலகுகளாக மாறும். இப்பொழுது பாடலின் எந்தப் பக்கத்திலிருந்தும் உள்நுழைந்து வாசிக்க முடியும். உதாரணத்திற்கு முதலிரண்டு அடியைக் கீழ்க்காணும் அமைப்புகளிலோ அல்லது வேறு அமைப்புகளிலோ மாற்றிக் கொள்ள முடியும்.

‘சிறுகண் யானை வேதல் அஞ்சி
பொறிவரித் தடக்கை நிலந்தொடல் செல்லா
பொறிவரித் தடக்கை வேதல் அஞ்சி
நிலந்தொடல் செல்லா சிறுகண் யானை
வேதல் அஞ்சி பொறிவரித் தடக்கை
நிலந்தொடல் செல்லா சிறுகண் யானை’(ஐங்.327)

உண்மையில் இவ்வுரையாசிரியர் இப்பாடலில் செய்தது செல்லா என்பதன் அருகில் ஒரு நிறுத்தற் குறி இட்டது மட்டுமேதான். இதனை அவர் முற்று என்று கூறினார்''[16] என்பர் அ.சதீஷ்.

''இருங்கழிச் சேயிறா வினப்புள் ளாருங்
கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை
வைகறை மலரு நெய்தல போலத்
தகைபெரி துடைய காதலி கண்ணே'' (ஐங்.188)

என்பது நெய்தல் திணைப் பாடல் ஆகும். இப்பாடலின் சூழல் விளக்கம், 'விருந்து வாயிலாகப் புகுந்த தலைமகன் தலைவி இல்வாழ்க்கைச் சிறப்புக்கண்டு மகிழ்ந்து சொல்லியது' என்று அமைகின்றது. தலைவன் பரத்தையரைப் பிரிந்து தன் இல்லத்திற்குள் நுழைகின்றான். அவன் இல்லாத நிலையிலும் இல்லறத்தைச் சிறப்பாக நடத்தும் தலைவியை மகிழ்ந்து, வைகறைப்பொழுதில் மலரும் நெய்தல் பூவைத் தலைவியின் கண்களுக்கு உவமை கூறுகின்றான். இதனைப் பழையவுரையாசிரியர், ''விடியற்காலை மலரும் நெய்தலைக் கண்ணிற்கு உவமையாகக் கூறிற்று, வந்தபொழுதே மறைந்த சிறப்பு நோக்கி யெனக் கொள்க'' (ஐங்.பழைய.ப.58) என்று உரை வரைகின்றார். தலைவன் இல்லத்திற்குள் நுழையும் பொழுதே தலைவியின் கண்கள் மகிழ்ச்சியால் அழகாக விரிந்தன என்பதைச் சிறப்பித்துச் சுட்டுகின்றார். இது பழையவுரையாசிரியரின் உவமை விளக்கும் நுட்பத்தினைப் புலப்படுத்தும்.

**இலக்கண உத்திகள் மூலம் திணை வகுத்தல்**

ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியர் பாடலில் இடம்பெற்றுள்ள முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றைக் கொண்டு, அப்பாடல் எத்திணையைச் சார்ந்தது என்பதை விளக்குகின்றார். இந்நூலில் இடம்பெற்றுள்ள சில பாடல்கள், அந்தந்தத் திணைக்கான பொருளைத் தராமல், வேறு திணைக்கான பொருளைத் தருகின்றன. சில பாடல்களில் உரிப்பொருள் மயங்கியும் வந்திருக்கின்றன. செய்யுட்களில் உரிப்பொருள் மயங்காது என்பதனை,

''உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே''[17]

என்று தொல்காப்பியர் சுட்டிக் காட்டுகின்றார். முதற்பொருள் உள்ள பாடல்களுக்கு முதற்பொருளாலும், கருப்பொருள் உள்ள பாடல்களுக்குக் கருப்பொருளாலும், உரிப்பொருள் உள்ள பாடல்களுக்கு உரிப்பொருளாலும் செய்யுட்களில் இடம்பெற்றுள்ள திணை அறியப்படுகின்றது. இதனைத் தெளிவுபடுத்தும் வகையில்,

“முதற்கரு வுரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங்காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை”[18]

என்ற தொல்காப்பிய நூற்பா அமைகின்றது. ஐங்குறுநூற்றின் 366 ஆம் பாடல் பூத்தரு புணர்ச்சியை விளக்கி நிற்கின்றது. இதனை,

“அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயி னென்னதூஉ
மறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே” (ஐங்.366)

என்னும் பாடல் உணர்த்தும். இதன் சூழல்விளக்கம், “தலைமகளை நோக்கி, ‘இவ்வேறுபாடு எற்றினானாயிற்று’ என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது” என்பதாக அமைகின்றது. இப்பாடலுக்கு உரை கூறுகின்ற பழையவுரையாசிரியர், “இது முன்னால் அவன் தந்த கோங்கம் பூவால் விளைந்ததெனப் பூத்தருபுணர்ச்சி கூறியவாராயிற்று. இது கருப்பொருளால் பாலை” என்று சுட்டிச் செல்கின்றார். இப்பாடலில், தலைவன் தலைவிக்குக் கோங்கம் பூவினைக் கையுறையாகக் கொடுக்கின்றான். பின்னர், தலைவன் பிரிந்து செல்கின்றான். அவன் பிரிவால் தலைவி மெலிவுற்றாள். தலைவியின் மெலிவுக்குக் காரணம் யாதென, செவிலி தோழியிடம் வினவுகின்றாள். அதற்குத் தோழி, தலைவியின் மெலிவுக்குக் காரணம் கோங்கம் பூ என்று கூறி, அறத்தொடு நிற்கின்றாள் என்பன போன்ற செய்திகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடலில் பூத்தருபுணர்ச்சி சுட்டப்பெற்றுள்ளதால், குறிஞ்சிக்குரிய உரிப்பொருள்போல் தோன்றுகிறது. ஆனால், இதனைப் பழையவுரையாசிரியர், ‘பாலைக்குரிய கருப்பொருளாகிய கோங்கு கூறினமையால் பாலை’ என்று சுட்டுகின்றார்.

இதிலிருந்து பழையவுரையாசிரியர் உரிப்பொருள் மயங்காது என்னும் தொல்காப்பிய இலக்கணத்திற்கு உட்பட்டு உரை எழுதுவதை அறிந்து கொள்ள இயலும். மேலும், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் செய்யுட்களில் உரிப்பொருள் மயங்கும் என்று கூறுகின்றனர். இவர், தொல்காப்பியம் அகத்திணையியலின் 'திணைமயக் குறுதலுங் கடிநிலை இலவே' என்ற நூற்பாவிற்கு, இப்பாடலைச் சான்றாகக் கூறி, ''இ∴து இவ்வேறுபாடென்னென்ற செவிலிக்குத் தோழி பூத்தருபுணர்ச்சியான் அறத்தொடு நிற்றல். இது பாலையிற் குறிஞ்சி. இ∴து உரிப்பொருளோடு உரிப்பொருள் மயங்கிற்று''[19] என விளக்குகின்றார். இது தொல்காப்பியரின் இலக்கணக் கட்டமைப்பினை உடைத்தெறிவதாக உள்ளது. இது நச்சினார்க்கினியர், ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியரிடம் இருந்தும் வேறுபடுகின்றார் என்பதைப் புலப்படுகின்றது.

''பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ
விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி
விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்
தேரொடு குறுக வந்தோன்
பேரொடு புணர்ந்தன் றன்னையிவ ளுயிரே'' (ஐங்.367)

என்பது பாலைத்திணைப் பாடல் ஆகும். இப்பாடல், 'நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது' என்னும் சூழல் விளக்கத்தால் ஆனது. இதன் பழையவுரை, ''கான்யாற்றுத் தேரொடு குறுகவந்தோன் என்றது, கான்யாற்று யாங்கள் வந்துழிக் குறுகவந்தோன் எ-று. எனவே புனறரு புணர்ச்சி கூறியவாராயிற்று. 'பேரொடு புணர்ந்தன்று இவளுயிர்' என்றது, அன்றுதொட்டு இன்னான் தந்த உயிரென அவன் பேரொடுபட்டது இவளுயிர் எ-று. இது காலத்தால் பாலை'' (ஐங்.பழைய.ப.110) என்பதாகும். தலைவி காட்டாற்றில் நீராடும் பொழுது வெள்ளத்தில் இழுத்துச் செல்லப்படுகின்றாள். அவ்விடத்து வந்த வேங்கை மலரையும், கோங்கு மலரையும் அணிந்து வந்த தலைவன், தலைவியைக் காப்பாற்றுகிறான். அன்று முதல் அவன் தந்த உயிர் என அவள் உயிர் அவனோடு ஒன்றுபட்டது. தலைவனும் தலைவியும் புனலின்கண் ஒன்று கூடினமையின் 'புனல்தரு புணர்ச்சி' எனப்பட்டது. இப்பாடலில் சுட்டப்பெறும் பொருள்

குறிஞ்சித்திணையில் நடைபெறும் நிகழ்வுகளைப்போல் உள்ளது. இருப்பினும், இது பாலைத்திணைப் பாடல். எனவே, இப்பாடலுக்கான உரையை,

“நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே”[20]

என்ற தொல்காப்பிய நூற்பாவினைக் கொண்டே கட்டமைத்திருக்கின்றார், பழையவுரையாசிரியர். இவர் பாலைத்திணைக்குரிய பெரும்பொழுது ‘வேனில்’ என்பதை அறிந்தே ‘இது காலத்தால் பாலை’ எனச் சுட்டிச் செல்கின்றார்.

‘பரத்தையொருத்தியுடன் பொழிலகத்துத் தங்கி வந்த தலைமகன் தலைமகள் வினாயவழி, ‘யாரையும் அறியேன்’ என்றானாக அவள் கூறியது’ என்ற சூழல் விளக்கம் ஐங்குறுநூற்றின் பாலைத் திணைப்பாடல் ஆகும்.

“வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழின்
முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே” (ஐங்.369)

என்ற இப்பாடலின் பழையவுரை, “இது பாலைக்குரித்தாகிய வேனிற்கண் நிகழும் குரவும் குயிலும் கூறுதலாற் பாலையாயிற்று”(ஐங்.பழைய.ப.111) என அமைகின்றது. இப்பாடலில், தலைமகன் பொழிலிடத்தில் பரத்தை ஒருத்தியோடு இருந்து வந்தமையைச் சுட்டித் தலைவி ஊடல் கொண்டாள். அவ்வாறு நீ கூடியிருந்த காலம் ஊரில் அலர் பரவி இருந்தது. இது குரவ மரத்தின் உயர்ந்த கிளையில் அமர்ந்த இளவேனில் காலத்துக் குயிலின் ஆரவாரத்தைவிடப் பெரிதாக இருந்தது எனத் தலைவி சுட்டுகிறாள். எனவே, இதில் தலைவி தலைவனுடன் ஊடுதலால் மருதத் திணைக்குரிய ஊடலும் ஊடல் நிமித்தமும் என்னும் உரிப்பொருள்போல் தோன்றும். எனவே, பாலைத் திணையின் பெரும்பொழுதான வேனிலையும், கருப்பொருள்களான குரவ மரத்தையும் குயிலையும் கூறி, இப்பாடலைத் தொல்காப்பியரின் இலக்கண வரம்பிற்குள் கட்டமைக்கின்றார், பழையவுரையாசிரியர்.

ஐங்குறுநூற்றின் 423ஆம் பாடல் முல்லைத் திணைக்கு உரியதாகும்.

“மாமழை யிடியூஉத் தளிசொரிந் தன்றே
வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே
யாமே நிற்றுறந் தமையல
மாய்மல ருண்கணு நீர்நிறைந் தனவே” (ஐங்.423)

என்னும் பாடலின் சூழல் விளக்கம், ‘கார்ப்பருவத்தே பிரியக் கருதிய தலைமகட்குத் தோழி தலைமகளது ஆற்றாமை கூறிச் செலவழுங்குவித்தது’ என்பதாகும். இப்பாடலுக்கான பழையவுரையில், “இது, கார்ப்பருவத்தே கூறுதலான் முல்லையாயிற்று” (ஐங்.பழைய.ப.125) என்று இடம்பெற்றுள்ளது. முல்லைத் திணையின் உரிப்பொருள் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் ஆகும். ஆனால், இப்பாடலில் தலைவனின் பிரிவைத் தடுக்கும் பொருட்டுத் தோழி, தலைவனிடம் அறத்தொடு நிற்றலால் இது பாலைத் திணைபோல் தோன்றும். எனவே, பழையவுரையாசிரியர் முல்லைத் திணைக்குரிய பெரும்பொழுதான கார்காலத்தைச் சுட்டி, இப்பாடலையும் தொல்காப்பியரின் இலக்கணக் கட்டமைப்பிற்குள் கொண்டு வருகிறார். இதிலிருந்து, ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியரின் திணை வகுத்தல் முறை, தொல்காப்பியரின் இலக்கணக் கோட்பாட்டிற்குள் அடங்குவதைக் காண இயலும்.

**பாடலின் தலைப்புக்கான பெயர்ப் பொருத்தம் கூறல்**

ஐங்குறுநூற்றில் மொத்தம் ஐம்பது பத்துக்கள் உள்ளன. இந்நூலின் ஒவ்வொரு பத்துப் பாடல்களுக்கும் தனித்தனித் தலைப்புகள் இடம்பெற்றுள்ளன. இந்தத் தலைப்புகள் பத்துப் பாடல்களிலும் இடம்பெற்றுள்ள ஒரு சொல்லாக அமைந்திருக்கும். இது அனைத்துத் தலைப்புக்களுக்கும் பொருந்தும் என்று சொல்ல இயலாது. இந்தப் பாடல்களுக்கான பெயரிடல் மரபு ஆய்வுக்குரியதாக உள்ளது. பழையவுரையாசிரியர் ஐங்குறுநூற்றின் பாடல்கள் சொல் வகையால் தொடர்ச்சி பெற்றுள்ளன என்று கருதுகிறார். ஐங்குறுநூற்றின் நெய்தல் திணையில் தொண்டிப்பத்து என்னும் தலைப்பு அமைந்துள்ளது. இது தொண்டி என்னும் பட்டினத்தைச் செய்யுள்தோறும் சிறப்பித்துப் பாடும் பத்துப் பாடல்களின் தொகுதி ஆகும். தொண்டி சேரநாட்டின் கடற்கரைப் பட்டினமாதலால் நெய்தல் திணையில் இடம்பெற்றுள்ளது. இப்பத்தின் பத்தாவது பாடலுக்கு உரையெழுதும்

பழையவுரையாசிரியர், ‘‘இவை பத்தும் சொல் வகையால் தொடர்ச்சி பெறுதலேயன்றிக் கிளவி வகையால் தொடர்ச்சி யுடையவாறும் அறிக’’ (ஐங்.180.பழைய.ப.55) என்று கூறுகிறார். இதுபோன்ற விளக்கங்கள் வேறு எந்தப் பத்துக்களின் இறுதியிலும் காணப்படவில்லை. இருப்பினும் பழையவுரையாசிரியர் நெய்தல் திணையில் உள்ள தொண்டிப்பத்துக்குப் பாடலின் பெயர்ப் பொருத்தம் கூறும் உரை மரபு மிகவும் குறிப்பிடத்தக்கதாக அமைகின்றது.

**பாடலின் பயன் கூறுதல்**

ஐங்குறுநூற்றின் குறிஞ்சித் திணையில் ‘அம்மவாழிப்பத்து’ என்னும் பத்து இடம்பெற்றுள்ளது. இப்பத்தின் முதற்பாடல்,

‘‘அம்ம வாழி தோழி காதலர்
பாவை யன்னவென் னாய்கவின் றொலைய
நன்மா மேனி பசப்பச்
செல்வ லென்பதம் மலைகெழு நாடே’’ (ஐங்.221)

என்று அமைகின்றது. இப்பாடலின் சூழல் விளக்கம், ‘ஒருவழித் தணந்து வரைதற்கு வேண்டுவன முடித்து வருவல் என்று தலைமகன் கூறக்கேட்ட தலைமகள் அவன் சிறைப்புறத்தானாய்க் கேட்பத் தோழிக்குச் சொல்லியது’ என்று சுட்டப்பெற்றுள்ளது. தலைவன் களவுக் காலத்தில் பிரிந்து சென்று தலைவியை வரைந்து கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து மீள்கிறேன் எனக் கூறுகின்றான். அதற்குத் தலைவி தோழிக்குச் சொல்லுவாளாய், ‘என்னுடைய பாவை போன்ற மேனியின் அழகு நீங்கிவிடும் என்றும் மாமை நிறம் போன்ற மேனி பசலையுறும்’ என்றும் தலைவி வருந்துகிறாள். இச்சூழலில் அமைந்த பாடலில் தலைவியின் நோக்கம் தலைவன் பிரியவே கூடாது என்பதாகப் பொருள் தருகிறது. இது களவொழுக்கம் நீடிக்க, தலைவியே உடன்பட்டமை போலாகும் என்பதைச் சுட்டுகிறது. பொதுவாக அக மரபில் களவு நீட்டித்தல் என்பது இல்லை. தலைவி தன்னுடைய களவு வெளிப்படும் முன்பே திருமணம் நடைபெற வேண்டுமென்றே விரும்புவாள். சங்க அகப் பாடல்களில் களவு நீட்டிக்க விரும்பிய தலைவியின் கூற்றாக அமைந்த பாடல்களுக்கான சான்றுகளும் இல்லை. இது அக மரபும் இல்லை. இப்பாடலில், தலைவன் விரைவில் வந்து தன்னை மணம் முடிக்க

வேண்டும் என்பதே தலைவியின் நோக்கமாக இருக்கும் என்னும் நுட்பத்தினைப் பழையவுரையாசிரியர், ‘‘இதன் பயன் கடிதின் வரைதல்’’(ஐங்.பழைய.ப.68) என்று கூறுகின்றார். இதிலிருந்து ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியர் பாடலின் பயன் அறிந்து உரை கூறும் தன்மை புலப்படும்.

**சொற்களுக்குச் சிறப்பு விளக்கம் தருதல்**

பாடல்களில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு விளக்கம் அளித்தல் என்பது பண்டைய உரையாசிரியர்களின் மரபாக இருந்திருக்கின்றது. அவர்களில் ஐங்குறுநூற்று உரையாசிரியரும் குறிப்பிடத்தக்கவர் ஆவார். நம் முன்னோர்களால் எழுதப்பட்ட பாடல்கள் அனைத்தும் பல்வேறு பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டுள்ளன. அத்தகைய பண்பாடு சார்ந்த பழைமையான வழக்காறுகள் நிலைபெறுவதற்கு உரையாசிரியர்கள் காரணமாக இருக்கின்றனர். அவை காலம் கடந்தும் மக்களிடையே இன்றும் வழக்கில் உள்ளன. அவற்றை ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்றுள்ள பழையவுரையின்வழி அறிய இயலும்.

‘‘பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்கு மெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயிற்
கெழுதகை கொல்லிவ ளணங்கி யோற்கே’’ (ஐங்.245)

என்னும் அடிகளில் வரும் ‘கன்னம்’ என்ற சொல்லுக்கு, ‘‘கன்னமென்பது நோய் தணிதற்குப் பண்ணிக் கொடுக்கும் படிமம்’’ (ஐங்.பழைய.ப.75) என்று பழையவுரையாசிரியர் சுட்டுகின்றார். ‘‘கன்னம் என்பதற்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளை நோய் தணிதற்குப் பண்ணிக் கொடுக்கும் மந்திரத் தகடு உள்ளே வைத்துக் கட்டிய தாயத்து, என்கிறார். இது பொன்னாலும் செய்யப்படும் என்பதற்குப் ‘பொன்செய் கன்னம் பொலிய’ (அகம்.137) என்று மேற்கோளும் காட்டுகிறார். ஈழத்து உரையாளர் மருந்து என்று உரையிற் கூறி, விளக்கத்தில் பழைய உரையாசிரியரைத் தழுவி, ‘கன்னம் என்பது நோய் தணிதற்குச் செய்து கொடுக்கும் ஒரு படிவம்’ என்று பொருள் தருகின்றார். இன்னும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கழங்கு மெய்ப்படுத்தலாவது ‘இது தெய்வத்தானாயிற்றோ பிறிதொன்றினானாயிற்றோ எனத் தெய்வம் பராவி

அக்கழற்காய்களை எண்ணிப்பார்த்தல் என்றும் கழற்காய்களைத் தொகுத்து அவற்றிற்கு மஞ்சட்காப்புக் கட்டி 'இம்மையல் தீருங்காறும் இக்காப்பனை அணிந்திருக்க' எனக் கட்டுவது கன்னம் என்றும் கூறுப' என்று விளக்கிச் செல்கின்றார்"[21] என்பதன்வழி அறிய இயலுகின்றது. இதற்குப் பெருமழைப்புலவர் பொ.வே.சோமசுந்தரனார், "'கழங்குகளாலே ஆராய்ந்து உண்மையினைக் கண்டு வெளிப்படுத்து கன்னத்தைக் கையிற் றூக்கிக் கொண்டு' என்றும், 'கழங்குகளைப் பரப்பி எண்ணி ஒற்றையாயின் இன்னது என்றும் இரட்டையாயின் இன்னது என்றும் துணிந்து கூறுதல் என்க"[22] என்றும் விளக்கம் அளிக்கின்றார். களவு வாழ்க்கையின் காரணமாகத் தலைவியின் உடலில் மாறுபாடு ஏற்படுகின்றது. இதனைக் கண்ணுற்ற சுற்றத்தார் இது முருகப்பெருமானால் ஏற்பட்டதொரு நோய் என்று கருதுகின்றனர். இதனால் வேலனுக்கு வெறியாட்டு நிகழ்த்தி அந்நோய் தணிக்க உருவாக்கித் தரும் படிமம் கன்னம் என்று சொல்லப்படுகின்றது. 'தஞ்சை மாவட்டத்துச் சிற்றூர்களில் நெல்லையோ சோளத்தையோ இங்ஙனம் எண்ணுவதும் துடைப்பத்திலுள்ள ஈர்க்குகளில் ஒரு பகுதியைத் தனியே பிரித்து அதனை எண்ணிச் சொல்லலும் உண்டு' என்பதனை அ.தெட்சிணாமூர்த்தி உரையின்வழி அறிய இயலுகின்றது. 'கன்னம் இக்காலத்துத் தாயத்துப் போல்வதொரு பொருள். இது பொன்னாற் செய்யப்படும் என்பது "பொன்செய் கன்னம்"[23] என்பதானும் உணரலாம். பழையவுரையாளர் கூறும் படிமம் என்பது, பொற்றகட்டில் தெய்வ உருவத்தைக் கீறுவதாகலாமோ என்ற ஐயம் ஏற்படுவதாக அ.தெட்சிணாமூர்த்தி குறிப்பிடுகின்றார். இக்காலத்திலும் சிறுதெய்வ வழிபாடு செய்வோர், மாவினால் பாவை செய்து மந்திரங்கள் ஓதி வழிபாடு செய்கின்றனர். இதன்மூலம் தமக்குற்ற தீவினை கழியும் என்பது அவர்களின் நம்பிக்கையாக உள்ளது. இவ்வாறு 'கன்னம்' என்னும் சொல் குறித்த பழையவுரையாசிரியரின் உரை, பிற்கால உரையாசிரியர்களின் உரை ஆராய்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிகின்றது.

ஐங்குறுநூற்றுப் பாடல்களில் இடம்பெற்றுள்ள சொற்கள் சில இடங்களில் கற்பவருக்கு மயக்கம் தருவதாக உள்ளது. இத்தகைய இடங்களைத் தெளிவுபடுத்தும் வகையில், பழையவுரையாசிரியரின் உரை அமைந்திருக்கின்றது.

"அறம்புரி செங்கோன் மன்னனிற் றாநனி
சிறந்தன போலுங் கிள்ளை பிறங்கிய

பூக்கமழ் கூந்தற் கொடிச்சி

நோக்கவும் படுமவ ளோப்பவும் படுமே'' (ஐங்.290)

என்ற பாடலில் முதலடியில் வரும் 'மன்னன்' என்ற சொல் மயக்கம் தருவதாக உள்ளது. இப்பாடலில், தலைவன் தலைவியை இரவுக்குறிக்கண் சந்தித்து விட்டுச் செல்கின்றான். இதனைக் குறிப்பால் உணர்ந்த சுற்றத்தார் தலைவியை இற்செறித்தனர். அதன் காரணமாக, தோழி இரவுக்குறி மறுக்கின்றாள். தலைவன் கோபம் கொள்கின்றான். அத்தலைவனின் வெறுப்புத் தீர்த்தற் பொருட்டுத் தோழி, மீண்டும் தினைப்புனக் காவலுக்குத் தலைவி வருவதை அவன் கேட்குமாறு கூறுகின்றாள். எனவே, இப்பாடலில் சுட்டப்பெற்றுள்ள மன்னன் என்ற சொல் தலைவனைக் குறிப்பதாகவே அமைகின்றது. இதனால் ஏற்படும் மயக்கத்தைத் தெளிவுபடுத்துவதற்குப் பழையவுரையாசிரியர், ''மன்னனென்றது, தலைமகனை'' (ஐங்.பழைய.ப.90) என்று விளக்கிச் செல்கின்றார். இதுபோன்றே, ஐங்குறுநூற்றின் குறிஞ்சித் திணையைச் சார்ந்த 299ஆம் பாடல்,

''குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்

பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையு

மஞ்சி லோதி யசைநடைக் கொடிச்சி

கண்போன் மலர்தலு மரிதிவ

டன்போற் சாயன் மஞ்ஞைக்கு மரிதே'' (ஐங்.299)

என்று அமைகின்றது. இப்பாடலின் சூழல் விளக்கம், 'இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய நிலைமைக்கண் தலைமகள் ஆயவெள்ளத்தோடு கூடி நிற்கக் கண்ட தலைமகன் மகிழ்ந்தவுள்ளத்தானாய்த் தன்னுள்ளே சொல்லியது' என்பதைக் குறிப்பதாக உள்ளது. இதில் குன்றநாடன் என்பது தலைவனைச் சுட்டுவதாகத் தோன்றும் என்பதைக் கருத்தில் கொண்டு பழையவுரையாசிரியர், ''குன்றநாடனென்றது அந்நிலத்துக்குரியனாகிய முருகனை'' (ஐங்.பழைய.ப.93) என்று தெளிவுபடுத்திச் செல்கின்றார். இங்கே குறிக்கப்பட்ட பாடல் குறிஞ்சி நிலத்துக்குரியது ஆதலாலும், குறிஞ்சி நிலத் தெய்வமான முருகன் தலைவனாகச் சுட்டப்படுகின்றான். இதற்கு விளக்கம் அளிக்கும் உ.வே.சாமிநாதையர் ''தலைவியது

தந்தையுமாம்''[24] என்று தம் குறிப்புரையில் கூறுகின்றார். இதன்மூலம் குறிஞ்சிநிலத் தலைவிக்கு முருகன் தந்தையாகவும் அழைக்கப்படுகின்றான், என்பது புலனாகும்.

''மாலை வெண்காழ் காவலர் வீச
நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்
புன்புல நாடன் மடமக
ணலங்கிளர் பணைத்தோள் விலங்கின செலவே'' (ஐங்.421)

என்னும் அடிகளில் வரும் 'வெண்காழ்' என்ற சொல்லுக்கு, ''வெண்காழென்றது, மாலைக்காலத்து முயலெறியுந் தடியை'' (ஐங்.பழைய.ப.125) என்று பழையவுரையாசிரியர் சுட்டுகின்றார். இதற்கு அ.தெட்சிணாமூர்த்தி, ''வெண்காழ் என்றது காவலர் கைக்கொண்ட தடியாகும். முதிர்ந்த மரத்தினால் செய்த கைத்தடியைக் காவலர் தரையில் மோதி ஒலியெழுப்பினர் என்க. இங்குக் கூறப்பட்ட 'வெண்காழ்' என்பது வளைதடியாகவும் கொள்ளப்பட்டது. வேட்டையாடுவோர் வளைதடியை வீசுவது வழக்கமாகும். காவலர் முயலை வேட்டையாடுதற் பொருட்டு வளைதடியை வீசியெறிந்தனர் என்க. பழைய உரையாசிரியர் இக்காழினை முயலெறியும் தடியெனவே கருதினார்''[25] என்றும் விளக்கிச் செல்கின்றது. மேலும், இவ்வுரை வெண்காழ் என்பதற்கு 'வைரம் பாய்ந்த வெள்ளிய மரத்தடி' என்று அருஞ்சொற்பொருள் கூறுகின்றது. இதன் வாயிலாக, சொற்கள் அந்தந்தக் காலத்திற்கு ஏற்றவாறு மக்களால் பொருள் கொள்ளப்படுகின்றன என்பதை அறிந்து கொள்ள இயலும்.

**சொல்முடிபு பொருள் முடிபு கூறுதல்**

தமிழ் இலக்கியங்களுக்கு உரையெழுதிய உரையாசிரியர்கள் பல்வேறு உரைமரபுகளைப் பின்பற்றினர். தொல்காப்பியச் சொல்லதிகாரம் எச்சவியலில் பொருள்கோள் என்னும் பகுதி பொருள் கொள்ளும் முறை பற்றிச் சுட்டுகின்றது. இது சில செய்யுள்களில் சொற்கள் ஆற்றொழுக்காகக் கிடப்பதாகவும் சில செய்யுள்களில் சொற்கள் முறைமாறிக் கிடப்பதாகவும் இடம்பெற்றுள்ளதையும், அவற்றை முன்னும் பின்னுமாக மாற்றிக் கூட்டுவதன் மூலம் பொருள் காண இயலுமென்பதையும் புலப்படுத்தும். தமிழ் நூல்களுக்குத் தொடக்க காலத்தில் உரை எழுதிய உரையாசிரியர்கள் பாடல்களுக்கான பொருளை ஆற்றொழுக்காகவே

கூறிச் சென்றனர். இருப்பினும் இலக்கண உத்திகளைத் தம் உரையிடையே பின்பற்றியுள்ளனர். பாடல்களில் இடம்பெற்றுள்ள எந்தச் சொல்லை வேறெந்தச் சொல்லோடு சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும் என்பதை அறிந்து அதற்கு ஏற்றாற்போல் எழுவாய் பயனிலைகளை முடித்துக் காட்டுகின்றனர். ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியர் ஆற்றொழுக்காகப் பொருள் கூறிச் சென்றாலும், உரையின் சில இடங்களில் சொற்களை முன்பின்னாக மாற்றிக் கூட்டிப் பொருள் முடிபு காணுகின்றார். இவர் பாடலின் மூன்று அடிகளிலுள்ள சொற்களையும் முன்பின்னாக மாற்றிக் கூட்டியுரைப்பதை,

> ''நின்னொன்று வினவுவல் பாண நும்மூர்த்
> திண்டேர்க் கொண்கனை நயந்தோர்
> பண்டைத் தந்நலம் பெறுபவரோ மற்றே'' (ஐங்.137)

என்ற நெய்தல் திணைப் பாடலின் உரை உணர்த்தும். இப்பாடலுக்கு உரை எழுதும் பழையவுரையாசிரியர், ''திண்டேர்க் கொண்கனை நயந்தோர் நும்மூரிற் பண்டைத் தந்நலம் பெறுவாருளரோ வெனக் கூட்டுக''(ஐங்.பழைய.ப.41) என்று சுட்டுகிறார். இதில், இப்பாடலின் இரண்டாம் அடியிலுள்ள சொல்லை முதல் அடியுடனும், அடுத்ததாக மூன்றாம் அடியுடனும் கூட்டி உரைக்கின்றார்.

ஓர் அடிக்குள்ளாகவே கூட்டியுரைக்கும் தன்மையும் பழைய உரையாசிரியரின் உரை இயல்பாக உள்ளது. இதனை,

> ''வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
> காணிய சென்ற மடநடை நாரை
> பசிதின வல்கும் பனிநீர்ச் சேர்ப்ப
> நின்னென் றிரக்குவெ னல்லேன்
> றந்தனை சென்மோ கொண்டவிவ ணலனே'' (ஐங்.159)

என்ற பாடல் தெளிவுபடுத்துகின்றது. இப்பாடலிலுள்ள சொற்களைக் கூட்டியுரைக்கும் பழையவுரையாசிரியர், ''நீகொண்ட இவள் நலன் செல்லெனக் கூட்டுக'' (ஐங்.பழைய.ப.48) என்கிறார்.

> ''கேழ லுழுதெனக் கிளர்ந்த வெருவை

விளைந்த செருவிற் றோன்று நாடன்

வாரா தவணுறை நீடி னேர்வளை

யிணையீ ரோதி நீயழத்

துணைநனி யிழக்குவென் மடமை யானே'' (ஐங்.269)

என்ற அடிக்கான பழையவுரையில், ''நீ அழ வாராது அவணுறை நீடினெனக் கூட்டுக'' (ஐங்.பழைய.ப.82) என இறுதி மூன்று அடிகளிலும் உள்ள சொற்களை முன்பின்னாக மாற்றிக் கூட்டியுரைக்கின்றார்.

ஐங்குறுநூற்றின் 441ஆம் பாடல் பாலைத் திணைக்கு உரியது ஆகும். இப்பாடல்,

''ஐய வாயின செய்யோள் கிளவி

கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென

நோய்நன்கு செய்தன வெமக்கே

யாமுறு துயரமவ ளறியினோ நன்றே'' (ஐங்.441)

என்று அமைகின்றது. இதனை, ''கார்நாளுருமொடு நோய்நன்கு செய்தன, செய்யோள் கிளவியெனக் கூட்டுக'' (ஐங்.பழைய.ப.128) என்று கூட்டியுரைக்கின்றது, பழையவுரை. இப்பாடலின் அடிகளில், இரண்டாம் அடியிலுள்ள சொற்களை முதலிலும் மூன்றாம் அடியிலுள்ள சொற்களை இரண்டாவதாகவும் முதல் அடியிலுள்ள சொற்களை மூன்றாவதாகவும் கூட்டியுரைக்கும் தன்மையினைக் காண இயலுகின்றது. பழைய உரையாசிரியர் பாடலுக்கான பொருளோ, தொடருக்கான விளக்கமோ அளிக்கவில்லை. இருப்பினும் சில சொற்களை மட்டும் முன்பின்னாக மாற்றிக் கூட்டுகிறார். இவர் பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்குப் பொருள் கூறும் தன்மையினை விடுத்து, சில பாடல்களில் கூட்டியுரைக்கும் முறையை மட்டும் தம் உரையிடையே சுட்டிச் செல்கின்றார்.

**வேறுபாடமும் வேறு உரையும் கூறுதல்**

பழங்காலத்தில் தோன்றிய இலக்கிய, இலக்கண நூல்கள் யாவும் ஓலைச்சுவடிகளிலேயே எழுதப்பட்டிருந்தன. அத்தகைய கிடைத்தற்கு அரிய

ஓலைச்சுவடிகளைத் தொகுத்து பதிப்பித்தவர்களில் சி.வை.தாமோதரம்பிள்ளை, ஆறுமுக நாவலர், உ.வே.சாமிநாதையர் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இவ்வாறு பதிப்பிக்கப்படும் நூல்கள் ஓலைச்சுவடிகளிலிருந்து பெயர்த்து எழுதப்பட்டவையே ஆகும். அவ்வாறு எழுதப்படும் போது பல்வேறு காரணங்களால் மூலச்சொல்லில் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. இத்தகைய மாற்றமே பாடவேறுபாடு என்று அழைக்கப்படுகின்றது. இதுபோன்ற பாடவேறுபாடுகளைக் களைவதற்கு மூலபாடத்திற்கு உரையெழுதும் உரையாசிரியர்கள் வேறு பிரதிகளைக் கொண்டு ஐயப்பாடுகளைச் சரிசெய்து கொள்கின்றனர். பாடலின் சில இடங்களில் இரண்டு பாடங்களும் பொருத்தமாகத் தோன்றின், அதற்கும் சேர்த்து உரை கூறிச் செல்கின்றனர். இத்தகைய உரைப்போக்கு ஐங்குறுநூற்றுப் பழையவுரையிலும் காணப்படுகின்றது. இந்நூலின் பாடல்கள் மிகக் குறைந்த அடிகளைக் கொண்டவை. இருப்பினும் சொற்கள் செறிவுடனும் பொருள் நுட்பத்துடனும் அமைந்திருக்கும். இந்நூலுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையும் இதற்குப் பொருந்தும். ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியர் மூலபாடத்தில் வேறுபாடு ஏற்படின், அதற்கும் சேர்த்து உரை கூறி இருக்கின்றார். பாடலில் பொருள் மாறுபாடு இல்லையாயின் வேறுபாடத்தினை மட்டும் குறிக்கின்றார். இந்த இரண்டு வகையான முறைகளுமே இவ்வுரையாசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஐங்குறுநூற்றின் 20ஆம் பாடல் மருதத்திணையைச் சார்ந்தது ஆகும். இப்பாடலில் இடம்பெற்றுள்ள ‘சினைசீக்கும்’ என்ற சொல்லுக்கு உரை கூறிவிட்டு, அதற்கு வேறுபாடமும் கூறி இருக்கின்றார்.

‘‘அறுசில் கால வஞ்சிறைத் தும்பி
நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை சீக்குங்
காம்பு கண்டன்ன தூப்புடை வேழத்துத்
துறை நணி யூரனை யுள்ளியென்
னிறையே ரெல்வளை நெகிழ்போ டும்மே’’ (ஐங்.20)

என்னும் பாடலின் சூழல் விளக்கம், ‘தலைமகளை வாயில் நேர்வித்தற் பொருட்டாக, காதலர் கொடுமை செய்தாராயினும் அவர்திறம் மறவாதொழியல் வேண்டும் என்ற முகம் புகுகின்ற தோழிக்கு, என் கைவளை நில்லாதாகின்றது அவரை நினைத்ததன் பயனன்றே; இனி அமையும் எனத் தலைமகள் சொல்லியது’

என்று இடம்பெற்றுள்ளது. இப்பாடலின் இரண்டாம் மூன்றாம் அடிகளில் உள்ளுறை இடம்பெற்றுள்ளது. இதனை, ‘‘தாமரைப் பூவகத்துளதாகிய தும்பிச் சினையை வேழம் சீக்கும் எ-து, தன்மாட்டு என் புதல்வன் உறைதலையும் விலக்குவாராகிய பொதுமகளிரையுடையான் எ-று’’ என்று விளக்குகிறார். இப்பாடலின் இரண்டாம் அடியில் ‘பூச்சினைச் சீக்கும்’ என்பதற்கு ‘பூச்சினை சேக்கும்’ என்ற பாடமும் உள்ளது. இது பாடலில் பொருள் மாறுபாட்டை ஏற்படுத்துகின்றது. எனவே, அப்பாடத்திற்கு, ‘‘‘சினைசீக்கும்’ என்று பாடமோதுவார் தும்பிச்சினை வருந்த வேழம் தங்குமென்று பொருளுரைப்ப’’(ஐங்.பழைய.ப.9) என்று பொருத்தமான வேறு உரையையும் கூறிச் செல்கின்றார். ஒரு சொல்லில் ஏற்படும் சிறிய வேறுபாடு பாடலின் பொருளிலேயே மாற்றத்தை ஏற்படுத்தும் என்பதை உணர்ந்து நுட்பமான உரை வரைந்திருக்கின்றார், பழையவுரையாசிரியர். இவர் ஐங்குறுநூற்றின் 26 ஆம் பாடலுக்கு வேறுரை ஒன்றினையும் சுட்டிச் செல்கின்றார்.

‘‘கரந்தையஞ் செறுவிற் றுணைதுறந்து கள்வன்
வள்ளை மென்கா லறுக்கு மூர
னெம்மும் பிறரு மறியா
னின்ன னாவ தெவன்கொ லன்னாய்’’ (ஐங்.26)

என்னும் பாடலின் சூழல்விளக்கம் ‘‘தலைமகற்கு வாயிலாகப் புகுந்தார் ‘நின் முனிவிற்கு அவன் பொருந்தா நின்றான்’ என்றவழித் தலைமகட்குத் தோழி, ‘அவன்பாடு அ∴தில்லை’ என்பதுபடச் சொல்லியது’’ என்று அமைகின்றது. இப்பாடலுக்கான உரையாக, ‘‘துணை துறந்து……மூரன்’ எ-து, தான் துணையாகக் காதலித்து ஒழுகுகின்ற பரத்தையையு நீங்கி எம்மையும் வருத்தி ஒழுகுவான் எ-று’’ என்று கூறிவிட்டு, வேறுரை எனக் குறிப்பிட்டு, ‘‘கரந்தையஞ் செறுவிற் றுணை துறந்து’ எ-து, நின்னைத் துறந்து எ-று. பரத்தையருள்ளும் ஒருத்தியை விடுவதும் ஒருத்தியைப் பற்றுவதுமாகி அவர்களை வருத்துகின்றான் எ-று. ‘எம்மும் பிறரு மறியான்’ எ-து, எம்மையும் பிறரையும்……’’ (ஐங்.பழைய.ப.11) என்னும் உரையினையும் சுட்டுகின்றார். மேற்குறிப்பிட்டுள்ள பாடலுக்கான உரையில் முதலில் இரு வரிகளையுடைய உரை பழையவுரை என்றும் அடுத்த வரிகள் வேறுரை என்றும் பழையவுரையாசிரியரால் சுட்டப்பெற்றுள்ளன. இந்த வேறுரை முதல் இரு வரியிலான பழையவுரையை விரித்துக் கூறும் அமைப்பிலேயே காணப்படுகின்றது.

இப்பாடலுக்குக் குறிப்பிடப்பட்டுள்ள வேறுரை அவர் காலத்திலேயே ஐங்குறுநூற்றுக்கு மற்றுமொரு உரை நிலவியதை உணர்த்தும். ஒரு பாடல் வெவ்வேறு வகையான பொருள் தந்து விளக்குவதற்கான சாத்தியக் கூறுகளை ஐங்குறுநூற்றின் மேற்கண்ட பாடலின் உரைவழி அறிய இயலுகின்றது. ஐங்குறுநூற்றின் 271ஆம் பாடலில் பழையவுரையாசிரியர் வேறுபாடம் சுட்டிச் செல்கின்றார். இதனை,

''அவரை யருந்த மந்தி பகர்வர்
பக்கிற் றோன்று நாடன் வேண்டிற்
பசுப்போல் பெண்டிரும் பெறுகுவன்
றொல்கே ளாகலி னல்குமா லிவட்கே'' (ஐங்.271)

என்னும் அடிகளுக்கான பழையவுரை எடுத்துரைக்கும். இவ்வுரையில் ''பசுப்போல் பெண்டிரும்' என்றது, வரைவெதிர் கொள்ளாத் தமர் மறுத்த தீங்கினைத் தன்கண் மேலேற்றி, இத்தீங்கு செய்யாது தான் நினைத்தவழியொழுகும் குணமுடைய பெண்டிர் பலரையும் பெறுகுவன், அவனே வேண்டினென்று கூறியவாறாகக் கொள்க'' என்று கூறிவிட்டு, ''பசுப்போற்பெண்டிரும் என்று பாடமோதுவாருமுளர்'' (ஐங்.பழைய.ப.83) என வேறுபாடத்தையும் குறிப்பிடுகின்றார். இவை அனைத்தும் ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியரின் உரைப்புலமையை நன்கு தெளிவுபடுத்தும்.

**கருத்துரைத்தல்**

தமிழ் இலக்கிய, இலக்கண உரையாசிரியர்கள் உரையின் இடையே பாடலின் கருத்தைச் சுட்டிச் செல்வர். இத்தகைய உரைப்போக்கு புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையில் இருபதுக்கும் மேற்பட்ட பாடல்களில் காணப்படுகின்றது. இப்பகுதியில் 'இதன் கருத்து' என்று பாடலின் மையக்கருத்து சுட்டப்பெறும். இதேபோன்று ஐங்குறுநூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையிலும் கருத்து என்று சுட்டப்பெற்றுள்ள ஒரு பாடலின் உரை அமைகின்றது. இதனை, 'பாணற்கு வாயில் மறுத்த தலைமகள் பின் அப்பாணனோடு தலைமகன் புகுந்து தன் காதன்மை கூறியவழிச் சொல்லியது' என்ற சூழல் விளக்கம் அமைந்த,

''முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
வகன்பெரு வட்டி நிறைய மனையோ

ளரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர

மாணிழை யாய மறியுநின்

பாணன் போலப் பலபொய்த் தல்லே'' (ஐங்.47)

என்னும் பாடல் சுட்டும். இப்பாடலின் நான்காம் அடிக்கு உரையெழுதும் பழையவுரையாசிரியர், ''மாணிழையாய மறியுமென்ற கருத்து: நீ கூறுங் காதன்மை பொய்யென்பது ஆயமெல்லா மறியும்; நான் இதனை மெய்யென்று கொள்ளினும் அவர் பொறாரென்பதாம்'' என்று கூறிவிட்டு, முதல் மூன்று அடிகளையும் கூட்டியுரைத்து, ''கெடிறு சொறிந்த வட்டி நிறைய மனையோள் பயறுநிறைக்கு மூரவென்றது, நீ நின்காதல் சொல்லிவிடுத்து அவர் சிறந்த காதல் சொல்லி வரவிடப் பெறுவாய்'' (ஐங்.பழைய.ப.17) என்கிறார். பரத்தமை ஒழுக்கம் காரணமாகப் பிரிந்த தலைமகன் மீண்டும் இல்லிற்குத் திரும்புவதற்காகப் பாணனைத் தூது அனுப்புகின்றான். தலைவி அதற்கு வாயில் மறுக்கவே, தலைவன் மீண்டும் பாணனுடன் வந்து வாயில் நேர்கின்றான். அதற்குத் தலைவி, வாயிலாக வந்த பாணனைப் போலவே நீயும் பல்வகைப் பொய்களையும் கூறுவதில் வல்லவன் என்று இடித்துரைக்கின்றாள். இச்செய்தியையே பாடலின் கருத்தாகப் பழையவுரையாசிரியர் சுட்டுகின்றார். இது ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியரின் கருத்துக் கூறும் உரைத்திறனைப் புலப்படுத்தும்.

## தொகுப்புரை

ஐங்குறுநூற்றுக்கான பழையவுரை பதவுரை பொழிப்புரை கூறாமல், சில இடங்களில் திரிசொற்களின் பொருளைக்காட்டி, உள்ளுறை இறைச்சியை விளக்குவதைக் காணுகையில் பாடம் சொல்லும் அளவில் அமைந்ததிவ்வுரை என உணரலாம் என்னும் கு.வெ.பாலசுப்பிரமணியத்தின் கருத்து குறிப்பிடத்தக்கதாகும். ஐங்குறுநூற்றுக்கு 197 பாடல்களுக்கு மட்டும் பழையவுரை காணப்படுகிறது. 301 பாடல்களுக்குப் பழையவுரை இல்லை. இந்நூலுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளின் விரிவான உரை - ஏழு வரிகள் முதல் பத்து வரிகளைக் கொண்டதாகவும், நடுநிலையான உரை - மூன்று முதல் ஆறு வரிகளைக் கொண்டதாகவும், ஓரிரு வரியிலான உரை - ஒன்று அல்லது இரண்டு வரிகளைக் கொண்டதாகவும், வாக்கிய உரை - வாக்கிய அமைப்பைக் கொண்டதாகவும், சிதைந்த உரை - உரை

இடையிடையே காணப்படாத தன்மையும் எனத் தனித்தனியாகப் பகுத்து அறியப்பட்டுள்ளது.

ஐங்குறுநூற்றின் 129, 130 ஆகிய இரண்டு பாடல்களும் அவற்றுக்கான உரையும் கிடைக்கப்பெறவில்லை. முதற்பாடலுக்கு விரிவான உரை கூறும் பழையவுரையாசிரியர் 458ஆம் பாடலுக்கு ஒரு சொல்லில் உரை கூறுகின்ற, இருவேறுபட்ட தன்மைகள் காணப்படுகின்றன.

ஐங்குறுநூற்றின் 1, 4, 21, 151, 267 ஆகிய ஐந்து பாடல்களில் உள்ளுறையையும் 177ஆம் பாடலில் இறைச்சியையும் பழையவுரையாசிரியர் விளக்குகிறார். தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலிலிருந்து மட்டும் இரண்டு மேற்கோள்கள் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். பழையவுரையின் நான்கு பாடல்களில் ஐந்து இடங்களில் இலக்கணக் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. இலக்கண உத்திகள் மூலம் 366, 367, 369, 423 ஆகிய நான்கு பாடல்களிலும் திணைகள் வகுத்துக் கூறப்பட்டுள்ளன.

ஐங்குறுநூற்றில் மொத்தம் ஐம்பது பத்துக்கள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தும் தனித்தனி தலைப்புகளைக் கொண்டு விளங்குகிறது. நெய்தல் திணையின் பாடல்கள் சொல் வகையால் தொடர்ச்சி பெறுதலேயன்றி கிளவி வகையால் தொடர்ச்சி பெற்றுள்ளன. பாடல்களின் பயன் கூறியும் சில சொற்களுக்குச் சிறப்பு விளக்கமும் தருகின்றார். வேறுபாடம் கூறுதலும் மற்றும் அத்தகைய பாடங்களுக்கு வேறு உரை கூறுதலும் பழையவுரையாசிரியரின் உரை மரபாக உள்ளது. கருத்துரைத்தல் என்னும் பகுதியில் 'இதன் கருத்து' என்று பாடலின் மையக் கருத்து விளக்கப்பெற்றுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கிய ஆய்வுகளின் மதிப்பீடு, ப.144
2. மு.அருணாச்சலம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.81
3. தொல்.பொரு.அகம்.நூ.50
4. கோ.இளவழகன்(ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், செய், ப.115
5. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக்.214,215
6. அ.தெட்சிணாமூர்த்தி(உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக்.319,320
7. அ.சதீஷ், சங்க இலக்கிய உரைகள், ப.121
8. தொல்.பொருள்.அகம்.நூ.225
9. தமிழண்ணல், தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள், பாகம்-1, ப.98
10. கோ.இளவழகன்(ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், செய், ப.116
11. தொல்.பொருள்.நச்.நூ.23
12. மேலது, நூ.230
13. அ.சதீஷ், சங்க இலக்கிய உரைகள், ப.123
14. மேலது, ப.127
15. பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.128
16. அ.சதீஷ், சங்க இலக்கிய உரைகள், ப.130
17. தொல்.பொருள்.அகத்.நூ.13
18. மேலது, நூ.3
19. மேலது, நச்.உரை, ப.189
20. மேலது, அகத்.நூ.9
21. அ.தெட்சிணாமூர்த்தி(உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.523
22. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.365

23. மேலது, ப.366

24. உ.வே.சாமிநாதையர்(ப.ஆ), ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும், ப.134

25. அ.தெட்சிணாமூர்த்தி(உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.91

# இயல் - ஐந்து

# அகநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான அகநானூற்றை இரா.இராகவையங்கார் உதவியுடன் வே.இராஜகோபாலையங்கார் பதிப்பித்தார். இந்நூலின் முதற்பதிப்பு 1918ஆம் ஆண்டு அகநானூற்றின் முதற்பகுதி மட்டும் பதிப்பிக்கப்பட்டது. இரண்டாம் பதிப்பு 1920ஆம் ஆண்டு முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும் சேர்த்துப் பதிப்பாகி வெளிவந்தது. மூன்றாம் பதிப்பு 1923ஆம் ஆண்டு 'எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும்' என்று வெளிவந்தது. 1926ஆம் ஆண்டு 'எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு முதலாவது களிற்றியானை நிரை முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழையவுரையும் இறுதி முப்பது பாட்டிற்கு ஸ்ரீ வத்ஸ சக்கரவர்த்தி எழுதிய குறிப்புரையும்' என்று வெளிவந்துள்ளது. அடுத்ததாக, 1933ஆம் ஆண்டு தொண்ணூறு பாடல்களுக்கான உரையுடன் 'அகநானூறு மூலமும் பழையவுரையும்' என்ற பதிப்பு வெளிவந்துள்ளது. இதே ஆண்டு 'எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூன்றாவது நித்திலக்கோவை மூலம்' என்று பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது. அவ்வகையில், 'அகநானூற்றுப் பழையவுரையின் போக்கையும் திறனையும்' ஆராய்ந்து அறிந்து கொள்ளும் விதமாக, இவ்வியல் அமைகின்றது.

## அகநானூறு தொகுப்பு முறை

சங்க எட்டுத்தொகை நூல்களில் அகநானூற்றின் தொகுப்பு முறையியலை நோக்கும் பொழுது தனித்த முறையியலைக் கொண்டு விளங்குகின்றது. இத்தொகை

23. மேலது, ப.366

24. உ.வே.சாமிநாதையர்(ப.ஆ), ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும், ப.134

25. அ.தெட்சிணாமூர்த்தி(உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.91

# இயல் - ஐந்து

# அகநானூற்றுப் பழையவுரைப் போக்கும் திறனும்

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான அகநானூற்றை இரா.இராகவையங்கார் உதவியுடன் வே.இராஜகோபாலையங்கார் பதிப்பித்தார். இந்நூலின் முதற்பதிப்பு 1918ஆம் ஆண்டு அகநானூற்றின் முதற்பகுதி மட்டும் பதிப்பிக்கப்பட்டது. இரண்டாம் பதிப்பு 1920ஆம் ஆண்டு முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும் சேர்த்துப் பதிப்பாகி வெளிவந்தது. மூன்றாம் பதிப்பு 1923ஆம் ஆண்டு ‘எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும்’ என்று வெளிவந்தது. 1926ஆம் ஆண்டு ‘எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு முதலாவது களிற்றியானை நிரை முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழையவுரையும் இறுதி முப்பது பாட்டிற்கு ஸ்ரீ வத்ஸ சக்கரவர்த்தி எழுதிய குறிப்புரையும்’ என்று வெளிவந்துள்ளது. அடுத்ததாக, 1933ஆம் ஆண்டு தொண்ணூறு பாடல்களுக்கான உரையுடன் ‘அகநானூறு மூலமும் பழையவுரையும்’ என்ற பதிப்பு வெளிவந்துள்ளது. இதே ஆண்டு ‘எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூன்றாவது நித்திலக்கோவை மூலம்’ என்று பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது. அவ்வகையில், ‘அகநானூற்றுப் பழையவுரையின் போக்கையும் திறனையும்’ ஆராய்ந்து அறிந்து கொள்ளும் விதமாக, இவ்வியல் அமைகின்றது.

## அகநானூறு தொகுப்பு முறை

சங்க எட்டுத்தொகை நூல்களில் அகநானூற்றின் தொகுப்பு முறையியலை நோக்கும் பொழுது தனித்த முறையியலைக் கொண்டு விளங்குகின்றது. இத்தொகை

நூல் நானூறு பாடல்களைக் கொண்டுள்ளது. அகநானூற்றின் 400 பாடல்களில் 1 முதல் 120 வரையிலான பாடல்கள் களிற்றியானைநிரை எனவும் 121 முதல் 300 வரையுள்ள பாடல்கள் மணிமிடைப் பவளம் எனவும் 301 முதல் 400 வரையிலான பாடல்கள் நித்திலக்கோவை எனவும் பகுக்கப்பெற்றுள்ளன. இப்பகுப்புகள் அகநானூற்றைத் தொகுத்த தொகுப்பாசிரியரால் வகைப்படுத்தப்பட்டவை ஆகும். இதன் திணைப்பகுப்பை எளிமையாகப் புரிந்து கொள்ளும் வகையில் 1, 3, 5, 7 என்ற ஒற்றையெண் பெற்ற செய்யுள்கள் பாலைத் திணையாகவும் 2, 8, 12, 18 என்ற எண்களைப் பெற்ற செய்யுள்கள் குறிஞ்சித் திணையாகவும் 4, 14, 24, 34 என்ற எண்களைப் பெற்ற செய்யுள்கள் முல்லைத் திணையாகவும் 6, 16, 26, 36 என்ற எண்களைப் பெற்ற செய்யுள்கள் மருதத் திணையாகவும் 10, 20, 30, 40 என்ற எண்களைப் பெற்ற செய்யுள்கள் நெய்தல் திணையாகவும் அமையுமாறு தொகுக்கப்பெற்றுள்ளன. இத்தகைய அகநானூற்றின் தொகுப்புமுறை ஏனைய எட்டுத்தொகை நூல்களின் தொகுப்பு முறைக்குச் சான்றாக அமையும். இவை அனைத்தும் அக்காலத்தில் தொகுப்பு குறித்த பல்வேறு முறையியல்கள் இருந்துள்ளமையைப் புலப்படுத்தும். அகநானூற்றின் ஒவ்வொரு பாடலுக்குக் கீழேயும் ‘என்பது’ என்ற பகுதி காணப்படுகிறது. இப்பகுதி அப்பாடல் எந்தச் சூழலில் அமைந்துள்ளது என்பதை விளக்குகிறது. இத்தகைய சூழல் விளக்கம் ஐங்குறுநூற்றுப் பாடல்களில் கருத்துரை என்று சுட்டப்படுகிறது. அகநானூற்றின் தொகுப்பாசிரியர் சில பாடல்களுக்கு ஒரு சூழல் விளக்கமும் சில பாடல்களுக்கு இரண்டு சூழல் விளக்கமும் அளிக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**அகநானூற்றுப் பழையவுரை**

அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரை குறித்துப் பல்வேறு உரை ஆராய்ச்சியாளர்கள் பல்வேறு கருத்துக்களைத் தெரிவிக்கின்றனர். “களிற்றியானை நிரையுள் முதற் தொண்ணூறு பாட்டுக்குப் பழைய உரையொன்று கிடைத்து அதனைக் கம்பர் விலாச வெளியீடாக ஸ்ரீவத்ஸ சக்கரவர்த்தி ராஜகோபாலார்யன் வெளியிட்டார். இவ்வெளியீடு அட்சய ஆண்டில் நிகழ்ந்துள்ளது. பதவுரையாயும் குறிப்புரையாயும் அமைந்ததிவ்வுரை. செய்யுளை உணரப் பெருந்துணை செய்வதாய் அமைந்த இவ்வுரை இலக்கியப் பயிற்சியுடையோர்க்கே பொருந்துவது”[1] என்று கு.வெ.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார். அகநானூற்றின் முதற்றொண்ணூறு பாடல்களுக்கு மட்டுமே பழையவுரை கிடைக்கப்பெற்றுள்ளது. அகநானூற்றின் உரை

குறித்து, ''இங்கே அவர்(இராகோபாலையங்காரை) பழைய குறிப்புரை ஒன்றும், வேறுரை ஒன்றும் கிடைத்தன என்று சொல்லிச் சில உரைக்குறிப்புகளை அச்சிட்டிருக்கிறார். இரண்டு உரைக்குறிப்புகளும் தனித்தனியாக பிரித்து அச்சிடப்பெறவில்லை. குறிப்புரையானது முதல் 90 பாடல்களுக்கு மட்டுமே உள்ளது. வேறோர் உரை என்பது இடையிடையே 51 பாட்டுகளுக்கு மட்டுமே உள்ளது என்று அவர் குறிப்பிட்டுள்ளார். இந்த உரையினைத் தனியே பிரித்தறிவது எளிதான காரியம் அல்ல என்பதால் இதனை குறித்துக் யாரும் எழுதவில்லை''[2] என்று அ.சதீஷ் தம் கருத்தை வெளிப்படுத்துகின்றார். அகநானூற்றுப் பழையவுரையில், உள்ளுறை உவமத்தை விளக்குதல், இறைச்சியை விளக்குதல், சொற்பொருள் கூறுதல், சொற்றொடருக்கு விளக்கம் தருதல், சொன்முடிபு பொருள்முடிபு கூறுதல், பழமரபுக் கதை கூறல், வடசொல்லாட்சி, இசை அறிவு, பிறநூற் கருத்துக்களைப் பயன்படுத்தல் ஆகியவை பழையவுரையாசிரியரின் உரை மரபுகளாக அமைந்துள்ளன.

**உள்ளுறை உவமத்தை விளக்குவது**

உள்ளுறை என்பது பாடலினுள் உட்பொருளாகப் பொருந்தியுள்ளதாகும். இது தெய்வம் அல்லாத இயங்குதிணை, நிலைத்திணைக் கருப்பொருள்களை இடமாகக் கொண்டு பிறக்கும் இயற்கைக்கு மனிதப்பொருள் உள்நோக்கத்துடன் ஏற்றப்படுகின்றது. இதனைத் தொல்காப்பியர்,

> ''உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம்எனக்
> கொள்ளும் என்ப குறிஅறிந்தோரே''[3]

என்னும் நூற்பாவின்வழி எடுத்துரைக்கின்றார். அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற 2, 6, 8, 12, 26, 30, 36, 40, 46, 52, 56, 60, 68, 70, 72, 88, 90 ஆகிய 17 பாடல்களின் பழையவுரையில் உள்ளுறை விளக்கப்பெற்றுள்ளது.

> ''பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
> அறியாது உண்ட கடுவன் அயலது
> கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது,
> நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்'' (அகநா.2:4-7)

என்னும் அடிகளுக்கான உள்ளுறையாக, ‘‘கடுவனது தேனை யறியாது நுகர்ந்து, பின்பு தனது தொழிலாகிய மரமேறலுமாட்டாது வேறோரிடத்துச் செல்லவுமாட்டாது தனக்கு அயலாகிய சந்தனத்தின் நிழலிற் பூமேலே உறங்குகின்றாற்போல நீயும் இக்களவொழுக்கமாகிய இன்பம் நுகர்ந்து, நினது தொழிலாகிய அறநெறியையும் தப்பி, இக்களவினை நீங்கி வரையவு மாட்டாது இக்களவொழுக்கமாகிய இன்பத்திலே மயங்கா நின்றாய் என்றவாறு’’ (அகநா.பழைய.ப.6) எனப் பழையவுரையாசிரியர் சுட்டுகிறார்.

‘‘சுடர்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து,
அம்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்எயிற்று நீர்நாய்,
முள்அரைப் பிரம்பின் மூதரில் செறியும்’’ (அகநா.6:16-19)

என்பதற்கு, ‘‘இதன் உள்ளுறை: நீர்நாய் வாளைக்குக் காவலாகிய வள்ளையினது நிலையை நெகிழ்த்து, இழிந்ததாகிய வாளையை நுகர்ந்து, பிரம்பாகிய முதிய தூற்றிலே தங்கினாற்போல, நீயும் பரத்தையர்க்குக் காவலாகிய தாய் முதலாயினாரது நிலைமையை நெகிழ்த்துக், குலமகளிரல்லாத விலைமகளிரை நுகர்ந்து, முன்பு நுமக்குண்டாகிய எங்கள் பழைமையைப் பற்ற ஒரு பயன் கருதாது தங்குதன் மாத்திரத்திற்கு எம்மில்லில் வந்தீரென்றாராம்’’ (அகநா.பழைய.ப.13) என்று கூறுகின்றார், பழையவுரையாசிரியர். இப்பாடலுக்கான உள்ளுறையைக் குறிப்பிடும் முன் ‘இதன் உள்ளுறை’ என்று சுட்டிப் பின் உள்ளுறையைக் குறிப்பிடுகின்றார்.

‘‘ ……… ………. ……… பெரிய
கேழல் அட்ட பேழ்வாய் ஏற்றை
பலாஅமல் அடுக்கம் புலர ஈர்க்கும்’’ (அகநா.8:5-7)

என்னும் அடிகளுக்கான பழையவுரை, ‘‘பெரிய கேழலட்ட என்பது முதலாகப் புலரவீர்க்கும் என்பதிறுதியாக நின்ற உள்ளுறைப்பொருள்: புலியானது தான் நுகர்தற்பொருட்டுக் கேழலையட்டுப் பழ நாற்றத்தையுடைய பலாவமலடுக்கம் புலரவீர்த்தாற்போல, அவரும் இன்பந்துய்த்தற்பொருட்டு வந்து நம்மைக்கூடி, அக்கூட்டத்தாலே புகழ்ச்சியை யுடைத்தாகிய நம் குடியை இகழ்ச்சியுடைத்தாம்படி பண்ணினர் என்றவாறு’’ (அகநா.பழைய.ப.17) என்று அமைகின்றது. இப்பாடலில்

சிறிது மாறுபாடாக, உள்ளுறை இடம்பெற்றுள்ள பாடல் அடிகளைக் கூறி இதன் உள்ளுறைப்பொருள் எனச் சுட்டி, பாடலின் உள்ளுறையை விரித்துச் செல்கின்றார்.

> ''…….. …………… வழையொடு
> வாழை ஓங்கிய தாழ்கண் அசும்பில்,
> படுகடுங் களிற்றின் வருத்தம் சொலிய,
> பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
> விண்தோய் விடரகத்து இயம்பும்'' (அகநா.8:8-12)

என்னும் அடிகளுக்கு, ''வாழை நுகர வந்த யானை அதன் அயலாகிய அசும்பின் குழியிலே விழுந்ததாகப், பின்பு அக்குழியினின்றும் ஏறமாட்டாது வாழையாகிய உணவையும் இழந்துழிப், பிடி அது ஏறுதற்குப் படியாக மர முறிகின்ற ஓசை விண்டோய் விடரகத்து இயம்பினாற்போல, அவரும் நமது நலம் நுகர வந்து களவொழுக்கமாகிய குழியிலே விழுந்து, இக்கள வொழுக்கமாகிய இதனைவிட்டு வரையவுமாட்டாது துயரப்படுகின்றுழி, அறத்தொடுநிலை முதலாகிய இவற்றால் மகளிராகிய நாமே வரைய முயலும் வழி அம்முயற்சியானே ஊரெல்லாம் அறியும்படி பண்ணினர் என்றவாறு'' (அகநா.பழைய.ப.17) என்று பழையவுரையில் உள்ளுறை சுட்டப்பெற்றுள்ளது. பழையவுரையாசிரியர் குறிப்பிட்டுள்ள இவ்வுள்ளுறையில் சில சொற்கள் பாடலில் இடம்பெற்றனவாகவே அமைந்துள்ளன. ஆனால் பழையவுரையாசிரியர் பாடலுக்கான உரையில் சொற்பொருள் கூறும் முறையில், சில பொருள்களைக் கூறிச் செல்கின்றார். அசும்பு என்பதற்கு மலையின் நீர் அறாத குழி என்றும், விடரகம் என்பதற்கு மலைமுழை என்றும் பொருள் கூறுகின்றார்.

> ''குறவர் ஊன்றிய குரம்பை புதைய,
> வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
> புலிசெத்து, வெரீஇய புகர்முக வேழம்,
> மழைபடு சிலம்பில் கழைபட, பெயரும்'' (அகநா.12:9-12)

என்பதற்கு ''யானையானது வெருவத்தகாத குரம்பையை வெருவத்தக்க புலியென்று கருதித் தனக்குணவாகிய கழைமுறியப் பாய்ந்தாற்போல வெருவத்தகாத எங்கள்

தமரை வெருவி வரைய முயலாது திரியவே, நாங்கள் இறந்துபடும்படியாயிற்று என்றவாறு'' (அகநா.பழைய.ப.23) என்று பழையவுரை அமைகின்றது.

''கூர்முண் முள்ளிக் குவிகுலைக் கழன்ற,
மீன்முள் அன்ன, வெண்கால் மாமலர்
பொய்தல் மகளிர் விழவு அணிக் கூட்டும்
அவ்வய னண்ணிய வளம்கேழ் ஊரனை'' (அகநா.26:1-3)

என்னும் அடிகளுக்கு, ''முள்ளியின் பக்கலிலே தோற்றி வாழும் பூ அதனைவிட்டுப் பிறர்க்குப் பயன்பட்டவாறுபோல நம்முடன் பிறந்த நெஞ்சு அவருடன் ஏகுகையாயிற்று. அவருடைய வதுவை விழவிற்கும் உடலாய்த் திரியா நின்றால் புலத்தல் கூடுமோ என்க'' (அகநா.பழைய.ப.45) என்று பழையவுரையின் உள்ளுறை அமைகின்றது. ''பருவம் காரணமாகத் தாமே கழன்று வீழும் நீர் முள்ளியின் மலர்களை விளையாட்டு மகளிர் தமது விழாவிற்கு அழகு சேர்ப்பதற்காகப் பொறுக்கிச் சேர்ப்பர். அதுபோல என் பருவம் காரணமாக என்பாற் பற்றொழிந்துள்ள என் தலைவனை அழகியரான பரத்தை மகளிர் கைக் கொண்டனர் என்பதாம்''[4] என்று இரா.ஜெயபால் குறிப்பிடுகின்றார்.

''கடல்பாடு அழிய, இனமீன் முகந்து,
…………. …………….
இறந்தோர் வறுங்கலம் மல்க வீசி,
பாடுபல அமைத்து, கொள்ளை சாற்றி
கோடுஉயர் திணிமணல் துஞ்சும் துறைவ'' (அகநா.30:2-11)

என்னும் அடிகளுக்கு, ''பெருங் கடலுட் சிக்கிக் கிடக்கின்ற மீனை நுளையர் அதனினின்று நீக்கி உயிர் செகுத்துக் கண்டா ரெல்லார்க்குங் கூறுவைத்துப் பரப்பிப் பின்பு உயிர் வருத்தினோ மென்னுமிரக்கமின்றி, மணற்குன்றிலே யுறங்கினாற்போல, பெருங்குலத்துப் பிறந்த இவளை நீயிர் நும்வசமாக நீக்கி, வருத்தி வேறுபாட்டா னெல்லாரு மிவளைச் சூழும்படி அலராக்கிப் பின்பு நீர் துயரமின்றி உறங்குகின்றீர் என்றவாறு'' (அகநா.பழைய.ப.50) என்று உள்ளுறையினைச் சுட்டிச் செல்கின்றார்.

''வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்

தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரின் பிளிற்றி, பெண்ணை
அகமடல் சேக்கும் துறைவன்
இன்துயில் மார்பில் சென்றஎன் நெஞ்சே'' (அகநா.40:13-17)

என்பதற்கு, ''வெண்ணெல் அரிநர் தங்காரியஞ் செய்யப் பறைகொட்டுவிக்க, நாரை வேற்று நிலத்ததாகிய பெண்ணையிலே சென்று தங்கித் தான் வாழுமிடமாகிய மருதநிலத்தை மறந்தாற்போலத் தங்காரியஞ் செய்ய நம்மைப் பிரிவர் இல்லைப் பிரிந்தவழி நம்முடைய நெஞ்சு நம்மை விட்டுத் தனக்கு அந்நியமாகிய அவர் மார்பிலே சென்றது என்றவாறு'' (அகநா.பழைய.ப.67) என்று உள்ளுறை அமைந்துள்ளது. வயல்களில் வெண்ணெல்லை அரியக்கூடியவர்கள் பறையோசை எழுப்புகின்றனர். அவ்வாறு எழும் பறையோசைக்கு அஞ்சிய நாரை பனைமரத்தில் சென்று தங்கியது. அதுபோல பொருள் தேடுவதற்குப் பிரிந்தான் தலைவன். எப்பொழுதும் நம்முடையதாக இருந்த நெஞ்சம் நம்மை விட்டுப் பிரிந்து அந்நியராகிய தலைவனின் மார்பினையே எண்ணுவதாக இருக்கின்றது.

''சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலில் நோன்தளை பரிந்து,
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி,
நீர்முதிர் பழனத்து மீன்உடன் இரிய
அம்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை'' (அகநா.46:1-5)

என்னும் அடிகளுக்கு, ''காரான் தனக்கு நிலையென்று புகுத்தப்பட்ட கொட்டிலை நீராலுஞ் சாணகத்தாலுந் தானே சேறாக்கிக் கொண்டு, தளையையு மறுத்துக் கொண்டு, பழனத்துக்குக் காவலாகிய வேலியையுங் கோட்டா லெடுத்து, மீன்களிரியத் தாமரையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி மலர்ச்சி யின்றி வண்டொடு குவிந்த தாமரையை ஆர்ந்தாற்போல நீயே ஆதரித்துக் கொள்ளப்பட்ட இவளை நீ தானே வேறுபடுத்தி நாணமாகிய தளையையு மறுத்துக் கொண்டு பரத்தையர்க்குக் காவலாகிய விறலியையும் பாணனாகிய கோட்டாலே நீக்கி, அப்பரத்தையருடனுறையும் தோழி மாரிரிய அப்பரத்தையருடைய தாய்மாரையும் மயக்கி, அகமலர்ந் துன்னை எதிரேற்றுக் கொள்ளாத மகளிரை நுகர்வானொருத்த

னல்லையோ என்றவாறு'' (அகநா.பழைய.ப.75) என்ற பழையவுரை அமைந்துள்ளது. இப்பாடலில் தலைவி தலைவனின் பரத்தமை ஒழுக்கம் காரணமாக ஊடியிருந்தாள். அவ்வேளையில் பரத்தையர் சேரியில் இருந்து தலைவன் வந்தானாய் வாயில் வேண்டி நின்றான். அதனைப் பார்த்த தோழி தலைவனது கூடா ஒழுக்கத்தைச் சுட்டிக்காட்டியதாக இவ்வுள்ளுறை அமைகின்றது.

''ஏகல் அடுக்கத்து இருள்அளைச் சிலம்பின்

ஆகொள் வயப்புலி ஆகும்அ.்.து'' (அகநா.52:5-6)

என்ற அடிகளுக்கு, ''வேங்கையைக் கொடிசூழ அவ்வேங்கையிலே அலருண்டான அளவில் ஆண்டுவாழு மறவர் புலி புலி என்று பூப்பறித்தற்குச் சொன்ன அரவத்தாலே ஊரெல்லாம் ஆரவாரித்தாற்போல அவரை நாம் தலைப்பெய்தவளவிலே அலர் பிறந்ததாக அவ்வலர் முதற்சீராலே முகிழ் முகிழ்த்துப் பின்னை யெல்லாரு மறிந்தது என்றவாறு'' (அகநா.பழைய.ப.84) என்பது பழையவுரை. ''வேங்கை மரத்தில் மலர் தோன்றிய அளவில் ஆண்டு வாழும் குறவன் 'புலிபுலி' என்று பூப்பறிப்பதற்குச் சொன்ன ஆரவாரம் ஊரனைத்தும் அறியக் காரணமாயிற்று; அதுபோல அவரை நாம் கூடத் தொடங்கிய அளவிலே அலர் பிறந்ததாக அவ்வலர் முதற்கண் முகிழ்த்துப் பின்னர் எல்லோரும் அறிந்திட நேர்ந்தது''[5] என்று இரா.ஜெயபால் கூறுகின்றார்.

''தண்கயத்து அமன்ற கூதளம் குழைய,

இன்அசை அருவிப் பாடும் என்பதூஉம்'' (அகநா.68:2-3)

என்ற அடிகளுக்கு, ''யானைகளுங் கன்று காரணமாகப் பிடி வருந்திய பின்பு எடுக்க முயன்றாற்போல, அவரும் அலரானும் வழிய தருமையானும் நாம் நலனழிந்த பின்பு வரைய முயலுமதல்லது முன்பு முயலாரென்பது கருத்து'' (அகநா.பழைய.ப.68) என்பது பழையவுரை கூறும் உள்ளுறை ஆகும். காட்டில் பெய்த பெருமழை காரணமாக வெள்ளம் பெருக்கெடுத்தது. இதனால் யானைக் கன்றுகளை வெள்ளம் இழுத்துச் செல்ல, பெண்யானைகள் குரல் எழுப்பிய பின்பே ஆண் யானைகளும் தம் குரலை எழுப்பின. அதுபோல தலைவனும் அலர் தோன்றிய பின்பும், வரும் வழியின் தன்மையானும் தலைவியை வரைதற்கு முயல்வான். அதற்குள்

தலைவியின் நலமும் குன்றிவிடும். அதற்குமுன் வரைய முயலமாட்டான் என்பது கருத்தாக அமைகின்றது.

> ‘‘இரும்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்
> குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டிக்
> கொழுங்கண் அயிலைப் பகுக்கும் துறைவன்’’ (அகநா.70:1-3)

என்னும் அடிகளில், ‘‘பரதவர் தம் முயற்சியாலே வேட்டை வாய்த்ததாகிலும் குறுங்கண் வலையைப் பாராட்டி அம்முயற்சியானுண்டான அயிலையைக் கடலினின்றும் நீக்கி, எல்லார்க்கும் பகுத்துக் கொடுத்து மகிழ்வித்தாற்போல, அவரும் தம்முடைய முயற்சியானே வதுவை கூடிற்றாயினும் அதற்குத் துணையாக நின்ற என்னைக் கொண்டாடி, நின்னைப் பெரிய இச்சுற்றத்தினின்றுங் கொண்டுபோய்த் தம்மூரின்கண்ணே நின்னைக்கொண்டு வந்து புறந் தந்து தம்மூரையெல்லாம் மகிழ்விப்பர் என்றவாறு’’ (அகநா.பழைய.ப.109) என்ற உள்ளுறை அமைகின்றது.

> ‘‘பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்
> கானல்அம் பெருந்துறைக் கவினி மாநீர்ப்
> பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
> விழவுஅணி மகளிர் தழைஅணிக் கூட்டும்’’ (மேலது.9-12)

என்பதற்கு, நெய்தற்பூவானது ஞாழலும் புன்னையுங் கரையிலே நின்று தாதை யுதிர்த்துப் புறஞ்சூழ நடுவே நின்று செருக்கி வளர்ந்து பின்னை விழவணி மகளிர் அல்குலுக்குத் தழையாய்ப் பயன்பட்டாற்போல இரு முதுகுரவர் புறங்காப்ப ஆயவெள்ளத்தார் மெய்யை விடாதே சூழ்ந்து புறங்காப்ப, இப்படிச் செல்வத்தால் வளர்ந்த நீயும் நம் பெருமானுடைய இல்லறமாகிய பிரிவிற்குத் துணையாகப் போகா நின்றாயன்றோ வென்று வியந்து கூறியவாறு கண்டு கொள்க’’ (அகநா.பழைய.பக்.109-110) என்பது பழையவுரை கூறும் உள்ளுறை ஆகும். நெய்தற்பூவானது எவ்வாறு பாதுகாப்பாக வளர்ந்ததோ, அதேபோன்று தலைவியும் தாய் தந்தை முதலான சுற்றத்தாரால் பாதுகாப்பாக வளர்ந்தவள். அவளைத் தலைவன் வரைந்து செல்ல வருகின்றமையால் தலைவனுடன் இல்லறமாகிய

வாழ்விற்குத் துணையாகப் போகின்றாள் என்பதை வியந்து கூறுவதாக இவ்வுள்ளுறை அமைந்துள்ளது.

''உள்ளுநர் உட்கும் கல்அடர்ச் சிறுநெறி,

அருள்புரி நெஞ்சமொடு எ.்.குதுணை யாக'' (அகநா.72:17-18)

என்பதற்கு, ''புலி துணைபுறந் தருதற்குப் பிறவற்றைத் தீங்கு செய்யும் பாம்பும் அதற்குத் துணையாயினாற் போல நீயுங் குடியோம்பற் செய்தி காரணமாக வரைவொடுவரிற் கடுஞ்சொற் சொல்லுகிற பேரும் இன்சொற்சொல்லி வரைவுடம்படுவர் என்பதாம்'' (அகநா.பழைய.ப.113) என்பது பழையவுரை கூறும் உள்ளுறை விளக்கம். இதில் ஆண்புலி பெண்புலியினைக் காப்பதற்குப் பன்றியினை வேட்டையாடி இழுத்துச் செல்வதற்கு, நல்ல பாம்பு தான் மேய்வதற்கு ஒலி வேண்டி உமிழ்ந்து வைத்திருந்த மாணிக்கக் கல்லின் ஒளி பயன்பட்டது. அதுபோல தலைவன் தலைவியை வரைந்து கொள்ளும் குறிப்புடன் வந்தால் நச்சுத் தன்மை மிக்க நல்ல பாம்பின் மாணிக்கக் கல்லின் ஒளி புலிக்குப் பயன்பட்டாற்போல கடுஞ்சொல் சொல்லும் ஊராரும் இன்சொற் சொல்லி திருமணத்துக்கு உடன்படுவர்.

''ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்

பகுவாய்ப் பல்லிப் பாடுஓர்த்துக் குறுகும்

புருவைப் பன்றி வருதிறம் நோக்கி'' (அகநா.88:2-5)

என்னும் அடிகள், ''தினை நுகர்தற்குப் பன்றி நிமித்தம் பார்த்து வருகையைச் செய்தேயும் கானவன் அது வருதிறமறிந்து சுடர் கொளுத்தினாற் போலத் தாமும் பேணிவந்தாரே யாயினும் வரவு வெளிப்படும் என்றவாறு'' (அகநா.பழைய.ப.133) என்பது இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாக இருக்க, தோழி கூறியதாக அமைந்த உள்ளுறை விளக்கமாகும்.

''மூத்தோர் அன்ன வெண்தலைப் புணரி

இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும்

தளை அவிழ்தாழைக் கானல் அம்பெருந்துறை'' (அகநா.90:1-3)

என்னும் அடிகளுக்கான பழையவுரை, ''மூத்தோர் இளையோரை வருத்தாரன்றே, அது செய்யாது புணரி இளையோர் மனைசிதைத்தாற்போலப் பெரிய அறிவுடைய

நீர் சிறியேமாகியவெங்களை வருத்தா நின்றீர் என்றவாறு''(அகநா.பழைய.ப.136) என்கிறது. மூத்தோராக இருப்பவர்கள் இளையோர்களை வருத்தமாட்டார்கள் என்பது உலக இயற்கை ஆகும். அவ்வாறு இல்லாமல் மூத்தோரைப் போன்ற கடலானது இளையோரின் மனையைச் சிதைத்து விடுகின்றது. அதுபோல பெரிய அறிவினையுடைய நீவிர் சிறியவர்களைப் போன்றோர்களாகிய எம்மை வருந்தச் செய்கின்றீர் என்று தோழி தலைவனைப் பார்த்துக் கூறுகின்றாள்.

**இறைச்சிப்பொருள் கூறுதல்**

ஒரு செயலைக் கூற வந்த பொருள் வெளிப்படாது மறைவாக இருக்க, அதனை உணர்த்த வந்த வேறொரு பொருள் வெளிப்படையாக நிற்குமாறு அமைக்கும் இலக்கண உத்தியே இறைச்சி ஆகும். "'இறைச்சி' என்பது கருப்பொருள்களின் ஒரு பகுதியாகிய மான், ஆடு, முதலிய விலங்குகளையும் பறவைகளையும் (அஃதாவது உயிரினங்களைப்) பெரும்பகுதி குறிக்கும். எனவே இறைச்சி என்பதற்குக் கருப்பொருள் என்றே விளக்குவர். இன்றும் ஆடு, கோழிக் கறிகளை 'இறைச்சி' எனல் வழக்காறு''[6] என்று தமிழண்ணல் குறிப்பிடுகின்றார். இத்தகைய இறைச்சிப்பொருள் அகநானூற்றுப் பாடல்களிலும் காணப்படுகின்றது. அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையுடன் கூடிய 90 பாடல்களில் 8, 10, 15 ஆகியவற்றுக்கான உரைகளில் மட்டும் இறைச்சிப்பொருள் சுட்டப்பட்டுள்ளது. அகநானூற்றின் 8 ஆம் பாடலில் இடம்பெற்றுள்ள,

> ''ஈயற் புற்றத்து ஈர்ம்புறத்து இறுத்த
> குரும்பி வல்சி பெருங்கை ஏற்றை
> தூங்குதோல் துதிய வல்உகிர் கதுவலின்,
> பாம்புமதன் அழியும் பானாட் கங்குலும்'' (அகநா.8:1-3)

என்னும் அடிகளுக்கான பழையவுரை, ''ஏற்றையானது பாம்பை வருத்த வேண்டும் என்னும் கருத்தில்லையாயினும், அது தன் காரியஞ் செய்யவே வள்ளுகிர் படுதலாகிய அவ்வளவிற்குப் பாம்பு வலியழிந்தாற்போல அவர் நம்மை வருத்த வேண்டுமென்னும் கருத்தில்லையாயிருக்கவே, தமது காரியமாகிய களவின்பத்திலே ஒழுகவே, ஆறின்னாமை ஊறின்னாமை முதலாகிய இவ்வளவிற்கே நாம்

வருந்தும்படியாய் விட்டது என்றவாறு'' (அகநா.பழைய.ப.17) என்று இறைச்சிப்பொருள் அமைகின்றது. இதனை இரா.ஜெயபால் ''உள்ளுறை''[7] என்றே சுட்டுவர்.

''பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டுமணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணம்கமழ் பாக்கத்துப் பகுக்கும்'' (அகநா.10:10-13)

என்னும் அடிகளுக்கு, ''பரதவர் தாம் அழிவு சோர்ந்த திமிலானும் பண்ணின வலையானும் தமது தொழிலாகிய வேட்டைமேற் செல்லாது, தேடாமல் வந்த இழிந்த சுறா மீனை அகப்படுத்து, அதனை அழித்துக் கூறு வைத்து எல்லாரையும் அழைத்தாற்போல, நீயிரும் நுமக்கு உறுதியாக ஆக்கிக் கொள்ளப்பட்ட நன்மைகளான் நுமக்கு ஒழுக்கமாகிய நல்வழியில் ஒழுகாது, கண்டோ ரிகழ்ந்த களவொழுக்கிலே ஒழுகி, இக் களவினைப் பரப்பிப் பலரும் அலர் கூறும்படி பண்ணா நின்றீர் என்றவாறு'' (அகநா.பழைய.பக்.20-21) என்று பழையவுரையாசிரியர் இறைச்சியாகக் குறிப்பிடுகின்றார். இதனை, இறைச்சி என்று சுட்டிவிட்டு ''இருப்பினும், இதனை உள்ளுறையாகவே பலரும் கொள்வர்''[8] என்று செய்தியினையும் இரா.ஜெயபால் கூறுகின்றார்.

''கொன்றை அம்சினைக் குழற்பழம் கொழுதி
வன்கை எண்கின் வயநிரை பரக்கும்'' (அகநா.15:15-16)

என்பதற்கு, ''கரடி ஆர்கழல் புதுப்பூவை நுகர்ந்த வாயையுடையவாய், அதிலே நிறைந்து கொன்றைப் பழத்தைக் கோதிப்போனாற் போல, அவளுந் தலைவனோடு கூடிய இன்பத்திலே நிறைந்த செருக்கினாலே கூடிவளர்ந்த தோழிமாரையும், பெற்று வளர்த்த என்னையும் புறக்கணித்துப் போனாள் என்றவாறு'' (அகநா.பழைய.ப.28) என்று பழையவுரையாசிரியர் குறிப்பிடுகிறார். இதனை, ''கரடி இருப்பையின் ஆர்க்குக் கழன்ற புதுப்பூவை நுகர்ந்த வாயையுடையவாய் அதிலே நிறைவுற்றுக் கொன்றைப் பழத்தைக் கோதிச் சென்றாற்போல, தலைவியும் தலைவனுடன் கூடிய இன்பத்திலே நிறைவு பெற்றவளாய்ச் செருக்கு மிகக் கொண்டு கூடி வளர்ந்த தோழியரையும் பெற்று வளர்த்த அன்னையையும் புறக்கணித்துப் போயினாள் என்பதாம். இதனை இறைச்சிப் பொருள் என்பர் பழையவுரையாசிரியர்''[9] என்று இரா.ஜெயபால் உள்ளுறையாகச் சுட்டிச் செல்கின்றார்.

**சொற்பொருள் விளக்கம் கூறுதல்**

அகநானூற்றுப் பழையவுரையாசிரியர் பாடலில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் கூறிச் செல்கின்றார். அகநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற குறிப்புரையின் இடையே வேறு உரை ஒன்றும் காணப்படுகின்றது. இவ்வுரையாசிரியரும் சில சொற்களுக்கு மட்டும் உரை கூறுகின்றார். அகநானூற்றுப் பழையவுரையாசிரியர், பாடலில் இடம்பெற்றுள்ள பல சொற்களுக்கு, பாடலின் சூழல் சார்ந்து விளக்கம் தருகின்றார். இப்பாடல்களுக்கான உரையில் சொற்களுக்குப் பொருள் கூறும் தன்மையே மிகுதியாகக் காணப்படுகின்றது. பழையவுரையாசிரியரின் சொற்களுக்குப் பொருள் கூறும் தன்மை இரண்டு விதமான முறைகளில் அமைந்துள்ளன. 1. பழையவுரையாசிரியர் பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு அகராதி அமைப்பில் நேரடியான பொருளைத் தருதல் 2. ஒன்றிரண்டு சொற்களால் ஆகிய சிறிய தொடர்களுக்கு மிகச் சிறப்பானதொரு விளக்கம் தருதல் 3. ஓரடிக்குப் பொருள் கூறுதல். இம்முறைகளைச் சொற்களுக்கு நேர்ப்பொருள் கூறும் தன்மையாகவும், சொற்றொடருக்கு விளக்கம் கூறும் தன்மையாகவும் எடுத்துக் கொள்ள இயலும். அவற்றுள் நேர்ப்பொருள் கூறும் தன்மையில்,

தருமார் - தரவேண்டி (அகநா.1.பழைய.ப.4)

வாரி - கோதி (அகநா.8.பழைய.ப.17)

அறிந்த மாக்கள் - முகமறிந்த மாக்கள் (அகநா.15.பழைய.ப.28)

வினை - காரியம் (அகநா.33.பழைய.ப.55)

ஞெமல் - சருகு (அகநா.39.பழைய.ப.64)

ஆராறு - போதற்குரிய வழி (அகநா.45.பழைய.ப.73)

பசுநிலா - குளிர்ந்த நிலா (அகநா.57.பழைய.ப.91)

எல்வளி - பெருவளி (அகநா.77.பழைய.ப.119)

சென்னெறி - சென்ற நெறி (அகநா.82.பழைய.ப.125)

போன்ற சொற்கள் அமைந்துள்ளன.

அகநானூற்றின் பாடல்களில் இடம்பெற்றுள்ள சில சொற்களுக்கு விரிவான விளக்கம் தருகின்றார். இதனை,

சிறுமுது குறைவி - இளமையிலேயே அறிவு முதிர்ந்தவள்

(அகநா.17.பழைய.ப.31)

மடை - மூட்டுவாய்; கொம்பின் தலையில் இரும்பாலும் செம்பாலும் பண்ணித்

தைத்தலான் மூட்டாயிற்று (அகநா.40.பழைய.ப.40)

நனைநகு மாலை - மொட்டு மலரும் மாலைக் கண்ணே (அகநா.54.பழைய.87)

தொன்றியற் சிறுகுடி - பழையதாய் வருகிற இயல்பையுடைய குடி

(அகநா.75.பழைய.ப.117)

போன்ற விளக்கங்களால் அறிய இயலும். இவை பழையவுரையாசிரியரின் உரைப்போக்கில் குறிப்பிடத்தக்கதாக அமைகின்றது. இவர் வாழ்ந்த காலத்தில் பயன்படுத்தப்பட்ட சொற்களைப் போன்றே, இப்பாடல்களின் சொற்பொருள் விளக்கம் காணப்படுகின்றது.

பழையவுரையாசிரியர் சொற்றொடர் பலவற்றுக்குத் தரும் விளக்கம் சுவை பயப்பதாய் இருக்கின்றது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சொற்கள் தொடராக மாறுகின்றன. அத்தகைய சொற்களுக்குப் பழையவுரையாசிரியர் தரும் விளக்கம், அவரின் புலமைத் திறத்தினை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

அகநானூற்றின் 2ஆம் பாடலில் ‘‘குறியா இன்பம்’’ என்னும் தொடர் இடம்பெற்றுள்ளது. இதனை விளக்கும் பழையவுரையாசிரியர், ‘‘குறியா இன்பம் என்றது முயற்சியும் உளப்பாடும் இன்றி வந்த இன்பமெனக் கடுவனுக்கும் தலைவனுக்கும் ஏற்பக் கொள்க’’ (அகநா.பழைய.ப.6) என்று சுட்டுகின்றார். கடுவன் எவ்வாறு எந்த முயற்சியும் இல்லாமல் தேன் என்று அறியாமல், அதனை உண்டு தன்னுடைய தொழிலாகிய மரம் ஏறுதலைச் செய்யாமல் சந்தன மரத்தின் நிழலில் படுத்து உறங்குகின்றதோ, அதுபோல தலைவன் களவொழுக்கமாகிய இன்பம் நுகர்ந்துவிட்டு, தலைவியை மணந்து கொள்ளாமல் களவொழுக்க இன்பத்திலே

ஊறித் திளைக்கின்றான். இதனால் வந்த இன்பத்தினையே பழையவுரையாசிரியரும் குறியா இன்பம் என்கிறார்.

“நெடுவெண்டிங்கள் என்றார் ஆதித்தனுக்கு மேலாகலான்....வளர்பிறையன்றிக் கல்யாணநாட் கொள்ளாராகலின் அதுவும் ஆயிற்றென்றாள்” (அகநா.பழைய.ப.6) என்றதில், ஆதித்தன் என்னும் சூரியனுக்கு மேலாக, திங்களாகிய நிலவைப் பழையவுரையாசிரியர் சிறப்பிக்கின்றார். வளர்பிறையில் திருமணத்திற்கு நாள் குறித்தல் என்பது நம் தமிழர்களின் மரபாதலின், இதனைச் சுட்டிக் காட்டும் வகையில் பழையவுரையாசிரியரின் விளக்கம் அமைகின்றது.

தலைவன் தலைவியைப் பிரிகின்றான். அவ்வேளையில் அவளுடைய வளையல்கள் கழன்று விட்டன. அவற்றுள் எஞ்சிய சில வளையல்களும் இப்பொழுது கழன்று போயின என்னும் தலைவியின் பிரிவு ஆற்றாமையினை, “சில்வளை சொரிந்த என்றது பல்வளையெல்லாம் முன்பே கழன்றோடின சில்வளைகள் தாமும் போயின என்றவாறு” (அகநா.19.பழைய.ப.34) என்னும் விளக்கத்தால் சிறப்பிக்கின்றார்.

‘புலிபுலி’ என்று அச்சுறுத்தினால் வேங்கை மரம் மலர் கொய்வதற்குத் தாழ்ந்து கொடுக்கும் என்னும் மலைவாழ் மக்களின் நம்பிக்கையைப் பழையவுரையாசிரியர், “புலி யென்பது, வேங்கை மலர் கொய்யத் தாழ்ந்து கொடுக்கு மென்றோர் பேதைத் தன்மை. அதுவும் மலையில் வாழ்வார்க்கு உள்ளதோர் பண்பு” (அகநா.48.பழைய.ப.79) என்று குறிப்பிடுகின்றார். இதுபோன்று பல சொற்களுக்குப் பழையவுரையாசிரியர் தொடர்ச்சியான விளக்கம் தருகின்றார். இது அவரின் சிறந்த உரைப் புலமைக்குச் சான்றாக அமைகின்றது.

ஆறன்றென்னா வேறல் காட்சி - வழி யல்லவென்று சொல்லாத வேறற்ற வறிவு; என்றது, ஒன்றை அவள் நினைந்தால் தோழிக்கும் அதுவே அறிவாம்” (அகநா.73.பழைய.ப.114) என்பது தலைவி தோழி இருவரின் அறிவும் ஒத்த தன்மையில் காணப்படுகின்றன என்பதைச் சுட்டுகிறார். இது ஓர் அடிக்குப் பொருள் கூறும் உரை அமைப்பைப் பெற்றுள்ளது.

**சொல்முடிபு பொருள்முடிபு தருதல்**

தமிழ் இலக்கியங்களுக்கு உரையெழுதிய உரையாசிரியர்கள் பல்வேறு உரைமரபுகளைப் பின்பற்றியுள்ளனர். தொல்காப்பியச் சொல்லதிகாரம் எச்சவியலில் பொருள்கோள் என்னும் பகுதி பொருள் கொள்ளும் முறை பற்றிச் சுட்டுகின்றது. இது சில செய்யுள்களில் சொற்கள் ஆற்றொழுக்காகக் கிடப்பதாகவும் சில செய்யுள்களில் சொற்கள் முறைமாறிக் கிடப்பதாகவும் இடம்பெற்றுள்ளதையும், அவற்றை முன்னும் பின்னுமாக மாற்றிக் கூட்டுவதன் மூலம் பொருள் காண இயலுமென்பதையும் புலப்படுத்தும். தமிழ் நூல்களுக்குத் தொடக்க காலத்தில் உரை எழுதிய உரையாசிரியர்கள் பாடல்களுக்கான பொருளை ஆற்றொழுக்காகவே கூறிச் சென்றனர். இருப்பினும் இலக்கண உத்திகளைத் தம் உரையிடையே பின்பற்றியுள்ளனர். பாடல்களில் இடம்பெற்றுள்ள எந்தச் சொல்லை வேறெந்தச் சொல்லோடு சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும் என்பதை அறிந்து அதற்கு ஏற்றாற்போல் எழுவாய் பயனிலைகளை முடித்துக் காட்டுகின்றனர். இத்தகைய முறை அகநானூற்றுப் பழையவுரையாசிரியரின் உரையிலும் காணப்படுகின்றது. இவர் பல்வேறு முறைகளில் சொல்முடிபு பொருள்முடிபு காணுகின்றார்.

“14. ஒதுங்க 5.அரியவல்ல என முன்னே கூட்டுக” (அகநா.8.பழைய.ப.16) என்று பதினான்காம் அடியில் உள்ள சொல்லை ஐந்தாம் அடியிலுள்ள சொல்லுடன் கூட்டி உரைக்கின்றார்.

“18. தோள் 16. பகலும் புணர்குவை எனக் கூட்டுக” (அகநா.18.பழைய.ப.32) என்று பதினெட்டாம் அடியில் உள்ள சொல்லை பதினாறாம் அடியிலுள்ள சொல்லுடன் கூட்டியுரைக்கின்றார்.

> “முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
> வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
> வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்” (அகநா.35:5-7)

என்னும் அடிகளை, “‘முனையிடத்து……..பேண்மார்’-என்றது முனையிடத்து ஆவை மீட்டு, முரம்பின்கண்ணே வெட்சியாரை வீழ்த்த மறவரது பதுக்கையெனக் கூட்டுக” (அகநா.பழைய.ப.57) என உரைக்கின்றார். இதன்மூலம் பழையவுரையாசிரியர் பாடல்களை மூன்று அடிகளுக்குள்ளாக எவ்வாறு தொடர்புபடுத்துவது என்பதை விளக்கிச் செல்கின்றார்.

அகநானூற்றின் 62ஆம் பாடலின் இரண்டு இடங்களில் ‘மாயோள்’ என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இதனை,

“மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு”(5)

“மடவது மாண்ட மாஅ யோளே”(16)

என்னும் அடிகள் சுட்டும். இதன் பழையவுரை, “மழைக்கண் மாயோளென்றது, கண்கரியோளெனக் கண்ணிற் கேற்றுக, மாயோளென்று பின்னுங் கூறுகின்றானாதலின்” (அகநா.61.பழைய.ப.97) என்று இடம்பெற்றுள்ளது. பழைய உரையாசிரியர் ஐந்தாம் அடியிலுள்ள ‘மாயோளை’ கண்ணிற்கும், பதினாறாம் அடியிலுள்ள ‘மாயோளை’ தலைவிக்கும் பொருத்திக் காட்டி உரை வரைகின்றார்.

‘10.பெருங்கடன் முழக்கிற்றாக்கி 4.அலரெழவெனக் கூட்டுக’ (அகநா.90.பழைய.ப.136)

என்பதில் வரும் ‘பெருங்கடன் முழக்கிற்றாக்கி’ பத்தாவது அடியாக அமைந்துள்ளது. இதனை நான்காவது அடியில் வரும் ‘அலரென’ என்ற சொல்லுடன் கூட்டி உரைக்கின்றார். இவை அனைத்தும் அகநானூற்றுப் பழையவுரையாசிரியரின் சொல்முடிபு பொருள்முடிபு கூறும் திறத்தினைப் புலப்படுத்தும்.

**பிறநூற் கருத்துக்களைப் பயன்படுத்துதல்**

உரையாசிரியர்கள் தாம் கூறவந்த கருத்துக்குப் பிற நூற்கருத்துக்களை எடுத்துக்காட்டுவது வழக்கம். தொடக்கத்தில் உரையாசிரியர்கள் பிறநூற்கருத்துக்களை குறைவாகவே பயன்படுத்தியுள்ளனர். இது பண்டைய உரையாசிரியர்களின் பொதுப் பண்பாக இருந்திருக்கின்றது. அதுபோலவே அகநானூற்றுப் பழையவுரையாசிரியரும் அகநானூற்றின் 39ஆம் பாடலில் மட்டுமே பிறநூற் கருத்தினைச் சுட்டியுள்ளார்.

“முளிபுல் மீமிசை வளிசுழற் றுறாஅக்” (அகநா.39:8)

என்ற அடிக்கான பழையவுரை, “முளிபுல் - உலர்ந்த ஊகம்புல்; மூங்கிலுமாம்; என்னை: ‘புறக்காழனவே புல்லெனப் படுமே’ (தொல்.பொருள்.மரபு.85) என்றாகலின்” (அகநா.பழைய.ப.64) என அமைந்துள்ளது. பழையவுரையாசிரியர் முளிபுல்

என்பதற்கு உலர்ந்த ஊகம்புல் என்று பொருள் எழுதிவிட்டு, தொல்காப்பிய இலக்கணத்தைப் பயன்படுத்தி ‘மூங்கில்’ என்று வேறு உரையும் கூறுகின்றார். பழையவுரையாசிரியர் வேறு நூலாசிரியரின் கருத்தினையோ அல்லது உரையாசிரியரின் கருத்தினையோ எடுத்துக் காட்டும் உரை மரபினைக் கொண்டிருந்தாலும், அவற்றைச் சில இடங்களில் மட்டுமே பயன்படுத்தியுள்ளார்.

**மரபு**

பழந்தமிழ் மக்களிடையே பல்வேறு வகையான மரபுகள் பின்பற்றப்பட்டு வந்தன. அவற்றையெல்லாம் அக்கால மக்களின் - வாழ்ந்துவிட்டுச் சென்ற சான்றோர்களின் வாழ்க்கை முறைகளே தெளிவுபடுத்திக் காட்டுகின்றன. ‘‘மரபுகள் என்பன மனித சமுதாயத்தின் ஒவ்வொரு செயலிலும் காணக் கிடப்பனவாகும். அவனது பழக்க வழக்கங்கள், அவனுடைய பல மாதிரியான தொழில்கள், ஆக்கங்கள், படைப்புகள் என எல்லாவற்றிலும் மரபுகள் உள்ளன. கலைகளில் இவை நீக்கமற உள்ளன. அதிலும் கவிதைக் கலையில் மரபுகள் இயற்கையாகவே உள்ளன’’[9] என்று ச.அகத்தியலிங்கம் சுட்டுகிறார். இவர் கூறுவது போல், சங்க அகத்திணை நூலான அகநானூற்றிலும் மரபுகள் குறித்த செய்திகள் இடம்பெறுகின்றன. இதனை அகநானூற்றுப் பழையவுரையாசிரியரும் உரையின் சிற்சில இடங்களில் புலப்படுத்திச் செல்கின்றார்.

‘‘உவல்இடு பதுக்கை ஆள்உகு பறந்தலை’’ (அகநா.67:14)

என்ற அடியின் உரையில், **‘‘**எழுதி நடுதல் வலை நட்டு அதன் கண்ணே பலகை சார்த்துதல் மரபு’’ (அகநா.பழைய.ப.105) எனப் பழைய மரபினைப் பழைய உரையாசிரியர் சுட்டுவர். இரு நாடுகளுக்கிடையே நடந்த போரில் வீர மரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் எடுக்கும் வழக்கம் முன்னோர்களிடையே காணப்பட்டது. நடுகல்லில் அவ்வீரர்களின் பெயரும் சிறப்புக்களும் பொறிக்கப்பட்டு, அதற்கு மயில் தோகையும் சூட்டப்பட்டது. அந்நடுகல்லின் முன் வேல் ஊன்றப்பட்டு கேடகமும் சார்த்தப்பட்டது. இத்தகைய மரபு பழந்தமிழ் மக்களிடையே காணப்பட்டது.

‘‘புதல்வற் பயந்த திதலை யவ்வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்

பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த வீரித ழலரி
பல்லிருங் கதுப்பி னெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றை'' (அகநா.86:11-17)

என்ற அடிக்கான பழையவுரை, ‘‘பிள்ளை பெற்ற மகளிர் நால்வர் கூடிக் குளிப்பாட்டுதன் மரபு'' (அகநா.பழைய.ப.130) என இடம்பெற்றுள்ளது. இதனைக் குறிப்பிடும் இரா.ஜெயபால், ‘‘தேமல் படர்ந்த அழகிய வயிற்றினையுடைய தூய அணிகலன்களை அணிந்த மகனைப் பெற்றெடுத்த மகளிர் நால்வர் கூடிநின்று, ‘கற்பினின்றும் வழுவாது நல்ல பலவற்றினும் உதவியாக இருந்து நின்னை மனைவியாகப் பெற்ற நின் கணவனைப் பேணிக் காக்கும் பெருவிருப்பத்தை உடையை ஆகுக எனக் கூறி, வாழ்த்தினர். வாழ்த்தியவராய், நீரொடு குளிர்ந்த இதழ்களையுடைய மலர்களை நெல்லுடன் கலந்து அவளது பலவாகிய கூந்தலையுடைய தலையிலே தூவினர்''[10] என்று விரித்துக் கூறுகின்றது. இவ்வாறு தலைவியின் திருமணத்தின் போது நடைபெறும் நிகழ்வுகளை மரபாகச் சுட்டுகின்றார், பழையவுரையாசிரியர். திருமணத்தின் போது நடைபெறும் நிகழ்வுகளாக, சங்க இலக்கியங்கள் சுட்டும் நிகழ்வுகள் இன்றும் வழக்கில் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**பழமரபுக் கதை கூறல்**

இலக்கிய ஆசிரியர்கள் தாம் படைத்த நூல்களில் உவமையாகவோ உதாரணமாகவோ அல்லது வேறு சில காரணங்களுக்காகவோ பழமரபுக் கதைகளைக் கூறிச் செல்வதை உரை இயல்புகளுள் ஒன்றாகக் கொண்டிருந்தனர். இக்கதைகள் நம் முன்னோர்களின் மரபினை உணர்த்தக் கூடியவையாக இருக்கும். இத்தகைய கதைகள் காலப்போக்கில் மறைந்து, அந்நூலைப் படிப்பவர்க்கு விளங்காமல் போவதற்கு வாய்ப்பு உண்டு. இதுபோன்ற காரணங்களால் உரையாசிரியர்கள் பாடல் கூறும் கருத்திற்குப் பின்னணியிலுள்ள கதையினை விரிவாக விளக்குவர். இவர்கள் சில இடங்களில் முழுக்கதையையும் கூறாமல் ஒரு பகுதியையோ அல்லது கதையின் மாந்தரையோ நினைவுபடுத்திச் செல்வர். இதுபோன்று, அகநானூற்றுப் பழையவுரையாசிரியரும் மிகக் குறைவான பாடல்களில்

கதை கூறிச் செல்கின்றார். இதனை அகநானூற்றின் 59ஆம் பாடலில் இடம்பெற்றுள்ள,

‘‘வண்புனற் றொழுநை வார்மண லகன்றுறை
யண்டர் மகளிர் தண்டழை யுடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல’’ (அகநா.59.ப.93)

என்னும் அடிகள் சுட்டும். இதற்கான பழையவுரை, ‘‘ஆயர் பெண்கள் குளியா நின்றார்களாக, அவர் இட்டுவைத்த துகிலெல்லாம் பின்னை எடுத்துக்கொண்டு குருந்த மரத்தேறினாராக, அவர்க்கு ஒரு காலத்தே கூடமறைதற்கு மற்றொரு வழியின்மையின் ஏறிநின்ற குருந்த மரத்துக் கொம்பைத் தாழ்த்துக் கொடுத்தார், அதற்குள்ளே அடங்கி மறைவாராக’’ (அகநா.பழைய.ப.94) என்று அமைகின்றது.

பாரியும் கபிலரும் ஒருங்கு இருக்கக்கூடிய ஒரு நிகழ்ச்சியை விளக்குவதாக, அகநானூற்றின் 78ஆம் பாடல் அமைகின்றது.

‘‘உலகுடன் றிரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று
செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தா ளாம்பன் மலரொடு கூட்டி
யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையா
தாளிடூஉக் கடந்து வாளம ருழக்கி
யேந்துகோட் டியானை வேந்த ரோட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி’’ (அகநா.78:15-18)

என்ற அடிகள் இடம்பெற்றுள்ளன. இவ்வடிகளை விளக்கும் பொழுது பழையவுரையாசிரியர், ‘‘கபிலன் சூழ என்றது, பாரியை அரசர் மூவரும் வளைத்திருப்ப, அகப்பட்டிருந்து உணவில்லாமைக் கிளிகளை வளர்த்துக் கதிர் கொண்டு வந்து விட்ட கதை’’ (அகநா.பழைய.ப.121) என்று கதை நிகழ்ச்சியையும் சுட்டுகிறார். இதனை அகநானூற்று உரையில், ‘‘உலகெலாம் பரவிக் கிடக்கும் பலரும் புகழும் நல்ல புகழினையும், வாய்மை தவறாத மொழியினையும் உடையவர் கபிலர்; அவர் சூழ்ந்தவாறே, வளமை சான்ற வயல்களில் விளைந்த முற்றிய

நெற்கதிர்களை நெடுந்தொலைவினின்றும் கொண்டுவரச் செய்து, அவற்றைப் பெரிய தண்டாகிய ஆம்பல் மலராகிய அவியலோடு சமைத்து உண்டனர்; இவ்வாறாக ஆண்டு பல கழிந்தன. கழியவும் காலம் கருதியிருந்து போர் செய்தற்குச் செவ்வி வாய்த்த போது, அதனைத் தப்பவிடாது, பகைவர் படைகளிலே புகுந்து வாட் போரிட்டு அவர்களைக் கலக்கிய, மேலுயர்ந்த கொம்புகளைக் கொண்ட களிற்றினையுடைய மூவேந்தரையும் புறங்காட்டி ஓடச்செய்த, விரைந்து செல்லக்கூடிய குதிரையையும் வள்ளல் தன்மையையும் உடைய பாரி”[11] என்று இரா.ஜெயபால் சுட்டிச் செல்கின்றார். இத்தகைய உரைப்போக்கு பழையவுரையாசிரியரிடம் இருந்தே பிற்கால உரையாசிரியர்கள் பின்பற்றியுள்ளனர், என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**இடம் சுட்டல்**

சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்தும் தமிழ் மக்களின் கலாச்சாரம், நாகரிகம், பண்பாடு, வாழ்க்கைச் சூழல், நாடு, நகரம், ஊர் போன்றவைகளைப் பற்றி முழுமையான வரலாற்றை விளக்குவதாக அமைகின்றது. அவற்றுள் அகநானூற்றுப் பாடல்களும் அடங்கும். இப்பாடல்களில் தமிழர்களின் வாழ்விடங்களாக இருந்த ஊர்ப் பெயர்கள் சுட்டப்பெற்றுள்ளன. அவை அக்கால மக்களால் எவ்வாறு குறிக்கப்பட்டதோ அவ்வாறே பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இதனை அகநானூற்றுப் பழையவுரையாசிரியர் பாடலில் சுட்டப்பெற்றுள்ள ஊர் எவ்விடத்தில் உள்ளது என்பதையும் தெளிவுபடக் கூறுகின்றார். இத்தகைய இடப்பெயர்களை,

> உறந்தைக்குணாது குன்றமென்றது, உறையூர்க்குக் கீழ்ப்பக்கத்ததாகிய சிராப்பள்ளி மலை (அகநா.4.பழைய.ப.9)
>
> கழாஅர் - ஓர் ஊர் (அகநா.6.பழைய.ப.13)
>
> கோடை - கோட்டூர் (அகநா.13.பழைய.ப.24)
>
> பாழி - ஊர் (அகநா.15.பழைய.ப.28)
>
> மழவர் - மழநாட்டார் (அகநா.35.பழைய.ப.58)
>
> குன்றவைப்பு - மலைகளையுடைய ஊர் (அகநா.57.பழைய.ப.91)

போதினி - ஊர் (அகநா.61.பழைய.ப.97)

எயில் - ஊர் (அகநா.84.பழைய.ப.127)

கடவுட் செல்லூர் - தெய்வங்களெல்லாம் பலிபெறுதற்கிடமாகிய

செல்லூர் (அகநா.90.பழைய.ப.136)

போன்ற எடுத்துக்காட்டுகளின்வழி அறிய இயலும். உரையின் சில இடங்களில் அவ்வூர் பெறுகின்ற சிறப்பினையும் சுட்டிச் செல்கின்றார். இது பழையவுரையாசியரின் உரைத்திறத்தின் சிறப்பினைப் புலப்படுத்தும்.

**இலக்கணக் குறிப்புத் தருதல்**

அகநானூற்றுப் பழையவுரையாசிரியர், பாடல்களில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு இலக்கணக் குறிப்புத் தருகின்றார். அவை பாடல்களில் உள்ள இலக்கண மரபுகளை வெளிக்கொணர்பவையாக உள்ளன. அகநானூற்றுப் பழையவுரை அசை, சீர், இடைச்சொல், வேற்றுமை, உவமை, ஆகுபெயர், வினையெச்சம், வினைமுற்று போன்றவைகளை அடிப்படையாகக் கொண்டு சுட்டப்பெற்றுள்ளது.

முன் கடல் - கடல்முன் (அகநா.1.பழைய.ப.4)

கண்டே என்னும் ஏகாரம் ஈற்றசை (அகநா.5.பழைய.ப.11)

தில் - விளைவு (அகநா.6.பழைய.ப.13)

அல்கல் - ஆகுபெயரான் அசைகின்ற கதிர் (அகநா.13.பழைய.ப.25)

ஞெலி - கடையப்பட்ட மூங்கில்; ஆகுபெயர் (அகநா.39.பழைய.ப.64)

அளியரென்றது அறிவில்லாதோ ரென்றவாறு. ஓகாரம் அசை குறிப்புமாம்.

(அகநா.43.பழைய.ப.71)

அரண் - ஆகுபெயர் (அகநா.45.பழைய.ப.73)

எழிலி - ஆகுபெயராற் காலம் (அகநா.43.பழைய.ப.70)

உவலிடு பதுக்கை கருகினவை கருங்கிடங்கிற்கு உவமை

(அகநா.67.பழைய.ப.105)

பழையவுரையாசிரியர் பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு இலக்கணக் குறிப்புச் சுட்டுவதோடு அதற்கு வினைமுடிபும் கூறுகின்றார். இதனை, “9.கல் பொருதிரங்க என்பதனை 8.முதலைய வென்னும் முற்று வினைக்குறிப்பொடு முடிக்க” (அகநா.72.பழைய.ப.113) என்ற விளக்கத்தின் வாயிலாக அறிந்துகொள்ள இயலும். அகநானூற்றுப் பாடல்களில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு இலக்கணக் குறிப்புக் கூறுவதில் இருந்து பழையவுரையாசிரியரின் இலக்கணப் புலமை தெளிவாகும்.

**வட மொழி அறிவு**

அகநானூற்றுப் பழையவுரையாசிரியர் தம் உரையிடையே சில இடங்களில் வடசொற்களைச் சுட்டி இருக்கின்றார். இவர் உரையிடையே குறிப்பிட்டுள்ள சொற்கள் அக்காலத்தில் வாழ்ந்த மக்களால் பேசப்பட்ட சொற்களாகவே இருக்கக் கூடும். ஏனெனில் அவற்றுள் சில இக்காலத்தும் வழங்கப்பட்டு வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனை,

மகனே - ஒரு புருஷனே (அகநா.48.பழைய.ப.78)

திகிரி - ஆதித்தன் (அகநா.53.பழைய.ப.85)

கதிர் - கிரணம் (அகநா.57.பழைய.ப.91)

நிதிக்கிழவன் - அளகேசுவரன் (அகநா.66.பழைய.ப.103)

வயகாம் - ஸம்ஹம் (அகநா.73.பழைய.ப.114)

ஏமம் - ரக்ஷை (அகநா.84.பழைய.ப.127)

போன்ற சொற்களின் வாயிலாக அறிய இயலும். மேலும், பழையவுரையாசிரியரின் வடமொழி அறிவு ‘‘படியோர் என்றது பிரதியோர் என்னும் வடமொழித்திரிவு’’ (அகநா.22.பழைய.ப.38) என்னும் உரையாலும் புலப்படும்.

‘‘ஒழித்தது - ஸ்திரீ விஸநம்பண்ணலாகாதென்று முன்னோர் கழித்தது’’ (அகநா.39.பழைய.ப.64) என வடமொழித் தொடர் கொண்டு விளக்கப்படுகின்றது. இவ்வாறு பழையவுரையில் இடம்பெற்றுள்ள வடமொழிச் சொற்கள், தொடர்கள் ஆகியன பழையவுரையாசிரியரின் வடமொழி அறிவுக்குச் சான்றாக அமையும்.

**இசை அறிவு**

சங்கத்தொகை இலக்கியங்கள் அனைத்தும் தமிழர்களின் இசை நுட்பத்தை நன்கு அறிவிக்கும் கருவூலங்களாக உள்ளன. அவற்றுள் மிகவும் குறிப்பிடத்தக்கதாக அகநானூறு அமைகின்றது. அகநானூற்றுப் பாடல்களுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரை, பாடல்களில் இடம்பெற்றுள்ள இசைக் குறிப்புகளை ஒருசில இடங்களில் விளக்கியும், பல்வேறு இடங்களில் நுட்பமாகப் பொருள்கூறியும் செல்கின்றது.

‘‘உருடுடி மகுளியிற் பொருடெரிந்து இசைக்குங்’’ (அகநா.19:4)

என்ற அடிக்கு, ‘‘உருள் துடி - கடிப்பு உருளுகின்ற இழுகு பறை. மகுளி - ஓசை; இன் - பொரு; ஒப்புரைத்தது ஓசை; மாத்திரம் பற்றி; பொருடெரிதல் குடிஞை யோசைக் குள்ளது; ‘குத்திப்புதை’ என்றதோர் பொருள் தோன்ற இசைக்கும்’’ (அகநா.பழைய.பக்.33-34) என்றும்,

‘‘மிளிதேர் தீங்குர லிசைக்கு’’ (அகநா.33:7.பழைய.ப.54)

என்ற அடியில் வரும் ‘இளி’ என்னும் பண்ணை ‘‘இளியென்னும் பண்ணென்று கேட்டார் விசாரிக்கும் குரல்; மெத்தெனப் பேடையை அழைத்தலால் இளிபோன்றது’’ (அகநா.பழைய.ப.54) என்றும் விளக்கிச் செல்கின்றார்.

இமிழ் - இசை (அகநா.17.பழைய.ப.31)

உலத்தல் - ஓசை ஆறுதல் (அகநா.23.பழைய.ப.40)

வீளை - சிள்ளென்ற ஓசை (அகநா.33.பழைய.ப.54)

பறை - கரடிகை (அகநா.45.பழைய.ப.73)

கடுங்கண் தண்ணுமை, சேக் கொள்ளும் போது அறையும் பறை (அகநா.63.பழைய.ப.99) என்று பழையவுரையாசிரியர் பொருள் கூறுகின்றார். இதனை ‘‘சே ஏறு (எருது); தண்ணுமை ஏற்றைக் கொள்ளும் போது அறையும் பறை’’[12] என்று இரா.செயபால் விளக்கிச் செல்கின்றார்.

தூம்பு - பெருவங்கியம் (அகநா.82.பழைய.ப.125). இது மூங்கிலால் ஆகிய இசைக்கருவி ஆகும். இவ்வாறு இசைக்கருவிகள் குறித்துப் பல்வேறு செய்திகளைச் சுட்டுவதாக அகநானூற்றுப் பழையவுரை அமைந்துள்ளது. இது பழையவுரையாசிரியரின் இசை அறிவைப் புலப்படுத்துகிறது.

**இயற்கை அறிவு**

சங்க இலக்கிய நூல்களுக்கு உரையெழுதிய உரையாசிரியர்கள் பல்துறைகளிலும் சிறப்புப் பெற்றவர்கள் என்பதற்கு அவர்களின் அறிவியல் சார்ந்த உரை விளக்கமும் சான்றாக அமையும். இத்தகைய விளக்கங்கள் சுட்டுவதில் குறிப்பிடத்தக்கவராக அகநானூற்றுப் பழையவுரையாசிரியரும் அமைகின்றார். அவர் வானியல் தொடர்பான ஐயங்கள், இயற்கையாக அமைந்துள்ள செடி கொடிகள், மனிதன், விலங்குகள் போன்ற பல்வேறு வகையான உயிருள்ள உயிரற்ற பொருள்களின் தன்மைகளையும் விளக்குகின்றார்.

மீன் - வானமீன் (அகநா.10.பழைய.ப.20)

பாந்தட்படார் - பாம்புச் செடி (அகநா.68.பழைய.ப.107)

ஈருயிர்ப் பிணவு - சூற்பிணவு (அகநா.72.பழைய.ப.112)

பழைய உரையாசிரியர் கூறும் உரையைப் பின்பற்றி இரா.செயபால் இவற்றுள் ‘ஈருயிர்ப் பிணவு’ என்பதற்கு ‘‘பிணவு - பெண் விலங்கு ஈண்டு பெண் புலியைக் குறித்தது தன் உயிரோடு கருவிலிருக்கும் உயிரையும் உடைமையால் ஈருயிர்ப் பிணவு என்றார்’’[13] என்பர். இவ்வாறே ‘‘மேய்மணி - மேய்தல் காரணமாக உமிழ்ந்த மணி.’’[14] பாம்பு மேய்கின்ற பொழுது மணியை உமிழ்ந்து வெளிச்சத்திற்காக வைத்துவிடும் என்றும் இரா.செயபாலின் உரை குறிப்பிடுகின்றது.

இதனையே, பழையவுரையும் சுட்டுகிறது. இத்தகைய உரை விளக்கங்கள் பழையவுரையாசிரியரின் இயற்கை சார்ந்த உரைத்திறனைப் புலப்படுத்தும்.

### தொகுப்புரை

அகநானூற்றின் தொகுப்பு முறை தனித்த முறையியலைக் கொண்டு விளங்குகின்றது. இந்நூலிற்குத் தொண்ணூறு பாடல்களுக்கான பழையவுரை கிடைக்கப்பெற்றுள்ளது. 2, 6, 8, 12, 26, 30, 36, 40, 46, 52, 56, 60, 68, 70, 72, 88, 90 ஆகிய பதினேழு பாடல்களில் பழையவுரையாசிரியர் உள்ளுறையை விளக்குகிறார். இறைச்சியை 8, 10, 15 ஆகிய மூன்று பாடல்களில் விளக்குகிறார்.

அகநானூற்றுப் பழையவுரையாசிரியரால் பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு அகராதி அமைப்பில் நேரடியான பொருள் தரப்பட்டுள்ளது. ஒன்றிரண்டு சொற்களாலாகிய சிறிய தொடர்களுக்குச் சிறப்பான முறையில் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. பாடல்களில் வெவ்வேறு அடிகளில் காணப்படும் சொற்களைத் தொடர்புபடுத்திச் சொல்முடிபு பொருள்முடிபு கூறுகிறார்.

அகநானூற்றுப் பழையவுரையாசிரியர் பிற நூற்கருத்தாக, தொல்காப்பியத்தைப் பயன்படுத்தியுள்ளார். மரபுகள் என்பன மனித சமுதாயத்தின் ஒவ்வொரு செயலிலும் காணக்கிடப்பனவாகும். தமிழ் மக்கள் வீரமரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் நட்டு வழிபடுவர். திருமணச் சடங்கின் போது பிள்ளை பெற்ற மகளிர் நால்வர் சேர்ந்து தலைவியைக் குளிப்பாட்டுவர். இத்தகைய மரபுகளைப் பழையவுரையாசிரியர் தம்உரையில் குறிப்பிடுகிறார்.

அகநானூற்றுப் பழையவுரையில் 59, 78 ஆகிய பாடல்களில் பழமரபுக் கதைகளைச் சுட்டுகிறார், பழையவுரையாசிரியர். பாடல்களில் இடம்பெற்றுள்ள கோடை, பாழி போன்ற ஊர்ப் பெயர்களையும் சுட்டிச் செல்கிறார். அசை, சீர், இடைச்சொல், வேற்றுமை, உவமை, ஆகுபெயர், வினையெச்சம், வினைமுற்று ஆகிய இலக்கணக் குறிப்புகளை விளக்குகிறார்.

பழைய உரையாசிரியர் மகனே, திகிரி, கதிர் போன்ற வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். பாடல்களில் இடம்பெற்றுள்ள இசைக்குறிப்புகளுக்கு சில இடங்களில் விளக்கியும், பல்வேறு இடங்களில் நுட்பமாகப் பொருள் கூறியும் செல்கின்றார். பாந்தட்படார் என்பது பாம்புச் செடியினைக் குறிக்கும் என்று இயற்கை சார்ந்த சொற்களுக்குப் பழையவுரையாசிரியர் தரும் விளக்கம் குறிப்பிடத்தக்கதாகும்.

**சான்றெண் விளக்கம்**

1. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கிய ஆய்வுகளின் மதிப்பீடு, ப.130
2. அ.சதீஸ், சங்க இலக்கிய உரைகள், ப.136
3. தொல்.பொருள்.அகம்.நூ.50

4. இரா.ஜெயபால்(உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், ப.78
5. மேலது, ப.155
6. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள், ப.78
7. இரா.ஜெயபால்(உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், ப.25
8. மேலது, ப.31
9. மேலது, ப.45
10. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.181
11. இரா.ஜெயபால்(உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், ப.258
12. மேலது, ப.236
13. மேலது, ப.188
14. மேலது, ப.218

## முடிவுரை

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கிற்கும் பழையவுரை காணப்படுகின்றது.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


இராஜகோபாலையங்கார்(ப.ஆ) **அகநானூறு மூலமும் பழையவுரையும்,** கம்பர் விலாசம், மயிலாப்பூர், சென்னை. மூன்றாம் பதிப்பு – 1923

சாமிநாதையர் உ.வே(ப.ஆ) **ஐங்குறுநூறும் பழையவுரையும்,** வைஜெயந்தி அச்சுக்கூடம், சென்னை. முதற்பதிப்பு - 1903

மேலது **பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும்,** வைஜெயந்தி அச்சுக்கூடம், சென்னை. முதற்பதிப்பு – 1904

மேலது **புறநானூறு மூலமும் உரையும்,** கபீர் அச்சுக்கூடம், சென்னை. ஐந்தாம் பதிப்பு – 1956


### துணைமைச் சான்றாதாரங்கள்


அரவிந்தன்.மு.வை. **உரையாசிரியர்கள்,** மணிவாசகர் பதிப்பகம், 8/7 சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை.

முதற்பதிப்பு - 2002.

அருணாச்சலம்.மு. **தமிழ் இலக்கிய வரலாறு,**
பன்னிரண்டாம் நூற்றாண்டு, பாகம்-2
293, அகமது வணிக வளாகம்,
இராயப்பேட்டை, சென்னை.
முதற்பதிப்பு - சித்திரை 1973.

அருளம்பலவாணர்.சு. **பதிற்றுப்பத்து ஆராய்ச்சி,**
ஸ்ரீலங்கா புத்தகசாலை,
வண்ணார் பண்ணை,

ஸ்ரீ சண்முகநாதா அச்சகம்,
யாழ்ப்பாணம் - 1963.

அறிவுச்சுடர் **தமிழ் வளர்த்த தொண்டர்கள்,**
புவியரசி பதிப்பகம், 32/(ப.எ.17)
அண்ணா தெரு, செங்குட்டை, காட்பாடி,
வேலூர். முதற்பதிப்பு - 2002.

இராகவையங்கார்.இரா. **குறுந்தொகை விளக்கம்,**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
சிதம்பரம் - 1947.

இராமமூர்த்தி.கே. **தமிழ்தாத்தா உ.வே.சாமிநாதையர் வரலாறு,**
கங்கை புத்தக நிலையம்,
13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை - 2002.

இராம்போலோ மார்க்கரேனஸ் **தமிழ்த் தொண்டர்கள்,**
ஒற்றுமை ஆபிஸ்,
8, வியாசராவ் தெரு, தியாகராய நகர்,
சென்னை - 2002.

இளமாறன்.பா **பதிப்பும் வாசிப்பும்,**
சிந்தியா பதிப்பகம், நியூடெக் வைபவ்,

57, 53 - ஆவது குறுக்குத் தெரு,
அசோக்நகர், சென்னை.

உரையாசிரியர் குழு — **புறநானூறு மூலமும் உரையும்,**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.
முதற்பதிப்பு - 2004.

கந்தசாமி.சோ.ந. — **செவ்வியல் இலக்கிய ஆய்வுகள்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
33, புதுத்தெரு, சிதம்பரம்.
இரண்டாம் பதிப்பு - 2011.

கந்தசாமி.ந. — **தெய்வச்சிலையார் உரைத்திறம்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 1986.

காசிராசன்.திரு.எஸ்.டி. — **உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.ஐ, தரமணி,
சென்னை.
முதற்பதிப்பு - 1987.

கார்த்திகேசு. சிவத்தம்பி — **தமிழ்நூற் பதிப்புக்கலையில் உ.வே.சா. விமர்சனவியல் நோக்கு,**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.
முதற்பதிப்பு - 2012.

குருசாமி.ச. — **பேராசிரியர் உரைநெறி,**
நச்சினார்க்கினியர் உரைநெறி,

இராணி பதிப்பகம்,
6, வினோத் வேதா அச்சகம்,
37, கோவிந்தன் தெரு, அப்பாவு காலணி,
அமைந்தகரை, சென்னை - 2008.

குளோரியா சுந்தரமதி — **டாக்டர்.உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.ஐ., தரமணி,
சென்னை.
முதற்பதிப்பு - 1984.

மேலது — **டாக்டர்.உ.வே.சா., சங்க இலக்கியப் பதிப்புகள்,**
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
டி.டி.ஐ.தரமணி,
சென்னை - 1984.

கௌமாரீஸ்வரி. எஸ்.(ப.ஆ) — **திருக்குறள்,**
பரிமேலழகர் உரை,
கௌரா ஏஜென்ஸீஸ்,
6, தோப்பு வெங்கடாசலம்தெரு,
பாரதி ஸ்டேட் வங்கி அருகில்,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.
ஐந்தாம் பதிப்பு - ஜூலை - 2004.

சந்தானம்.மு. — **பேராசிரியர் உரைத்திறன்,**
கல்லப்பல் பதிப்பகம்,
3/29, வ.உ.சி. தெரு,
ஆழ்வார் நகர்,
நாகமலை,
மதுரை - 1991.

சதீஷ்.அ — **சங்க இலக்கிய உரைகள்,**
அடையாளம் 1025/1,
கருப்பூர்சாலை,
புத்தானத்தம், திருச்சி.
முதற்பதிப்பு - 2008.

சந்தானம்.மு. — **பேராசிரியர் உரைத்திறன்,**
கல்லப்பல் பதிப்பகம்,
3/29, வ.உ.சி தெரு,
ஆழ்வார் நகர்,
நாகமலை, மதுரை - 1991.

சம்பந்தன்.மா.சு. — **அச்சும் பதிப்பும்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 1980.

சரவணன்.ப. — **சாமிநாதம் (உ.வே.சா.முன்னுரைகள்)**
காலச்சுவடு பதிப்பகம்,
முதற்பதிப்பு - டிசம்பர் 2014.

சாமிநாதையர்.உ.வே. — **என் சரித்திரம்,**
டாக்டர் உ.வே.சா நூல்நிலையம்,
2, அருண்டேல் கடற்கரை சாலை,
பெசண்ட் நகர், சென்னை - 2008.

மேலது — **தமிழ்நெறி விளக்கம்,**
பொருளியல் பழையவுரை,
மகாபாத்தியாய உ.வே.சாமிநாதையர்
நூல் நிலையம், பெசண்ட் நகர்,
சென்னை - 1937.

சின்னு.மா. — **பரிமேலழகரின் இலக்கண உரைத்திறன்,**
தமிழரசிப் பதிப்பகம்,
இண்டர் மேல்நிலைப் பள்ளி வளாகம்,

வேலூர் (நாமக்கல்) – 638182,
முதற்பதிப்பு - டிசம்பர் 2001.

சுந்தரராகவன் — **மகாபாத்தியாய உ.வே.சாமிநாதையர்,**
அல்லயன்ஸ் கம்பெனி,
மயிலாப்பூர், சென்னை - 1942.

சுப்பிரமணியன்.பூ. — **சுவடிப் பதிப்புக்கலை வழிகாட்டி டாக்டர் உ.வே.சா.,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச் சாலை,
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி, சென்னை - 2004.

மேலது — **சுவடியியல்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.ஐ.தரமணி, சென்னை.
முதற்பதிப்பு டிசம்பர் - 1991.

சுப்புரெட்டியார் — **தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,**
பழனியப்பன் பிரதர்ஸ்,
சேப்பாக்கம், தெப்பக்குளம்,
சென்னை - 1963.

செந்தமிழ்ப்பாவை.சே. — **பழந்தமிழ் உரையாசிரியர்களின் நடைக்கோட்பாடு,**
முத்தமிழ்ப் பதிப்பகம்,
1/200, குரு காலனி,
தேவர்குளம் ரோடு,
சிவகாசி, முதற்பதிப்பு - மே 2014.

செல்வநாயகம்.வி. — **தமிழ் உரைநடை வரலாறு,**
சாரதா விலாஸ் பிரஸ்,
கரிக்காரத்தெரு,
கும்பகோணம் - 1957.

செல்வராசு.அ — **புறநானூறு பதிப்புப் பின்புலம்,**
காவ்யா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத் தெரு,
கோடம்பாக்கம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2011.

சொல்விளங்கும் பெருமாள்.பூ. — **டாக்டர். உ.வே.சா.பதிப்புப் பணி-ஓராய்வு,**
வஞ்சிக்கோ பதிப்பகம்,
மதுரை - 1981.

சோமசுந்தரனார்.பொ.வே. — **ஐங்குறுநூறு மூலமும் உரையும்,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி,
சென்னை - 600 018,
முதற்பதிப்பு - 1996.

தட்சிணாமூர்த்தி.அ. — **ஐங்குறுநூறு மூலமும் உரையும்,**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை - 600 098,
முதற்பதிப்பு - 2004.

தமிழண்ணல் — **உரை விளக்கு,**
விழிகள் பதிப்பகம்,
8/எம்.139, 7குறுக்குத் தெரு,
திருவள்ளுவர் நகர்,
சென்னை - 2011.

மேலது — **தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்,**
செல்லப்பா பதிப்பகம்,

மயூரா வளாகம் 48,
தானப்ப முதலி தெரு,
மதுரை - 625 001,
முதற்பதிப்பு - 2004.

துரைசாமிப்பிள்ளை.ஔவை.சு. **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி,
சென்னை - 600 018,
முதற்பதிப்பு - 1996.

நடராசன்.தி.சு. **உரைகளும் உரையாசிரியர்களும்,**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.
முதற்பதிப்பு - நவம்பர் 2013.

நாச்சிமுத்து.கி. **டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கண பதிப்புகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.ஐ. தரமணி,
சென்னை - 1986.

நாற்கவிராச நம்பி **அகப்பொருள் விளக்கம்**
(பழையவுரையுடன்),
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி,
சென்னை - 1996.

நித்தியா அறவேந்தன்.கோ. **குறிஞ்சிப்பாட்டு பதிப்பு வரலாறு,**
காவ்யா பதிப்பகம்,
1, இரண்டாம் குறுக்குத் தெரு,

கோடம்பாக்கம், சென்னை.
முதற்பதிப்பு - 2013.

மேலது **முல்லைப்பாட்டு பதிப்பு வரலாறு,**
காவ்யா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத் தெரு,
கோடம்பாக்கம்,
சென்னை. முதற்பதிப்பு - 2013.

பசுபதி **உ.வே.சா. வாழ்வும் தமிழ்த் தொண்டும்,**
பொன்னழகம்மை நூலகம்,
137, கண்டனூர் சாலை,
காரைக்குடி - 2002.

பரமசிவன்.மா. **அகநானூற்றுப் பதிப்புப் பின்புலம்,**
காவ்யா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை - 2012.

பவானந்தம் பிள்ளை(ப.ஆ) **இறையனார் அகப்பொருள்,**
முல்லை நிலையம்,
9, பாரதி நகர் முதல் தெரு,
தி.நகர், சென்னை - 2006.

பாலசுப்பிரமணியர்.இராம **மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை வாழ்வும் இலக்கியமும்,**
மாப்பிள்ளை பதிப்பகம்,
எண்.16, நான்காம் குறுக்குத் தெரு,
யுனைடெட் இந்தியா காலனி,
சென்னை - 1976.

பாலசுப்பிரமணியன்.கு.வே. **சங்க இலக்கியக் கொள்கை,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,

48,தானப்ப முதலி தெரு,
மதுரை - 2002.

மருதநாயகம்.ப. **சங்க இலக்கிய ஆய்வு,**
தெ.பொ.மீயும், மேலை அறிஞரும்,
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் தொழில்நுட்ப வளாகம்,
தரமணி, சென்னை - 2008.

முல்லை முத்தையா **தமிழ்த்தாத்தா உ.வே.சா.**
சாமி புக்ஸ்,
எண்.49/2, சோலையப்பன் தெரு,
மயிலாப்பூர், சென்னை - 2007.

மெய்யப்பன்.ச. **உரைநடை ஆய்வில் புதிய ஒளி,**
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
சிதம்பரம்.

மோகன்.இரா. **உரை மரபுகள்,**
சொக்கலிங்கம்.ந. மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம் - 608001.
முதற்பதிப்பு - 2011.

மோரிஸ் ஜாய் (புகழேந்தி) **பதிற்றுப்பத்து பதிப்பு வரலாறு,**
காவ்யா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை - 2012.

லோகேஸ்வரன்.ம. **ஐங்குறுநூற்றுப் பதிப்பு வரலாறு,**
காவ்யா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை - 2012.

வேங்கடசாமி நாட்டார் **அகநானூறு மூலமும் உரையும்,**

வேங்கடசாமிப்பிள்ளை திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, சென்னை - 1947.

வையாபுரிப்பிள்ளை **திரிகடுகமும் சிறுபஞ்சமூலமும்** பழையவுரையும், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 1994.

ஜானகி.இரா. **சங்க இலக்கியப் பதிப்புரைகள்,** பாரதி புத்தகாலயம், 421, அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை. முதற்பதிப்பு - 2010.

ஜெயபால்.இரா. **அகநானூறு மூலம் உரையும்,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 018, முதற்பதிப்பு - 2004.

**அகராதிகள்**

இராமநாதன்.பி **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி,** பாவை பிரிண்டர்ஸ் பி லிட், 142, ஜானி ஜான் ரோடு, சென்னை - 1999.

கதிரைவேல் பிள்ளை.ந. **தமிழ்மொழிப் பெயரகராதி,** ஏசியன் கல்வியியல் சேவை மையம், புதுடெல்லி - 1984.

கௌமாரீஸ்வரி. எஸ்(ப.ஆ) **கௌரா தமிழ் அகராதி,** சாரதா பதிப்பகம்,

இராயப்பேட்டை, சென்னை - 2003.

பதிப்பாசிரியர் குழு — **க்ரியாவின் தமிழ்ப் பெயரகராதி,**
புதிய எண்.21, 24, கிழக்குத் தெரு,
திருவான்மியூர்,
சென்னை - 1992.

**இதழ்கள்**

சண்முகசுந்தரம்.சு. — **காவ்யா தமிழ்,**
கலை இலக்கியப் பண்பாட்டுக்கான
காலாண்டிதழ்,
16, இரண்டாம் குறுக்கு தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை, ஏப்ரல் - ஜூன் 2004.

ஆசிரியர் குழு — **பெயல்,**
பி.வி.கிராப்பிக்ஸ்,
29A,ஏ.கே.எஸ்.நகர்,
தடாக சாலை,
கோயம்புத்தூர்.

**ஆய்வேடுகள்**

பரமசிவன்.மா. — அகநானூற்றுப் பதிப்புகள்,
பாடவேறுபாடுகளும் உரைவேறுபாடுகளும்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630003,
நவம்பர் - 2011.

செல்வகுமார்.மு. — ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சங்க
இலக்கிய உரைத்திறன்,
தமிழ்த்துறை,
தியாகராசர் கல்லூரி(தன்னாட்சி),
மதுரை. ஏப்ரல் -2014.

# பின்னிணைப்பு

## சங்க இலக்கிய முதற்பதிப்புகள்

1887: கலித்தொகை - சி.வை.தாமோதரம்பிள்ளை

1889: பத்துப்பாட்டு - உ.வே.சாமிநாதையர்

1894: புறநானூறு - உ.வே.சாமிநாதையர்

1903: ஐங்குறுநூறு - உ.வே.சாமிநாதையர்

1904: பதிற்றுப்பத்து - உ.வே.சாமிநாதையர்

1915: நற்றிணை - பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்

1918: பரிபாடல் - உ.வே.சாமிநாதையர்

1918: குறுந்தொகை - தி.சௌரிப்பெருமாள் அரங்கன்

1918: அகநானூறு - வே.இராஜகோபாலையங்கார்

## சங்க இலக்கியப் பழையவுரைப் பதிப்புகள்

### புறநானூறு

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | :1894 | உ.வே.சாமிநாதையர் |
| இரண்டாம் பதிப்பு | :1923 | உ.வே.சாமிநாதையர் |
| மூன்றாம் பதிப்பு | :1935 | உ.வே.சாமிநாதையர் |
| நான்காம் பதிப்பு | :1950 | கலியாணசுந்தரையர் |
| ஐந்தாம் பதிப்பு | :1956 | கலியாணசுந்தரையர் |

### பதிற்றுப்பத்து

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | :1904 | உ.வே.சாமிநாதையர் |
| இரண்டாம் பதிப்பு | :1920 | உ.வே.சாமிநாதையர் |
| மூன்றாம் பதிப்பு | :1941 | உ.வே.சாமிநாதையர் |

### ஐங்குறுநூறு:

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | : 1903 | - உ.வே.சாமிநாதையர் |
| இரண்டாம் பதிப்பு | : 1920 | - உ.வே.சாமிநாதையர் |
| மூன்றாம் பதிப்பு | : 1944 | - கலியாணசுந்தரையர் |
| நான்காம் பதிப்பு | : 1949 | - கலியாணசுந்தரையர் |

### அகநானூறு:

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | :1918 | இராஜகோபாலையங்கார் |
| இரண்டாம் பதிப்பு | :1920 | இராஜகோபாலையங்கார் |
| மூன்றாம் பதிப்பு | :1923 | இராஜகோபாலையங்கார் |
| நான்காம் பதிப்பு | :1926 | இராஜகோபாலையங்கார் |
| ஐந்தாம் பதிப்பு | :1933 | இராஜகோபாலையங்கார் |

## பதிற்றுப்பத்தின் பயன் கூறுதல் உரை அமைப்பு

### முதற்பத்து

கிடைக்கப்பெறவில்லை.

### இரண்டாம் பத்து

பாடியவர் - குமட்டூர் கண்ணனார்

பாடப்பட்ட மன்னன் - இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| வெற்றிச் சிறப்பு | 11 |
| வெற்றிச் சிறப்பு, ஓலக்கச் சிறப்பு | 12 |
| வெற்றிச் சிறப்பு, நாடுகாத்தற் சிறப்பு | 13, 15 |
| பல குணங்கள், ஆற்றல் | 14 |
| வெற்றிச் சிறப்பு, குலமகளோடு நிகழ்ந்த இன்பச் சிறப்பு | 16, 19 |
| பொறையுடைமை, வெற்றிச் சிறப்பு | 17 |
| கொடைச் சிறப்பு | 18 |
| குணங்களைக் கூறி வாழ்த்துதல் | 20 |

**மூன்றாம் பத்து**

பாடியவர் - பாலைக்கௌதமனார்

பாடப்பட்ட மன்னன் - இமயவரம்பன் தம்பி பல்யானைச்செல்கெழுகுட்டுவன்

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| நாடுகாத்தற் சிறப்பு | 21, 28 |
| வெற்றிச் சிறப்பு | 22, 23 |
| பெருமையும் கொடைச்சிறப்பும் | 24 |
| வெற்றிச் சிறப்பு | 25, 26, 27, 29, 30 |

**நான்காம் பத்து**

பாடியவர் - காப்பியாற்றுக் காப்பியனார்

பாடப்பட்ட மன்னன் - களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| மாட்சிமை | 31 |
| பலகுணங்கள், பொறையுடைமை | 32 |
| வெற்றிச் சிறப்பு | 33, 34, 35, 36 |
| குணங்கள், செல்வம் | 37 |

| கொடைச்சிறப்பு | 38, 40 |
|---|---|
| கொடைச்சிறப்பு, வெற்றிச் சிறப்பு | 39 |

**ஐந்தாம் பத்து**

பாடியவர் - பரணர்

பாடப்பட்ட மன்னன் - கடற்பிறக்கோட்டிய செங்குட்டுவன்

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| வெற்றிச் சிறப்பு | 41 |
| கொடைச்சிறப்பு, வெற்றிச் சிறப்பு | 42 |
| செல்வ மகிழ்ச்சி | 43 |
| நீ நெடுங்காலம் வாழ்கவென வாழ்த்துதல் | 44, 48 |
| வெற்றிச் சிறப்பு | 45, 46 |
| கொடை, பகைவற்கோரல் | 47 |
| வரையாவீகை | 49 |
| காமவேட்கையிற் போர்வேட்கை | 50 |

**ஆறாம் பத்து**

பாடியவர் - காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்

பாடப்பட்ட மன்னன் - ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| வினோதத்து மென்மையும், செருவகத்துக் கடுமையும் | 51 |
| கைவண்மை, காமவின்பச் சிறப்பு | 52 |
| அருள், வெற்றிச் சிறப்பு | 53 |
| கொடைச்சிறப்பும் தன்குறையுங்கூறி வாழ்த்துதல் | 54 |
| உலகு புரத்தலும் தன்குறையுங்கூறி வாழ்த்துதல் | 55 |
| வெற்றிச் சிறப்பு | 56, 59 |
| வெற்றிச் சிறப்பு, கொடைச்சிறப்பு | 57, 60 |
| செல்வமும் கொடையும் | 58 |

**ஏழாம் பத்து**

பாடியவர் - கபிலர்

பாடப்பட்ட மன்னன் - செல்வக்கடுங்கோ வாழியாதன்

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| வெற்றிச் சிறப்பு, கொடைச்சிறப்பு | 61, 64, 66 |
| வெற்றிச் சிறப்பு | 62, 68 |
| பலகுணங்களை வாழ்த்துதல் | 63 |
| ஓலக்க வினோதத்தொடு செல்வச் சிறப்பு | 65 |
| கொடைச் சிறப்பு | 67 |
| ஆள்வினைச் சிறப்பு, குடி வரலாறு | 69 |
| வென்றிகூறிய திறத்தானே அவற்குள்ள சிறப்பு | 70 |

**எட்டாம் பத்து**

பாடியவர் - அரிசில்கிழார்

பாடப்பட்ட மன்னன் - தகடுரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| வெற்றிச் சிறப்பு, பகைவர்மேல் அருள் பிறப்பித்தல் | 71 |
| சூழ்ச்சியுடைமையும் வெற்றிச் சிறப்பும் | 72 |
| செல்வம், ஆண்மை, கைவண்மை, வெற்றிச் சிறப்பு | 73 |
| நல்லொழுக்கமும் நல்லறிவுடைமையும் | 74 |
| வெற்றிச் சிறப்பு | 75, 78 |
| வெற்றிச் சிறப்பு, கொடைச் சிறப்பு | 76, 80 |
| படைப்பெருமைச் சிறப்பு | 77 |
| பலகுணங்ளை வாழ்த்துதல் | 79 |

**ஒன்பதாம் பத்து**

பாடியவர் - பெருங்குன்றூர்க்கிழார்

பாடப்பட்ட மன்னன் - குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை

| பாடலின் சிறப்பு | சிறப்பிக்கப்பெற்ற பாடல் எண்கள் |
|---|---|
| காமவேட்கையிற் செல்லாத வெற்றி வேட்கைச் சிறப்பு | 81 |
| வெற்றிச் சிறப்பு | 82, 84 |
| படைச் சிறப்பு | 83 |
| முன்னோருடைய கொடைச் சிறப்போடு வெற்றிச் சிறப்பு | 85 |
| வன்மை மென்மைச் சிறப்பு | 86 |
| கொடைச் சிறப்பும் காமவின்பச் சிறப்பும் | 87 |
| நாடுகாவற் சிறப்பு | 89 |

| தண்ணளியும் பெருமையும் கொடையும் சுற்றந்தழாலும் உடன்கூறி வாழ்த்துதல் | 90 |
|---|---|

**இறுதிப் பத்து**

கிடைக்கப்பெறவில்லை.

## ஐங்குறுநூற்றில் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல்களின் விபரம்

மருதத்திணையில் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல் எண்கள்,

| (க) வேட்கைப் பத்து | 1, 2, 3, 4, 5, 6, 7, 9, 10. |
|---|---|
| (உ) வேழப்பத்து | 11, 12, 13, 14, 15, 16, 17, 18, 19, 20. |
| (ங) கள்வன் பத்து | 21, 22, 23, 24, 25, 26, 29, 30. |
| (ச) தோழிக்குரைத்த பத்து | பழையவுரை இல்லை |
| (ரு) புலவிப் பத்து | 41, 43, 44, 45, 46, 47. |
| (சு) தோழிக்குரைத்த பத்து | 55, 56, 57, 58. |
| (எ) கிழத்தி கூற்றுப்பத்து | பழையவுரை இல்லை |
| (அ) புனலாட்டுப் பத்து | பழையவுரை இல்லை |
| (கூ) புலவி விராயப் பத்து | 81, 82, 85, 86, 87, 88, 89. |

| (க0) எருமைப் பத்து | 91, 92, 94, 95, 96, 97, 98, 99,100. |
|---|---|

நெய்தல் திணையில் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல் எண்கள்,

| (கக) தாய்க்குரைத்த பத்து | 101, 103, 104, 105, 106. |
|---|---|
| (கஉ) தோழிக்குரைத்த பத்து | பழையவுரை இல்லை |
| (கங) கிழவற்குரைத்த பத்து | பழையவுரை இல்லை |
| (கச) பாணற்குரைத்த பத்து | 137. |
| (கரு) ஞாழற் பத்து | 142, 143, 144, 145, 146, 147, 148, 150. |
| (கசு) வெள்ளைக் குருகுப் பத்து | 151, 152, 153, 154, 155, 156, 157, 158, 159,160. |
| (கஎ) சிறுவெண் காக்கைப் பத்து | 161, 162, 163, 164, 165, 166, 167, 168, 169, 170. |

| | |
|---|---|
| (கஅ) தொண்டிப் பத்து | 171, 173, 176, 177, 178, 179, 180. |
| (ககூ) நெய்தற் பத்து | 181, 183, 184, 186, 187, 188, 189, 190. |
| (உ0) வளைப் பத்து | 192, 193, 195, 196, 198, 199. |

குறிஞ்சித் திணையில் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல் எண்கள்

| | |
|---|---|
| (உக) அன்னாய்வாழிப் பத்து | 208, 209, 210. |
| (உஉ) அன்னாய்ப் பத்து | 212, 213, 214, 215, 216, 217, 218, 219, 220. |
| (உங) அம்மவாழிப் பத்து | 221, 228. |
| (உச) தொய்யோப் பத்து | 233, 238, 239. |
| (உரு) வெறிப் பத்து | 242, 243, 245, 246, 248. |
| (உசா) குன்றக் குரவன் பத்து | 251, 252, 253, 260. |
| (உஎ) கேழற் பத்து | 261, 262, 263, 264, 265, 266, 267, 268, 269, 270. |

| (உஅ) குரக்குப் பத்து | 271, 272, 273, 274, 275, 276, 277, 278, 279, 280. |
|---|---|
| (உசு) கிள்ளைப் பத்து | 282, 283, 285, 286, 287, 290. |
| (௩௰) மஞ்ஞைப் பத்து | 292, 293, 294, 295, 296, 297, 298, 298, 299, 300. |

பாலைத்திணையில் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல் எண்கள்,

| (௩க) செலவழுங்குவித்த பத்து | 301, 304. |
|---|---|
| (௩உ) செலவுப் பத்து | 313, 315. |
| (௩௩) இடைச்சுரத்துப் பத்து | 321, 327. |
| (௩ச) தலைவியிரங்கு பத்து | 331, 334. |
| (௩ரு) இளவேனிற் பத்து | பழையவுரை இல்லை |
| (௩சு) வரவுரைத்த பத்து | 352, 355, 356, 357. |

| | |
|---|---|
| (௩எ) முன்னிலைப் பத்து | 366, 367, 368, 369,370 |
| (௩அ)மகட்போக்கிய வழித் தாயிரங்கிய பத்து | 373. |
| (௩௯)உடன்போக்கின் கண் இடைச்சுரத்து உரைத்த பத்து | பழையவுரை இல்லை |
| (௪0) மறுதரவுரைத்த பத்து | பழையவுரை இல்லை |

முல்லைத்திணையில் பழையவுரை இடம்பெற்றுள்ள பாடல் எண்கள்,

| | |
|---|---|
| (௪௧) செவிலி கூற்றுப் பத்து | பழையவுரை இல்லை |
| (௪உ)கிழவன் பருவம் பாராட்டும் பத்து | 412. |
| (௪௩) விரவுப் பத்து | 421, 423. |
| (௪௪) புறவணிப் பத்து | பழையவுரை இல்லை |

| (சரு) பாசறைப் பத்து | 441. |
|---|---|
| (சசு)பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து | 453, 455, 458. |
| (சஎ) தோழி வற்புறுத்த பத்து | 461, 465, 467, 469. |
| (சஅ)பாணன் பத்து | பழையவுரை இல்லை |
| (சகூ) தேர்வியங்கொண்ட பத்து | பழையவுரை இல்லை |
| (ரு)வரவுச் சிறப்புரைத்த பத்து | பழையவுரை இல்லை |

## ஐங்குறுநூற்றில் பழையவுரை இடம்பெறாத பாடல்களின் எண்கள்

8, 27, 28, 31, 32, 33, 34, 35, 36, 37, 38, 39, 40, 42, 48, 49, 50, 51, 52, 53, 54, 59, 60, 61, 62, 63, 64, 65, 66, 67, 68, 69, 70, 71, 72, 73, 74, 75, 76, 77, 78, 79, 80, 83, 84, 90, 93, 102, 107, 108, 109, 110, 111, 112, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 121, 122, 123, 124, 125, 126, 127, 128, 129, 130,

131, 132, 133, 134, 135, 136, 138, 139, 140, 141, 149, 172, 174, 175, 182, 185, 191, 194, 197, 200, 201, 202, 203, 204, 205, 206, 207, 211, 215, 222, 223, 224, 225, 226, 227, 229, 230, 231, 232, 234, 235, 236, 237, 240, 241, 244, 247, 249, 250, 254, 255, 256, 257, 258, 259, 281, 284, 288, 289, 291, 302, 303, 305, 306, 307, 308, 309, 310, 311, 312, 314, 316, 317, 318, 319, 320, 322, 323, 324, 325, 326, 328, 329, 330, 332, 333, 335, 336, 337, 338, 339, 340, 341, 342, 343, 344, 345, 346, 347, 348, 349, 350, 351, 353, 354, 358, 359, 360, 361, 362, 363, 364, 365, 371, 372, 374, 375, 376, 377, 378, 379, 380, 381, 382, 383, 384, 385, 386, 387, 388, 389, 390, 391, 392, 393, 394, 395, 396, 397, 398, 399, 400, 401, 402, 403, 404, 405, 406, 407, 408, 409, 410, 411, 413, 414, 415, 416, 417, 418, 419, 420, 422, 424, 425, 426, 427, 428, 429, 430, 431, 432, 432, 434, 435, 436, 437, 438, 439, 440, 442, 443, 444, 445, 446, 447, 448, 449, 450, 451, 452, 454, 456, 457, 459, 460, 462, 463, 464, 466, 468, 470, 471, 472, 473, 474, 475, 476, 477, 478, 479, 480, 481, 482, 483, 484, 485, 486, 487, 488, 489, 490, 491, 492, 493, 494, 495, 496, 497, 498, 499, 500. இப்பாடல்களின் மொத்த எண்ணிக்கை 301 ஆகும். இவற்றில் 129, 130 எண்ணுடைய இரண்டு பாடல்கள் எப்பிரதியிலும் காணப்படவில்லை.

# சங்க இலக்கியப் பழைய உரைகள் - போக்கும் திறனும்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**லெ.தீபா**
(பதிவு எண் : 0601)

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா


திசம்பர் - 2019

4. இரா.ஜெயபால்(உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், ப.78
5. மேலது, ப.155
6. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள், ப.78
7. இரா.ஜெயபால்(உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், ப.25
8. மேலது, ப.31
9. மேலது, ப.45
10. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.181
11. இரா.ஜெயபால்(உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், ப.258
12. மேலது, ப.236
13. மேலது, ப.188
14. மேலது, ப.218

## முடிவுரை

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கிற்கும் பழையவுரை காணப்படுகின்றது.

இவற்றுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு என்ற மூன்று நூல்களையும் பதிப்பித்தவர் உ.வே.சாமிநாதையர் ஆவார். அகநானூற்றைப் பதிப்பித்தவர் வே.இராஜகோபாலையங்கார். புறநானூற்றின் முதற்பதிப்பை 1894ஆம் ஆண்டும் பதிற்றுப்பத்தை 1904ஆம் ஆண்டும் ஐங்குறுநூற்றின் முதற்பதிப்பை 1903ஆம் ஆண்டும் உ.வே.சா., பதிப்பித்து வெளியிட்டார். அகநானூற்றின் முதற்பதிப்பை 1918ஆம் ஆண்டு இராசகோபாலையங்கார் வெளியிட்டார். இவை அனைத்தும் பழைய உரையுடன் கூடிய பதிப்புகள் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். புறத்திணை நூல்களான புறநானூறு 266 பாடல்களுக்கான பழைய உரையுடனும் பதிற்றுப்பத்து கிடைக்கப்பெற்ற எட்டுப்பத்துக்களுக்கான பழைய உரையுடனும் அகத்திணை நூல்களான ஐங்குறுநூறு 197 பாடல்களுக்கான பழைய உரையுடனும் அகநானூறு 90 பாடல்களுக்கான பழைய உரையுடனும் பதிப்பிக்கப்பெற்றுள்ளமையை அறிய முடிகிறது.

புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு நூல்களுக்கும் கிடைக்கப்பெற்றுள்ள பழையவுரைகளின் பதிப்பு முறையினையும் அவற்றின் தன்மைகளையும் நோக்கும்பொழுது சில பொதுத்தன்மைகளும் தனித்தன்மைகளும் காணப்படுகின்றன. பொதுத்தன்மைகளாக, புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு நூல்களின் பதிப்பு முறையியல் நூலின் முகப்புப் பக்கம், முகவுரை அமைப்பு, உரை குறித்த செய்திகள், மேற்கோள் நூல்கள், ஓலைச்சுவடிகளின் தன்மை, பாடியோர் பாடப்பட்டவர் குறிப்பு, பழையவுரை அமைப்பு, உரையின் காலம் ஆகியவை பழைய உரையாசிரியர்களின் பொதுவான உரை மரபுகளாகக் காணப்படுகின்றன.

9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்நெறி விளக்கம் எனும் நூலிலிருந்து ‘ஏவலிளையர் தாய்வயிறு கரிப்ப’ என்ற தொடரைப் புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் மேற்கோள் காட்டுகிறார். சிலப்பதிகார உரையில் பன்னிரெண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த அடியார்க்குநல்லார், ‘முந்நீர்’ என்ற சொல்லிற்குப் புறநானூற்றுப் பழையவுரையாசிரியரின் கருத்தினை எடுத்தாண்டுள்ளார். இவற்றிலிருந்து புறநானூற்றுப் பழையவுரையாசிரியர் ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என்பதும் பன்னிரெண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் என்பதும் தெளிவாகிறது. இவர் தொல்காப்பியம், கலித்தொகை, குறுந்தொகை, சீவகசிந்தாமணி, பெரும்பாணாற்றுப்படை ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள்

காட்டியுள்ளார் என்பதும் அயல்நாட்டவரான ஜி.யூ.போப் என்பவருக்குத் தமிழ் மீது விருப்பம் உண்டாகக் காரணமாக இருந்தது புறநானூறு என்பதும் இதனால் அறியலாகிறது.

பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் திருக்குறள், பதிற்றுப்பத்து, புறநானூறு, மதுரைக்காஞ்சி ஆகிய நூல்களில் இருந்து மேற்கோள் காட்டியுள்ளார். இரண்டாம் பத்து முதலாக ஒன்பதாம் பத்தை இறுதியாகக் கொண்ட எட்டுப் பத்துக்களின் பாடியோர் பாடப்பட்டோர் குறிப்புகள் காணப்படுகின்றன. இந்நூலின் உரை இன்றியமையாத இடங்களில் பதப்பொருளை இனிது விளக்கி ஆங்காங்கு சொல்நயம் பொருள்நயங்களைப் புலப்படுத்துவதாக அமைகிறது. துறை, வண்ணம், தூக்கு இவற்றை விளக்க வேண்டிய இடங்களில் விளக்கிச் செல்கிறது. பதினொன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த நேமிநாதம் என்னும் நூலிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளார் பழையவுரையாசிரியர். எனவே, இவருடைய காலம் நேமிநாத நூலாசிரியராகிய குணவீர பண்டிதருடைய காலத்திற்குப் பிற்பட்டகாலம் என்பதை அறிய முடிகிறது.

அகநானூற்று ஆராய்ச்சியின் வாயிலாக, மு.இராகவையங்கார் அளித்த அரிய ஆராய்ச்சியுரையைக் கொண்டு பாடினோர் வரலாறு, அரசர் முதலியோர் வரலாறு, ஆராய்ச்சிக் குறிப்பு, அபிதானக் குறிப்பு, பொருட்குறிப்பு முதலிய பலவற்றுடன் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டுள்ளார், வே.இராஜகோபாலையங்கார், என்பது நன்கு விளங்கும். இவ்வுரை எழுதிய பழையதோர் ஏட்டின்கண் கொல்லம் 460 என்று வரையப்பட்டிருந்தது கொண்டு இவ்வுரையாளர் இற்றைக்கு அறுநூற்று முப்பத்தெட்டு வருடங்கட்கு முற்பட்ட காலத்தவரென்பது மட்டிலறியலாவது நச்சினார்க்கினியர் காலம் கி.பி.14–ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகையால், இவ்வுரைகாரர் நச்சினார்க்கினியர்க்கு முந்தியவர் என்று கொள்ளலாகும் என்ற செய்தியை அகநானூற்றின் முகவுரைப்பகுதி வாயிலாக அறிய இயலுகிறது.

ஐங்குறுநூற்றுக்கு அமைந்த பழையவுரையில் **சசகூ**ஆம் பாடலுக்கு மேலுள்ளவற்றிற்குக் கையெழுத்துப் பிரதி காணப்படவில்லை. இடையிடையே சிலசில பாடல்களுக்குமில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஐங்குறுநூற்றின் 129, 130-ஆம் செய்யுட்கள் ஒரு பிரதியிலும் காணப்படவில்லை என்பதும் 419, 460-ஆம் செய்யுட்களின் இரண்டாம் அடிகளில் சீர்கள் குறைந்துள்ளமையும் இதன் வாயிலாகப் புலப்படுகிறது.

புறநானூற்றுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரையில் துறைகளை விளக்கியுரைத்தல், வழக்குச் சொற்கள், மரபுச் சொற்கள், பழஞ்செய்யுட்பகுதிகளை உரைநடையாக உரைத்தல், துறை விளக்கம் கூறுதல், பெறப்பட்டவை கூறுதல், மாறிக்கூட்டுதல், வரலாற்று உண்மைகளை விளக்குதல், இலக்கணக் குறிப்புச் சுட்டல் ஆகியவை பொதுத் தன்மைகளாகவும் இன்னாத குறிப்புகளை விளக்குதல், குறிப்பு மொழி, குறிப்புப்பொருள் விளக்குதல், பயன் நினைவுரைத்தல், துறைப்பொருத்தம் கூறுதல், அணிநயம் கூறுதல், உரைநயம் சுட்டல், அரிய கருத்துக்களை விளக்குதல் ஆகியவை தனித்தன்மைகளாகவும் காணப்படுகின்றன.

பதிற்றுப்பத்துப் பாடல்களில் எழுவாய் ஓரிடத்தில் அமைந்துள்ளது. அதன் பயனிலைகள் பாடல் முழுவதும் வெவ்வேறு அடிகளில் அமைந்துள்ளன. அவற்றைக் கொண்டுகூட்டி சொல்முடிவு பொருள் முடிபு கூறி முடித்துக் காட்டுகிறார், பழையவுரையாசிரியர். இத்தகைய உரைப்போக்கு பழைய உரையாசிரியரின் பொதுவான உரைமரபாக உள்ளது. இந்நூலின் ஒவ்வொரு பாடல்களிலும் அப்பாடல்களுக்கான முக்கியக்கரு தலைப்பாகக் காணப்படுகின்றது. அத்தலைப்புக்களை விளக்குவதில் பழையவுரையாசிரியரின் பங்கு பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைகின்றது. இது பதிற்றுப்பத்துப் பழைய உரையாசிரியரின் உரைத்திறனில் தனித்தன்மை பெற்று விளங்குகிறது.

பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியர் திருக்குறள், புறநானூறு, மதுரைக்காஞ்சி போன்ற நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுகின்றார். அவர் தாம் உரைகூறும் பாடலுடன் பொருந்தக்கூடிய செய்தி பிற பாடல்களில் காணப்பட்டால் அவற்றையும் அப்பகுதியில் எடுத்துக்கூறி விளக்குகின்றார். துறை, வண்ணம், தூக்கு ஆகியவை பாடல்களில் பொருந்தி வருவதைப் பழையவுரையாசிரியர் சுட்டிக் காட்டுகின்றார். பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பாடலிலும் அதன் பயன் சுட்டப்பெறுகின்றது. மன்னனின் போர்ச்சிறப்பு, நாடுகாத்தற் சிறப்பு, செல்வச் சிறப்பு, அவனது குணங்களின் சிறப்பு ஆகியவை சுட்டப்பெறுகின்றன. இவை பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியரின் தனித்தன்மையைப் புலப்படுத்தும் உரைப்போக்காகும். உரையின் இடையிடையே இலக்கணம் கூறி விளக்குதலும், தனக்கு அரிய சொற்களாகத் தோன்றுபவைகளுக்குச் சொற்பொருள் விளக்கம் தந்து விளக்கியுள்ளமையும் குறிப்பிடத்தக்கதாகும்.

பதிற்றுப்பத்துப் பழையவுரையில், ‘என்று உரைப்பாரும் உளர்’, ‘என்று கூறுவாரும் உளர்’ போன்ற பிற உரையாசிரியரின் உரைகளைச் சுட்டிக் காட்டுகின்றார், பழையவுரையாசிரியர். சிலஇடங்களில் பிற உரையாசிரியர்களின் உரையினை மறுத்தும் உரை கூறுவதையும் இயல்பாகக் கொண்டுள்ளார். இவர் சில பாடல்களுக்குத் தொடர் விளக்கம் தருகின்றார். இத்தகைய உரை அமைப்பு புறநானூறு, அகநானூறு ஆகிய நூல்களுக்கான பழையவுரையாசிரியரின் உரைகளிலும் காணப்படுகின்றது. இசை தொடர்பாகப் பாடல்களில் இடம்பெறும் சொற்களுக்குத் தரும் விளக்கங்கள் அவரின் இசைப்புலமையை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன. இது பதிற்றுப்பத்துப் பழையவுரையாசிரியரின் தனித்தன்மையைப் புலப்படுத்தும். பாடல்களில் பாட வேறுபாடு காணப்படும் பகுதிக்கு ஏற்ப வேறுரை எழுதுகிறார். பழையவுரையாசிரியர் உரை கூறிச் செல்லும்பொழுது தேவையான இடங்களில் பிற சொற்களை வருவித்துரைப்பது இயல்பாக அமைந்துள்ளது. இவர் சில இடங்களில் வழக்காற்றியல் சொற்களைப் பயன்படுத்தி உரை கூறுவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

ஐங்குறுநூற்றுக்கான பழையவுரை பொழிப்புரை கூறாமல், சில இடங்களில் திரிசொற்களின் பொருளைக்காட்டி, உள்ளுறை, இறைச்சி போன்றவற்றை விளக்குகிறது. பழையவுரையின் அமைப்பு, பழையவுரை இடம்பெற்ற பாடல்களின் எண்கள், பழையவுரை இடம்பெறாத பாடல்களின் எண்கள் ஆகியவை தனித்தனியே பிரித்தறியப்படுகின்றன. இந்நூலுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளில் விரிவான உரை, நடுநிலையான உரை, ஓரிரு வரியிலான உரை, வாக்கிய உரை, சிதைந்த உரை என்ற அமைப்பில் பழைய உரைப்போக்கு அமைவதை அறிய முடிகிறது.

ஐங்குறுநூற்றின் முதற்பாடலுக்கு விரிவான உரை கூறும் பழையவுரையாசிரியர் 458 ஆம் பாடலுக்கு ஒரு சொல்லில் உரை கூறுகின்ற இருவேறுபட்ட தன்மைகள் குறிப்பிடத்தக்கதாகும். உள்ளுறை, இறைச்சி குறித்தும் பழையவுரையாசிரியர் விளக்கியுள்ளார். தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலிலிருந்து மட்டும் இரண்டு மேற்கோள்கள் எடுத்தாளப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். பழையவுரையின் நான்கு பாடல்களில் ஐந்து இடங்களில் இலக்கணக் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. இலக்கண உத்திகள் மூலம் திணை வகுத்தலை விளக்கியுள்ளமை ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியரின் உரைமரபில் தனித்தன்மையாக விளங்குகிறது.

ஐங்குறுநூற்று நெய்தல் திணையின் பாடல்கள் சொல் வகையால் தொடர்ச்சி பெறுதலேயன்றி கிளவி வகையால் தொடர்ச்சி பெற்றுள்ளன என்பதும், பாடல்களின் சிறப்பினை எடுத்துரைக்கும் பயன் கூறுதல் பகுதியும் பழையவுரையாசிரியரின் உரைத்திறத்தை நன்கு விளக்கும். இவர் பாடல்களில் இடம்பெற்றுள்ள சொற்களுக்குச் சிறப்பு விளக்கம் தருகின்றார். வேறுபாடம் கூறுதலும் மற்றும் அத்தகைய பாடங்களுக்கு வேறு உரை கூறுதலும் பழையவுரையாசிரியரின் உரை மரபாக உள்ளது. இத்தகைய உரை அமைப்பு புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய நூல்களுக்கான பழையவுரைகளிலும் காணப்படுவதால், இது பழைய உரையாசிரியர்களின் பொதுவான உரைமரபாக இருந்தமையை அறிய முடிகிறது. கருத்துரைத்தல் என்னும் பகுதியில் ‘இதன் கருத்து’ என்று பாடலின் மையக் கருத்தினை விளக்கிச் செல்கிறார், ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியர். இத்தகைய உரைப்போக்கு பழைய உரையாசிரியரின் தனித்தன்மையைப் புலப்படுத்துகிறது.

அகநானூற்றின் தொகுப்பு முறை தனித்த முறையியலைக் கொண்டு விளங்குகின்றது. இந்நூலிற்குத் தொண்ணூறு பாடல்களுக்கான பழையவுரையில் உள்ளுறை, இறைச்சி குறித்த வரையறையும் விளக்கப்பெற்றுள்ளது. அகநானூற்றுப் பழையவுரையாசிரியரால் பாடலில் இடம்பெற்றுள்ள சொற்களுக்கு அகராதி அமைப்பில் நேரடியான பொருள் தரப்பட்டுள்ளது. ஒன்றிரண்டு சொற்களாலாகிய சிறிய தொடர்களுக்கு சிறப்பான முறையில் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. பாடல்களில் வெவ்வேறு அடிகளில் காணப்படும் சொற்களைத் தொடர்புபடுத்தி சொல்முடிபு, பொருள்முடிபு காணும் முறையைப் பழையவுரையாசிரியர்தம் உரையிடையே பயன்படுத்தியுள்ளார். இத்தகைய உரை அமைப்பு ஐங்குறுநூற்றுப் பழையவுரையாசிரியரின் உரைமரபாகவும் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இது அகநானூற்றுப் பழையவுரையாசிரியரின் உரைமரபில் பொதுத்தன்மையாக அமைகிறது. பிற நூற்கருத்தாக, தொல்காப்பியம் இடம்பெற்றுள்ளது. மரபுகள் என்பன மனித சமுதாயத்தின் ஒவ்வொரு செயலிலும் காணக்கிடப்பனவாகும். தமிழ் மக்கள் வீரமரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் நட்டு வழிபட்ட முறைகளும் தலைவியின் திருமணச் சடங்கு முறைகளும் மரபுகளாகப் பின்பற்றப்பட்ட விதம் குறித்தும் பழையவுரையாசிரியர் எடுத்துரைத்துள்ளமையை அறிய முடிகிறது.

அகநானூற்றுப் பழையவுரையின் வாயிலாகப் பழமரபுக் கதைகள், இலக்கணக் குறிப்புகள் ஆகியவற்றை அறிய இயலுகின்றது. பழையவுரையாசிரியர், பாடலில் இடம்பெற்றுள்ள ஊர்ப்பெயர்களைச் சுட்டியுள்ளார். இவர்தம் உரையிடையே வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். வடமொழிச் சொற்கள் புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு ஆகிய நூல்களுக்குக் கிடைக்கப்பெற்ற பழையவுரைகளில் உரையாசிரியர்கள் பயன்படுத்தப்பெறவில்லை. பாடல்களில் இடம்பெற்றுள்ள இசைக்குறிப்புகளுக்கு சில இடங்களில் விளக்கியும், பல்வேறு இடங்களில் நுட்பமாகப் பொருள் கூறியும் செல்கின்றார். பாந்தட்படார் என்பது பாம்புச் செடியினைக் குறிக்கும் என்ற இயற்கை சார்ந்த சொற்களுக்குப் பழையவுரையாசிரியர் தரும் விளக்கங்கள் குறிப்பிடத்தக்கவையாகும். இதன் வாயிலாக, அகநானூற்றுப் பழையவுரையாசிரியரின் உரைமரபின் தனித்தன்மையை அறிய இயலுகிறது.

**மேலாய்வுக் களங்கள்**

1. நடையியல் நோக்கில் சங்க இலக்கியப் பழைய உரைகள்
2. சங்க இலக்கிய தற்கால உரைகளில் பழைய உரைகளின் தாக்கம்